ஏ. [illegible]

கழக வெளியீடு—௯௦௩௧

பதினெண்கீழ்க் கணக்கு

# இன்னிலை, கைந்நிலை

ஏ. பி. [illegible]

பண்டித வித்துவான்
தி சங்குப் புலவரவர்கள்
விளக்க வுரையுடன்

திருநெல்வேலித் தென்னிந்திய
சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட்
திருநெல்வேலி-6. சென்னை-1.
1961

திருமலைவேற்கவிராயர் சங்குப்புலவர் (1893)
THE SOUTH INDIA SAIVA SIDDHANTA WORKS

PUBLISHING SOCIETY, TINNEVELLY, LTD.
ED 1 March 1961

031, IC67
KI
INNILAI, KAINILAI

MEALA PRINTERS, MADRAS—1. C, 1100.

## பதிப்புரை

செந்தமிழ் மொழி நூல்கள் ஒவ்வொன்றையும் தேடி யெடுத்து நன் முறையில் ஆய்ந்துபிழையின்றித் தெளிவாக விளங்குமாறு நல்லுரை வரைந்து புதுமையாக அச்சிற் பித்து வெளியிட வேண்டும் என்பதே கழகத்தின் நோக்க மாகும். இதுகாறும் எட்டுத்தொகை பததுப் பாட்டு முத லிய சங்கத் தமிழ் நூல்கள், சீவக சிந்தாமணி, பெருங் கதை முதலிய புராணங்கள் கழகவாயிலாக வெளிவந்தவற்றைக் கண்டார்க்கு இவ்வுண்மை புலனாகும். அம்முறையிற் பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் ஒவ்வொன்றும் நல்லு ரையுடன் வெளிவந்துலவுகின்றன. பதினேழு நூல்களை காண்பீர்கள் ; பதினெட்டாவது நூல் இன்னது எனத் துணிவின்றிப் புலவருலகம் மயங்குகிறது. "நாலடி நான்மணி" என்ற வெண்பாவின் பாடவேறுபாடு இம் மயக்கத்திற்குக் காரணமாம். இதனை இந்நூலின் முன்

னுரையிற் காண்க. துணிவாக ஒன்றைத தேர்ந்தெடுதத பின்னர் உரையெழுதி வெளியிடக் கருதிக் காலந் தாழ்த திருந்தும் பயனின்றாய் முடிந்தது. இன்னிலையும், கைந்நிலையும், பதினெட்டாம் நூல் எனப் புலவருலகம் எண்ண ஏட்டிலிருந்து கொண்டுவந்து காட்டிப் பதிதது வெளியிட்டனர் இருசான்றோர். எதனைக் கொள்ளுவது எதனைத தள்ளுவது என மயங்கி நிற்கும் காலம் இது.

இவ்வமையத்தில் இவ்விரு நூல்களையும் ஆய்ந்து உரையெழுதுவித்துப் பதித்து வெளியிடின் புலவர் பலரும் இரண்டின் வரலாறு, அருமை, பெருமை. சொல்லின்பம், பொருளின்பம் கண்டு இது சிறந்தது அது சிறந்தது என ஆராய்ந்தறிந்து ஒன்றைத் தேர்ந்து பதினெண் கீழ்க



கணக்கின் பாற்படுத்துவதற்குத் தகுதியாம். அதன்பின் இவ்விரு நூல்களும் தனித்தனியாகப் பதிக்கவும் வாய்ப்பாகும். இருநூற்கும் ஒருவரே உரை வரைந்தால்தான் நூலின் உயர்வு தாழ்வு காண்பார்க்குத் தெற்றென விளங்கும். இன்னோரன்ன கருத்துக்களை யுட்கொண்டு கழகம் வெளியிடக் கருதிற்று. கழகப் புலவர்களில் ஒருவரான பண்டித வித்துவான் தி. சங்குப் புலவரால் உரை வரைவித்துப் புதுமுறையிற் பதிப்பித்து வெளியிடுகின்றனம். இவ்விரு நூல்களில் உள்ள கவிகள் ஒவ்வொன்றும் எளிதிற் பொருள் காண வியலாதவை. கொண்டு கூட்டிப் பொருள் காணும் இயல்புடையன. செந்தமிழ்ப் பற்றுள்ள செல்

வர் எவர்க்கும் இவை புது விருந்தாம். கழகத்தின் வாயி லாக இருநூல்களும் இப்போது தான் வெளியேறு

தமிழ் நாட்டுச் செல்வர்களும் தாய் மொழிப் பற்று டைய அறிஞர் பலரும் இந் நூல்களை வாங்கிக் கற்றுப் பண்டைக்கால வழக்கம் ஒழுக்கம் அறிந்து நல்வாழ்வு பெற விழைகின்றனம்.

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.

## முன்னுரை

அமிழ்தினும் இனிய நம் தமிழ் மொழி யிலக்கியங் களிற் சிறந்தன சங்ககால இலக்கியங்கள் எனச் சாற்று வர் புலவர். அவை பத்துப்பாட்டு, எட்டுத்தொகை பதினெண் கீழ்க் கணக்கு எனப்பெயர்பெறும். பத்துப்பாட்டு இன்ன இன்ன என அறிவதற்கு "முருகு பொருநாறு" என்ற வெண்பாத துணை புரிகின்றது. எட்டுத்தொகை நூல்களை "நற்றிணை நல்ல" என்ற வெண்பா எடுததுக் காட்டுகின்றது. அவ் வெண்பாக்களிற் கூறிய முறைப்படியே தொகுக்கப் பட்டுப் பின்னர் அச்சிற் பதிக்கப்பட்டு அவைகள் உலவு கின்றன. பண்டைக்காலப் பாவலர் பாடிய பாக்கள் தாம் எனத் துணிவதற்கு அந் நூல்களிலுள்ள கவி ஒவ் வொன்றும் சான்றாம். கற்றுவல்ல சான்றோர் அவற்றில் ஒன்றையேனும் பழங்காலத்தது அன்று எனப் பகர்வாரி

லர். பதினெண் கீழ்க்கணக்கு நூல்கள் முழுவதும் அவ்வாறு தெளிவுறப் பதிந்து வெளிவந்தில, வந்தவை சில அக்காலத்தின வல்லவெனத் துணிவதற்கு அவ்வந் நூற்கவிகள் சான்றாய்த் தோன்றாநின்றன. திருக்குறள், நாலடியார், நான்மணிக்கடிகை, கார்நாற்பது, களவழி நாற்பது, ஐந்திணையைம்பது, திணைமொழியைம்பது, ஐந் திணையெழுபது, திணைமாலை நூற்றைம்பது, பழமொழி நானூறு ஆகிய நூற்கவிகள் பண்டைக் காலத்தன வென னலாம். கற்றோர்க்குக கருத்து வேறுபாடு தோன்றாது. மற்றை நூற்கவிகளை நோக்கின் ஐயமே உள்ளதநி லெழும். துணிவு பிறவாது. இது நிற்க. பதினெண் கீழ்க் கணக்கு நூல்களின் எண்ணு முறையுங் காட்டும் ஒரு வெண்பாவும் இதுகாறும் ஐயத்திற்கிடமாகவே உள்ளது.

“நாலடி நான் மணி நானாற்ப தைந்திணைமுப், பால் கடுகங்



கோவை பழமொழி-மாமூலம், இன்னிலை காஞ்சியுட னேலாதி யென்பவே; கைந்நிலைய வாங்கீழ்க் கணக்கு.”

இது பதினெட்டு நூல்களையும் காட்டுமாறு ஒரு புலவராற் பாடப்பட்டது எனத தெரிகிறது. பாட வேறுபாடு பல. வேண்டிய வேறுபாடு ஒன்றை மட்டும் காட்டுகின்றேன். “இன்னிலைய காஞ்சியுடனேலாதி யென்பதூஉம், கைந் நிலையு மாங்கீழ்க் கணகது” என்பது இவ்வேறு பாட்டில்

ஒன்று. முன்னது "இன்னிலை" ஒரு நூலாகக் காட்டுகின்றது. பின்னது "கைந்நிலை" ஒரு நூலாகக் காட்டுகின்றது. இன்னிலையை நூலாகக் கொண்டால் கைந்நிலை மறைந்து "ஒழுக்க நிலையனவாம்" கீழ்க்கணககு என அடைமொழியாகின்றது. கைந்நிலையை நூலாகக் கொண்டால் இன்னிலை மறைந்து "இனிய நிலைமையாகிய காஞ்சி என அடைமொழியாகின்றது. பதினெட்டாவது நூல் இன்னிலையா? கைந்நிலையா? என்ற ஐயம் எவர்க்கும் தோன்றுகின்றது. "இன்னிலை" உள்ளது என்று பலர் கூறினர். கைந்நிலை உள்ளது ஒன்று பலர் கூறினர். ஏட்டிலுள்ளது என முன்னர்க் கூறியவர்கட்கு எடுத்துக் காட்டுபவர் போல "இன்னிலை" என்ற நூலை திரு வ. உ. சிதம்பரம் பிள்ளை அவர்கள் அச்சிற பதித்தனர். "கைந்நிலை" எனற நூலை ஆசிரியர் திரு. அனந்தராமையர் அவர்கள் பதிததனர். அவறறின் வரலாறு சிறிது காண்க.

## இன்னிலை வரலாறு

"திரு. பொய்கையார் இன்னிலை. திரு வ. உ, சிதம்பரம் பிள்ளையவர்கள் விருத்தியுரையுடன் தில்லையாடி த. வேதியப் பிள்ளையால் பதிப்பிக்கப் பெற்றது. இரண்டாம் பதிப்பு. அம்பா சமுததிரம் அகஸ்தியர் அச்சுக்

கூடம் விபவ வருஷம்" என்று முன்பக்கம் எழுதப்பட்டுள்ளது. இப்புத்தகத்தில் "முன்னுரை" "ஆசிரியர்".



"உரைப்பாயிரம்," "இரண்டாம் பதிப்புரை" ஆகிய நான்கும் வ. உ. சி அவர்களே வரைந்திருக்கின்றனர். பதினெண் கீழ்க் கணக்கில் ஒன்று "இன்னிலை" தான் என்பதற்கும் அதனை இயற்றியவர் பொய்கையார் என்பதற்கும் இது சிறந்த நூல் என்பதற்கும் பல காரணங் காட்டி விளக்குகிறார். இந்நூல் அவர்கள் கைக்குக் கிடைத்த விதம் அப் புத்தகத்தில் உள்ளபடி இங்கு வரைகின்றேன் அறிக.

## இன்னிலை

'ஆசிரியர்' என்ற தலைப்பில் உள்ளது இது.

"இந்நூலினது ஏட்டுப் பிரதியின் முதல் ஏட்டுத் தொடக்கத்தில் மதுரையாசிரியரால் தொகுக்கப்பட்ட இன்னிலை நாற்பத்தைந்து நன்றாக என்னும் சொற்களும், அம் முதலேட்டின் முடிவில் திருமேனிக் கவிராயன் எழுதி வரும் இன்னிலை நாற்பத்தைந்து நன்றாக என்னுஞ் சொற்களும், அவ்வேட்டுப் பிரதியின் கடைசி ஏட்டு முடிவில் பொய்கையார் பாடிய இன்னிலை முற்றிற்று என்னும் சொற்களும், எழுதப்பட்டுள்ளன. இந்நூலின் ஏட்டுப் பிரதியை எழுதிய திருமேனி இரத்தினக் கவிராயரவர்கள் செந்தமிழ்ப்

புலமையும் சீரிய ஒழுககமும தெய்வ பக்தியுஞ் சிறந்து விளங்கியவர்கள். இந்நூலின் ஏட்டுப் பிரதியை அளித்த ஸ்ரீமான் மலையையாப் பிள்ளையவர்கள் அக்கவி ராயரவர்களின் ஏடுகளை யெல்லாம் போற்றி வைத்திருக்கும் அவர்களுடைய சந்ததியார்களின் தலைவராய் விளங்கியவர்கள். பொய்கையார் என்பவர் இன்னிலை என்னும் நூலை இயற்றிற்றிலர் என்றாவது, அந்நூலை வேறு யாரேனும் இயற்றினரென்றாவது நாம் கேள்விப்படவில்லை. ஆதலால் இன்னிலை என்பது இந்நூலே என்றும் இந்நூலை இயற்றியவர் பொய்கையாரே யென்றும் நாம் கொள்ளலாம்'' என்பது.



இன்னிலை முதலிற் பதித்ததும் இரண்டாவது பதித்ததும் வ.உ.சி அவர்களே என்பதும், ஏட்டுப் பிரதியும் ஒன்றே என்பதும், அது மலையையாப் பிள்ளையவர்கள் அளித்தனர் என்பதும், மதுரையாசிரியரால் தொகுக்கப் பட்ட இன்னிலை நாற்பத்தைந்து, திருமேனிக் கவிராயன் எழுதி வரும் இன்னிலை நாற்பத்தைந்து, பொய்கையார் பாடிய இன்னிலை முற்றிற்று என அவ்வேட்டின் முதலிலும் முடிவிலும் எழுதப்பட்டிருந்தன என்பதும் நாம் அறிகின்றோம். உரையாசிரியர்களில் இன்னோர், இந்நூற் கவிகளை மேற்கோள் காட்டி, இன்னிலையில் உள்ளது என்று குறிப்புக் காட்டியுள்ளனர், என்பதற்கு ஆதா

ரம் ஒன்று மின்று, வ. உ. சி அவர்களும் சான்று காட்டி னரல்லர். உரையாசிரியர் சிலர் மேற்கோளாக இன்னிலை யிலுள்ள கவிகளை எடுத்தாண்டனர் என்று வ. உ. சி. அவர்கள் கூறியதை ஆராய்ந்தால் வியப்பு விளைகின்றது. தொல்காப்பியம், பொருளதிகாரம், களவியல், 23 ஆம் சூத்திரம் இளம்பூரணருரை, கற்பியல், 5 ஆம் சூத்திர வுரை 12 ஆம் சூத்திரவுரை ஆகிய இடங்களைச் சுட்டி இன்னிலை நூலில் 2, 37, 29, 32, 35 எண்ணுடைய ஐந்து பாடல்களும் வந்துள்ளன என விளக்கினர். இளம்பூர ணத்தைநோக்க அவற்றுள் ஒன்றேனும் வந்திலது. முந்தின பதிப்புக்களில் இருந்து பின்னர் அவை விடுபட்டனவோ என ஐயுறும் நிலையிலுள்ளது. தொல்காப்பியம் செய்யு ளியல் 113 ஆம் சூத்திரம் பேராசிரியருரையில் அவர்கள் கூறியவாறே இன்னிலை 5 ஆம் செய்யுள் மேற் கோளாக வந்துள்ளது. யாப்பருங்கலவிருத்தி யுரையாசிரியரும் இன்னிலை 2 ஆம் செய்யுளை மேற்கோளாகக் காட்டியுள் ளார். ஆயினும் அக்கவிகள் இன்னிலை என்ற நூற் கவி கள் தாம் என்பதற்குச் சான்று தோன்றும் வகை ஆங் கில்லை. பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்றாக



இன்னிலை வந்த வழி இந்த வழி என்றுணர்க. இனிக் கைந் நிலை வந்த வழி காண்போம்.

# கைந்நிலை வரலாறு

கைந்நிலை என்ற நூல் 1931 ஆம் ஆண்டு பேராசிரியர் திரு. அனந்தராம ஐயர் அவர்களால் முதலில் அச்சியற்றி வெளிவந்ததாகத் தெரிகிறது. அவர்கள் முகவுரையில் "இந்நூற் பிரதி யொன்று எனக்குச் சிறிது காலத்திற்கு முன் கிடைத்தது. அது முதலிலும் சில பகுதியின்றியும், இருக்கும் செய்யுட்களிலும் சில பகுதி சிதைந்து பிழை விரவியும் இருந்தது. முன்பு வேறு சிலரிடத்திலிருந்த இந் நூல் ஏட்டுப பிரதிகளைப் பார்த்திருக்கிறேன். அவையும் இதனைப் போலவே முதலிலும் இடையிலும் சில ஏடின்றி யும் சிதைந்து பிழைபட்டுமே இருந்தன. அதனைப் பதித்து முற்றுப்பெறுங காலதது இராமநாதபுரம் சேது சமஸ் தான விததுவான் உ. வே. ரா. இராகவையங் காரவாகள் சென்னைக்கு வந்திருந்தார்கள் அவர்களிடம் இந்நூற பிரதி யிருப்பதை யறிந்து கேட்டு வாங்கிப் பார்தது அவ் வேட்டிலுள்ள படியே பதிப்பிததேன" என்று விளக்க மாக வரைந்திருக்கின்றனர்.

கைந்நிலை நூற்பதிப்பு முகவுரையில் "இந்நூல் சங்க மருவிய பதினெண் கீழ்க் கணக்கினுள் ஒன்று. அகப் பொருளையே விஷயமாகக கொண்டுள்ளது. மாறோகத்து முள்ளி நாட்டு நல்லூர்க்காவிதியார் மகனார் புல்லாங் காடனாரால் ஒவ்வொரு திணைக்குப் பன்னிரண்டாக ஐந் திணைக்கும் இயறறப்பட்ட அறுபது வெண்பாக்களையு டையது. பண்டை யுரையாசிரியர்களாற சிறசில இடதது

மேற்கோளாகக் காட்டப் பெற்ற பெருமை வாய்ந்தது" என்று குறித்துள்ளார் ஆசிரியர். இ.வை. அனந்தராமையரவர்கள். மூலமும் பழைய வுரையும் அந்நூலில்
Xr' இன்னிலை,. கைந்நிலை

தோன்றுகின்றது. 6 எண்ணுள்ள "மரையாவுக்ளும்" என்ற கவியும் 7 எண்ணுள்ள "கல்வரையேறி" என்ற கவியும், 59 எ்ண்ணுள்ள "தாழைகுருகீனும் என்ற கவியும் தொல்காப்பியம் இளம்பூரணத்தில் இன்ன இன்ன துறைகசகு மேற்கோளாகக் காட்டப்பட்டன என்று பழையவுரை காட்டுகிறது. அதன்படியே ஆராய்ந்தால் ஆங்கு ஆங்கு அவைகள் மேற்கோளாகக்காட்டப்பட்டுள்ளன. நச்சினார்க்கினியத்திலும் ஒன்று மேற்கோள் காட்டப் பட்ட தாகவும் நம்பியகப் பொருளில் இரண்டடி மட்டும் மேறகோளாகக் காட்டப்பட்டதாகவும் பழையவுரை கூறுகிறது. அதன்படியே யமைந்திருக்கக் காண்கின்றோம். பழையவுரை பொழிப்புரையாகவும் சில பாடல்கட்கே யுள்ளனவாகவும் தெரிகிறது. துறையும் சில பாடல் கட்கே வகுத்திருப்பதாகத தோன்றுகிறது. கைந்நிலை நூல் வரலாறு இதுவே.

இன்னிலை, கைந்நிலை என்ற இரு நூல்களிற்பதினெண் கீழ்க கணககின் இறுதியாக நிறகததக்க நூலைத் தேர்ந் தெடுத்துக கொள்வது இனித தமிழ்மொழிப் புலவர் கடமையாம்; இவ்விரு நூலகளுககும் விளக்கவுரை வரைவித்து அச்சிற்பதிதது வெளியிடுவது நம் கடமையாம்

எனக் கழகததார் கருதினர். இவ்விரு நூல்களுக்கும் உரையெழுதும் கடமை எனக்குரியதாயிற்று. கழகப் பணியாளர்களில் ஒருவனுதலின் மறுத்தறகு வழியின்றி ஏற்று என் சிறறறிவிற் கெட்டியவாறு உரை வரைந்து தந்தேன்.

## இன்னிலையுரை

இன்னிலையிலுள்ள வெண்பாக்களில் ஆற்றெழுக்குப் பொருள்கோள்மைந்த கவிகாண்டலருமையினும் அருமை, "ஒத்தவுரிமையளா" என்ற முதற்குறிப்புடைய (32 எண்)

## முன்னுரை

கவியொன்றே கொண்டு கூட்டி யிடர்ப்பா டின்றிப் பொருள் காணும் இயல்பு வாய்ந்தது. வ. உ. சி. அவர்கள் இந்நூலிறகு விருத்தியுரை வரைந்த அருமையும் பெருமையும் புலவரனைவரும் போற்றத் தகுந்த தொன்றும் "உரை யெழுதி தி. செல்வக்கேசவராய முதலியார் அவர்களிடம் காட்டினேன் என்றும், அவ் வுரையைப் பார்த்துக் குற்றங்களைந்து குறைபெய்து தந்ததோடு வேறு சில பண்டிதர்களிடம் காட்டும்படி கட்டளையிட்டனர் என்றும், பின் த. கனகசுந்தரம் பிள்ளையவர்களிடம் காட்டினேன் என்றும், அவர்கள் முழுக் கவனததோடு பார்ததுப் பல சீர்திருததஙகள் செய்து தந்தனர் என

றும்'' உரைப்பாயிரததில் வ. உ. சி அவர்கள் வரைந்திருப் பது உரை கண்ட பெரு முயறசியையும் அதன் அருமை பெருமையையும நன்கு விளககும், அவ்வுரையின்றெ னில் ஒரு கவிக்கேனும் எளிதிற் பொருள் காண இய லாது என்பது திண்ணம். எத்துணையோ நாட்கள் முயன்று உரைகண்டிருப்பர் போலும்.

கடவுள் வாழ்ததுச் செய்யுள் ஒன்று மட்டும் நேரி சையகவல் ஆக னினறது. இக்கவி இயறறியவர் ''பாரதம் பாடிய பெருந்தேவனார்'' என வ. உ. சி அவர்கள் குறிதத தனால் அறிகின்றோம். ''வேலற்றரீஇய விரிசடைப் பெம் மான், வாலிழைபாகததமரிய கொழுவேற, கூற்றங்கதழ்ந் தெறி கொனறையன், கூட்டா வுலகங் கெழீய மலிந்தே" என்பது கடவுள் வாழ்ததுப்பா. இதற்கு இறுதியடியை மட்டும்''கூட்டா உலகம் மலிந்து கெழீஇய'' என்று கொண்டு கூட்டிப் பொருளுரைக்கப்பட்டது முன்னுரை (வ. உ. சி. உரை )யில். பின்னுரையாகிய என்னுரையில் வேலற்றரீஇய....பெம்மான், கொழு வேற்கூற்றம்கதழ்ந்து எறி கொன்றையன், பாகத்து வாலிழை அமரிய கூட் டா உலகம் மலிந்து கெழீஇய என்று கொண்டு கூட்டப்-

பட்டது. "அமரிய" என்ற மொழியை "அமர்ந்த" என்று பெயரெச்சமாகப் பொருள் கூறினர் முன்னவர். "அம ரிய" செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக் கொண்டு அமர எனப் பொருள் கொள்ளப்பட்டது. பெம்மான் கொன்றையன் பாகத்து வாலிழையமர அத னுல் துணையாக எல்லாவுலகங்களும் பெருகி விளங்கின எனச் சைவசித்தாந்தத்திற்குதகக விளக்கி யிருப்பது காண்க. 7, 19, 24 எண்ணுள்ள கவிகள் ஐந்துசீர் வந்த அடியுடையனவாயிருந்தன திருவள்ளுவர்காலமுதல் ஐந்து சீரடிவந்த வெண்பா நூல்கள் ஒன்றும் இன்று என்பது புலவரனைவரும் கண்ட வுண்மையாம். ஆதலால் அவ்வடி களை நாறசீரடியாகக கொண்டு பொருள் கூறல் நலம பயக்கும் எனக் கருதிச் சிறு மாறுதல் செய்யப்பட்டது. 7 ஆம் கவியின் இரண்டாம் அடி "நாமீட் டொறுக கொணு ஞாங்க ரடிப்பட்ட ம்பால்" என்றிருந்தது. நாமீட் டொறுக்கொணு ஞாங்கரடித் தீம்பால் எனவும், 19 ஆம் கவியுள் மூனரும் அடி "யாம்வெறுக்கை யின்றி யமையாதா மஃதிலார் மையாவி" என்றிருந்தது. "யாம் வெறுக்கை யின்றி யமையாரா மையாவி" எனவும் 24 ஆம் கவியின் முதலடி "அழுககுடம்புச் சிழ்நீரான் யாத்தசிர் மெல்லியலை யாண" என்றிருந்தது. அழுக்குடம்பு

யாத்தசீர் மெல்லியலை யாண" எனவும் மாறறப்பட்டன. பொருள் வேறுபடாவாறு நாற்சீரடியாய்க் கொண்ட மாறுதலைப் புலவருலகம் வெறுதெனத் துணிந்தேன். ஐந்து சீரடிப் பொருளை நாற்சீரடி தரும் பான்மையை உய்த்துணர்ந்தறிக. 12 ஆம் வேறுபடும் என்ற வில்பா செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று பலர்பாற் படர்க்கைக்குப் பயனிலையாய் நிற்கின்றது. 14ஆம் பாவி னும் "ஆரும்" என்னும் செய்யும் என் வாய்பாட்டு வினைமுற்று "வெறுக்கையிலார்" என்னும் எழுவாய்க்குப் பயனிலையாய் நிற்கின்றது. அவை யிரண்டிற்கும் வேறு



வகையாகப் பொருள் காண முயன்றும் முடியாது விடுத் தேன். கண்டோர் கூறின் அடுத்த பதிப்பின் வெளிப் படுத்த முயல்வேன். சிற்சில இடங்களில் வ. உ. சி. அவர் கள் விளக்கத்திற்கும் கருத்துக்கும் மாறு பட்டிருப்பி னும் இலக்கண மாறுபாடின்றி உரை வரையப்பட்ட தென எண்ணுக.

"இந்நூல், அறப்பால், பொருட்பால், இன்பப்பால் வீட்டுப்பால் என நான்கு பகுதிகளாகவும், அவற்றில் வீட்டுப்பால் "இல்லியல்" துறவியல் என இரண்டியல் களாகவும் வகுக்கப்பட்டுள்ளன. அறப்பால் பத்து வெண்பாக்களையும், பொருட்பால் ஒன்பது வெண்பாக் களையும், இன்பப்பால் பன்னிரண்டு வெண்பாக்களையும்,

விட்டுப்பால் (இல்லியல் எட்டு வெண்பாவும், துறவியல் ஆறு வெண்பாவுமாக) பதினான்கு வெண்பாக்களையும், கொண்டுள்ளன" என்பது வ. உ. சி அவர்கள் முன்னுரை. அவ்வாறே பால் இயல்கள் பகுக்கப்பட்டுள்ளன. என்னாலியற்றப்பட்டவுரை இக்காலத்துக்கேற்ற எளிய நடையாம். வ. உ. சி. அவர்கள் விருத்தியுரை வரைந்து பல சங்க நூல்களிலிருந்து மேற்கோள் பல காட்டிக் கருத்துக்களை விளக்கி யிருக்கின்றனர். அத்துணை விளக்கம் வேண்டுவதின்று இந்நூலுக்கு என்று கழகத்தார் கருத்திருக்கும் குறிப்பறிந்து அதற்கியைந்தவாறு வரையப்பட்டதென வுணர்க.

## கைந்நிலையுரை

கைந்நிலை என்ற நூலுக்குப் பழைய வுரையொன்று இருந்ததாகத் தெரிகிறது. அனந்தராம ஐயரவர்கள் 1931 ஆம் ஆண்டில் பதிக்கப்பட்ட புத்தகத்தில் 60 பாடல்கள் காணப்படுகின்றன, குறிஞ்சியில் 12, பாலையில் 7; முல்லையில் 3, மருதத்தில் 11, நெய்தலில் 12 ஆகிய 45 பாடல்கள்



முழு வடிவம் உள்ளன, மற்றவை உரு அறியப்படாத சிதைந்த வடிவுடையன. செல்லரித்த ஏட்டில் உள்ளபடி பதிக்கப் பட்டதெனத் தோன்றுகிறது. அக்கவிகளின் காட்சி, முதல் தெரிவன சில, இறுதி தெரிவன சில, இடை தெரிவன சில, அடி முழுவதும் தெரிவன சில, அடியிற் பாதி தெரிவன சில; சீர் ஒன்று தெரிவன சில, இரு

சீர் தெரிவன சில, முழுச்சீர் தெரிவன சில இவ்வாறு பல வேறுபாடுடையன. இவற்றை அவர்கள் பதித்த படியே எழுதி அவ்வடிவிற் காணப்படுஞ் சொற்களுக்கு மட்டும் பொருள் வரைந்தேன். பழைய வுரையாக அப் பதிப்பிற காணப்படுவன பொழிப்புரையே. விளக்கமும் உள்ளுறையும் இல்லை. அவ்வுரையும் 18, 19, 20, 21, 22, 23, 24, கவி 35, 36, 37, 38, 39, 40, 41, 42, 43, 54, 55, 58, 59, 60 ஆகிய 21 கவிகட்கே யமைந்திருக்கின்றன, மற்றவை கட்கு உரை இதுவரை யாரும் எழுதி வெளியிட்டதாகவும் தெரியவில்லை. வேறு இலக்கியங்களில் மேற்கோள் காட்டப்பட்டு ஆசிரியர்களால் பொருள் விளக்கங் காட்டப் பட்ட கவிகளாகவும் இல்லை. ஆதலால் வருந்தி யுரை காண வேண்டிய நிலைமை ஏற்பட்டது. என்றால் இயன்ற வரை துறை கண்டு சொற்பொருள் தந்து விளக்கங் காட்டி இலக்கணக் குறிப்புங் காட்டி யாவர்க்கும் பொருள் எளிதில் புலப்படுமாறு விரித்துரை வகுத்தேன். பாட வேறுபாடு மிகுதியில்லை. அதில் உள்ள சொற்களைக் கொண்டே பொருள் விளக்குவது இடர்ப்பட்ட செயலாக இருந்தது. ஆயினும் என் சிற்றறிவிற் கெட்டியவரை கண்டு வரைந்தேன். கற்றுவல்ல சான்றோர் இக்கவிக்குப் பொருள் இது வன்று, இது சிறப்பில்லாப் பொருள். இது தான் சிறந்த பொருள் என எடுத்துக் காட்டின் அதனை யாய்ந்து மறுமுறை பதிக்குமாறு கழகத்தாரை

வேண்டுகின்றேன். பழையவுரை நான் பார்த்ததேயன்றி அப்பொழிப்பின்படி சொற்பொருள் வரைந்திலேன்



விளக்கம் உள்ளுறை, குறிப்பு, இவையனைத்தும் யான் ஆய்ந்து எழுதியவையே எனக் கண்டுணர்க.

நெடுங் கடற் றண்சேர்ப்ப நின்னோடுரையேன்
ஒடுங்கு மடற் பெண்ணை யன்றிற்குஞ் சொல்லேன்
கடுஞ்சூளிற் குன்கண்டு கானலுண் மேயும்
தடந்தாண் மட நாராய் கேள்.

இது 50 ஆம் பாடல்

இதற்கு உரை வரையத் தொடங்கினேன் "சேர்ப்ப" என்பதை நெய்தனிலத் தலைவனை விளித்ததாகக் கொள்ளின் மடநாராய் என்ற விளிக்குப் பொருள் என்னை? தலைவி தலைவனைப் பிரிந்திருந்து தானே யிரங்குவள். தலைவனை முன்னிலைப் படுத்தி யழைத்து நாரையையும் முன்னிலைப படுத்தி எவ்வாறு இரங்குவது என்றெல்லாம் ஆய்ந்து பின் ஒருவழி துணிந்து எனக்குப் பட்டதை வரைந்தேன். வேறுவழியின்றி இடர்ப்பட்ட பொருள் இது. "சேர்ப்ப- கடற்கரையாகிய ஆண் மகனே. என்று அஃறிணைப் பொருளை யுயர்திணையாக்கி யழைத்ததாகப் பொருள் கொண்டேன்.

மணிநிற நெய்தன் மலர்புரையுங் கண்ணு

யணிநல முண்டிறந்து நம்மருளா விட்ட
துணிமுந் நீர்ச்சேர்ப்பற்குத் தூதோடு வந்த
பணிமொழிப் புள்ளே பற.

51-ஆம் கவி இது.

"மணி நிற நெய்தல் மலர் புரையுங் கண்ணாய்" என்று முதலடியில் நிற்கின்றது. 'பணி மொழிப்புள்ளே பற' என்பது இறுதியடி. இரண்டும் விளியெனக் கொள்ளின் துறைப்பொருள் எவ்வாறு அமையும்? கண்ணாய் என தலைவி தோழியை விளித்தாள் என்றால் புள்ளே என்ற விளிக்குப் பொருள் பொருந்தாது. புள்ளே என்று

2ஆ இன்னிலை, கைந்நிலை

நாரையை யழைத்தாள் என்றால் கண்ணாய் என்பதற்குப் பொருள் பொருந்தாது. இதனை யாய்ந்து பொருள் காண்பதற்குப் பெரிதும் மனங்கலங்கினேன். தெய்வத்தின் அருளால் ஒன்று புலப்பட்டது. அதனையே வரைந்தேன். 53 ஆம் கவியும் என்னைப் பெரிதும் கலக்க முறுத்திறறு. "அலவன் வழங்கு மடும்பிமி ரெக்கர் நிலவு நெடுங்கான னீடார் துறந்தார், புலவுமீன் குப்பை கவருந் துறைவன், கலவான்கொ ளேழி நமக்கு" என்பதுஅது. இதில் "நீடார் துறந்தார்" என்பது யாரை யுணர்த்தும், "துறைவன்" என்பது யாரை யுணர்த்தும், துறைவன் என்பது ஒருமை; நீடார் துறந்தார் என்பது பன்மை; இவ்விரண்டினையும் பொருத்துவதெவ்வாறு? 'கலவான் கொல்' என்று பின் வருகிறது. தோழி என்ற விளியும் தோன்றுகிறது என்று

நெடிது ஆய்ந்து ஒருவழி கண்டேன. அதனை அறிஞர் ஆய்ந் தால் வியப்பும் நகைப்பும் விளையும் எனபது என கருத்து இம்மூன்று மட்டும் அல்ல. எலலாம் பொருள் காண்ப தற்கு அரியனவே. உரையாசிரியர் நோக்கின் உண்மை விளங்கும். இன்னிலை நூற்கவிகள் இதனினும் இடர்ப் பாடு விளக்கத் தக்கனவே ஆயினும் முன் உரை கண்டது அது. இது உரையே காணுத நூல்; ஆதலிற் கலக்கம் விளைதத்து என்பது கண்டேன். பதினெண் கீழ்க்கணக் கின் இறுதியாக நிற்பவை இவ்விரண்டு நூல்களே. மிக வும் அருமையான நூல்கள். பொருள் காண்பதற்கு எளியனவல்ல அந்நூல்களுள் உள்ள ஒவ்வொரு கவியும். என்ஞல் வரையப்பட்ட இன்னிலை யுரையும் கைந்நிலை யுரையும் நயம்பட்டவுரை யன்றெனினும் இனி நயம்பட விளக்கி யுரை வரைதற்கு வழிகாட்டியா மென மதித்து மகிழ்வார் கலைவல்ல சான்ருேர் எனக் கருதுகின்றேன்.

இங்ஙனம்
பண்டித வித்துவான்
தி. சங்குப்புலவர்

# இன்னிலை

## கடவுள் வாழ்த்து

வேலற் றரிஇய விரிசடைப் பெம்மான்

வாலிழை பாகத் தமரிய கொழுவேற்
கூற்றங் கதற்நெறி கொன்றையன்
கூட்டா வுலகங் கெழீஇய மலிந்தே.

—பாரதம் பாடிய பெருந்தேவனார் இயற்றியது.

(சொற் பொருள்) வேலன் தரீஇய விரிசடை பெம்மான்-முருகனைப் பயந்த விரிந்த சடையையுடைய பெருமானும், கொழுவேல்கூற்றம் கதழ்ந்து எறி கொன்றையன்-மழுவாயுதத்தையுடைய இயமனைச் சினந்து கொன்ற கொன்றைமாலை புனைந்தவரும் (ஆகிய சிவபெருமான்) பாகத்து வால் இழை அமரிய-இடப்பாகத்தில் உமை அமர்ந்திருப்ப, கூட்டா உலகம் மலிந்து கெழீஇய-(அதனால்) துணையாக எல்லாவுலகங்களும் பெருகி விளங்கின.

(கருத்து) சிவபெருமான் ஓர்பாகத்தில் உமையையமர்ந்திருப்ப எல்லாவுலகங்களும் விளங்கினவாதலால் அச்சிவபெருமானை வணங்குவோம்.

(விளக்கம்) இஃது படர்க்கைப் பரவல். "வேலற்றரீஇய" என்றதனால் படைத்தற்றொழிலும், அவ்வேலனால் இந்திரன் முதலியவரைப் புரப்பித்தலின் காத்தற்றொழிலும், "கூற்றம் கதழ்ந்தெறி" என்றதனால் துடைத்தற் றொழிலும் ஆகிய முத்தொழிலும் உடையவன் என்பதைக் குறிப்பினுணர்த்தினார். கூற்றத்தை மீண்டும் எழுப்பியதால் மறைத்தல், அருளல் ஆகிய இருதொழிலும் உள்ளடங்கியிருத்தலும் காண்க. சத்தியும் சிவமும் கூடியே உயிர்களையீன்று புரந்து உலகைநிலை

பெறுத்துகின்றனர் என்பது தோன்ற "வாலிழை பாகத்தமரிய" என்றார்.

"பெண்பாலுகந்திலனேற் பேதாயிருநிலத்தோர்
விண்பாலியோ கெய்திவீடுவர் காண் சாழலோ"

என்ற மணிவாசகர் திருவாக்கும் இதனை வலியுறுத்தும்.

"சிவம் சத்தி தன்னையீன்றும் சத்திதான் சிவத்தை யீன்றும், உவந்திருவரும் புணர்ந்திவ் வுலகுயிரெல்லா மீன்றும்" எனவரும் சிவஞான சித்தியாரையும் காண்க. "உலகம் மலிந்து கெழீஇய" எனவே யான் எடுத்த கருமம் இடையூறின்றி இனிது முடிவதற்கு அவ்விறைவனை வணங்குகின்றேன் என பது குறிப்பு ஆயிற்று.

(இலக் கணக் குறிப்பு) தரீஇய-தந்த, இஃது சொல்லிசையளபெடை. விரிசடை - வினைத்தொகை. வாலிழை - பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழி. தூய்மையாகிய அணியுடையாள் என்பது பொருள். அமரிய-செய்யிய என்னும் வாய்பாட்டு வினையெச்சம் அமர என்பது பொருள். இது காரண காரியப் பொருட்டாய் நின்றது. கொழு-மழு. வேல்-ஆயுதம் என்ற பொருள்பட நின்றது. இது இரு பெயரொட்டு. கூட்டுஆ=துணையாக. கெழீஇய-பலவின்பால் வினைமுற்று. அமர அது துணையாக உலகம் மலிந்து கெழீஇய என வினை முடிவு செய்க.

# நூல்

# அறப்பால்

அறத்தைப் பற்றிக் கூறும் பகுதியெனப்பொருள் படும். ஆடவர்க்குரிய உறுதிப்பொருளாகிய அறம், பொருள், இன்பம், வீடு என்ற நான்கின் முதல் நிற்பது அறம். ஆதலின் அறப்பால் முதலின் வைக்கப்பட்டது.

வெண்பா

1. அன்றமரிற் சொற்ற வறவுரைவீழ் நீக்கழுது
மன்று யர்ந்து போந்த வகைதேர்மின்—பொன்று
அறமறிந்தோன் கண்ட வறம்பொருள்கேட் டல்லன்
மறமொறுக்க வாய்த்த வழக்கு.

(சொ—ள்) அன்று-முற்காலத்தில், அமரில் சொற்ற அறம் உரைவீழ் நீ கழுது-பாரதப்போரில் (கண்ணன் அருச்சுனற்குக் கூறிய கீதையாகிய) அறவுரையை விரும்பிக்கேட்ட கொடிய பேயானது, உயர்ந்து மன்று போந்த வகை தேர்மின்- (அறிவால்) உயர்வுற்று ஆன்றோரவையைப் போய்ச்சேர்ந்த வகையை ஆராய்வீர், பொன்று அறம் அறிந்தோன் கண்டவறம் பொருள் கேட்டு - அழியாத தருமங்களையுணர்ந்தோன் அறிந்து கூறிய அறநூலினையும் பொருள் நூலினையும் (நீங்கள்) கேட்டு, அல்லல் மறம் ஒறுக்க - துன்பத்தை விளைக்கும் பாவங்களை நீக்குக, வாய்த்த வழக்கு(இது) - பொருந்திய நன்னெறி இதுவேயாம்.

(க-து) கொடிய பேயும் அறவுரை கேட்டுயர்ந்தது ; ஆத

லால் மக்களாகிய நீங்களும் ஆன்றோரறவுரை கேட்டுப் பாவம் நீக்கி வாழ்க.

இன்னிலை

(வி-ம்) அறவுரை கேட்டுய்யுந்தன்மையில்லாதது பேய் என்பதை விளக்க " தீக்கழுது " என்றார். பேய்க்கு அறவுரை கூறிலன் கண்ணன் என்பது தோன்ற " அமரிற் சொற்ற அறவுரை" என்றார். அயலானுக்குக்கூறிய அறவுரையை விரும்பிக் கேட்டுப் பேயும் உயர்ந்தது என்றால் மக்களாய்ப் பிறந்தவர் தமக்கு அறிஞர் கூறும் அறவுரையைக் கேட்பின் உயர்வார் என்பது கூருமலே விளங்கும். அதனை ஆராய்ந்து பாருங்கள் என்பார் " வகை தேர்மின் " என்றார். மறம் என்பது வீரத்தை புணர்த்தாது பாவத்தை புணர்த்திற்று; அல்லல் மறம் என்று கூறிய குறிப்பினால், வீரம் புகழ்விளைத்துச் சுவர்க்கம் புகுவிக்கும் என அறிக. வழக்கு-வழக்கம். இது மக்கட்குப் பொருந்திய வழக்கமாகும் என்று கூறுவார் " வாய்த்த வழக்கு " என்றார். வீழ்கழுது தீக்கழுது எனத்தனித்தனி கூட்டுக. பேய் பகவத்கீதை கேட்டு வைகுந்தம் அடைந்த கதையைப் பாகவத்திற் காண்க.

(இ - பு) அறவுரை-அறத்தைப் பற்றிக் கூறுங்கூற்று என விரியும். இரண்டனுருபும் பயனும் தொக்கதொகை. வீழ்தீக் கழுது-முன்னது வினைத்தொகை. பின்னது பண்புத்தொகை. தேர்மின் - முன்னிலைப்பன்மை யேவல்வினைமுற்று. அறம், பொருள், என்பன ஆகு பெயராய் அறநூலையும் பொருள்நூலையும் உணர்த்தின. ஒறுக்க - வியங்கோள். ஒறு+க = ஒறுக்க, க. விகுதி. பொன்று-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். (௧)

2. பொருள்விழைவார் போற்று றுடனல னம்மை
யருள் விழைவா ரஃதே முழுவெவ்வம் பாய் நீ

விருவிழையார் வீழ்வார்மேற் பாலாக்கா ராமா
றருவிழையார் தாமு மது.

(சொ-ள்) பொருள் விழைவார் உடல் நலம் ,போற்றார் - செல்வப்பொருளைச்சேர்க்க விரும்புவோர் தம் உடல்நலத்தைப் பேணார், நம் ஐ அருள் விழைவார் அஃதே - நம் இறைவன ருளைப் பெற விரும்புவோர் இயற்கையும் அதுவேயாம், முழு எவ்வம் பாய் நீல் இருள் இழையார் வீழ்வார்-துன்ப முழுவ



பரவுதற்கு ஏதுவாய நீல நிறமான இருண்டவளையலை யணிந்த மங்கையரின்பத்தை விரும்பியவர், மேற்பால் ஆக்கார் - முத்திக் குரிய செயல்கள் ஒன்றும் செய்யார், ஆம் ஆறு அருள் இழை யார் தாமும் அது - தம்மாலியன்றவாறு பிறவுயிர்கள் மேல் அருள் புரியாதவர் நிலைமையும் அதுவேயாம்.

(க-து) பொருளை விரும்புவோரும் இறைவனருளை விரும்பு வோரும் உடல் நலம் பேணாமல் எப்போதும் உழைப்பார். மாதர் சிற்றின்பத்தை விரும்புவோரும் பிறவுயிர் மேல் அருள் புரியாதவரும் முத்திக்குரிய செயல் புரியார்.

(வி-ம்) மேன்மேலும் பொருளீட்ட விரும்புவோர், காடு, கடல் இவற்றைக் கடந்து சென்று தங்கியும், பனியால் நனைந்தும், வெயிலால் வெம்பியும் பகலிரவென்று கருதாமல் உண்ணாமலும் உறங்காமலும் உழைப்பார் ஆதலால் " பொருள் விழைவார் உடல் நலம் போற்றார் " என்றார். மலைவனங்க

டோறும், வீணைகவுலைந்தலைந்து மிகுதன மார்ச்சிப்பதுவே விரதமாக, ஊனுசைகாய் கனியாவுடுப்பது மோர் முழத்துண்டாய்" என்ற அடிகள் பொருளீட்டுவார் உழைப்பைப் புலப்படுத்துவது காண்க. இறைவனருளைப் பெற விரும்புவோரும், விரதம்; நோன்பு புரிந்து இரவும் பகலும் இறைவனையே நினைந்து நினைந்துருகிப் பாடிப்பரவசமாய் உரிய காலத்து உண்பதும் உறங்குவதும் இன்றி அழுதும் தொழுதும் அவனடியே பற்றி வாழ்வர். ஆதலால் "அருள் விழைவார் அஃதே" என்றார். "கண்ணார் நுதலோய் கழலிணைகள் கண்டேன் கண்கள் களிகூர எண்ணாதிரவும் பகலும் நானவையே யெண்ணு மதுவல்லால், மணிமேல் யாக்கை விடுமாறும் வந்துன் கழற்கே புகுமாறும் அண்ணா எண்ணக் கடவேனோ" என்ற மணிவாசகர் திருவாக்கினையும் நோக்குக. நீல் என்ற அடையால் இழையார் என்பதற்கு வினையல்ல யணிந்தவர் எனப்பொருள் கூறப்பட்டது. மேற்பால்=முத்தி. எல்லாப்பதங்களிலும் மேலானது. ஆதலின் முத்தியை விரும்புவோர், சிற்றின்பத்தை வெறுத்துப் பிறவுயிர் மேலருள் செய்ய வேண்டும் என்று தெளிக.

6 இன்னிசை

(இ-பு) உடல்+நலன்=உடனலன். நலம்-நலன் இறுதிப் போலி. விழைவார்-வினையாலணையும் பெயர். இழையார்-நகை யணிந்தவர் இழையார்-செய்யாதவர் முன்னது பொருட்பெயர். பின்னது எதிர்மறை வினையாலணையும் பெயர். (உ)

3\. கோலப் புறவின் குரற்கூவிப் புட்சிமிழ்த்தோன்
காலிற் றளைபரப்பச் சீரோலிக்கு-மாலின்

விரிநிழ றுமெய்தார் தீப்பழுவந் துய்ப்பர்
உரிமை யிவனோரா தார்.

(சொ-ள்) கோலம் புறவின் குரல் கூவி புள் சிமிழ்த்தோன்- அழகிய புருவின் குரல போலத்தான் கூவியழைத்து அப்புற வாகிய பறவையைப் பிடித்துக் கூட்டிலடைத்தவன், காலில் தளைபரப்ப சீர் ஒலிக்கும்—(மறுபிறப்பில் அவனுடைய) காலில் விலங்கு பூட்ட (சிறையிலடைக்க) தன் நிலைமையைக்குறித்துப் புலம்புவன், உரிமை இவண் ஓராதார்-இவ்வுலகில் தாம் செய்ய வேண்டிய கடமைகளை அறியாதவர், மாலின் விரி நிழல் தாம் எய்தார்-திருமாலின் திருவடியின் விரிந்த நிழலையடைவதற் குரிய செயல் புரியார், தீப்பழுவத்து உய்ப்பர்-கொடிய நரகம் என்ற கானகத்தில் தம்மைச் செலுத்துதற்குரிய பாவச் செயல் களைச் செய்வார்.

(க-து) தாம் செய்யுங் கடமையறியாத மாந்தர் பாவம் பல புரிந்து நரகத்துன்பத்தையடைவர். திருமாலின் திருவடியைச் சேர்தற்குரிய அறவினையைப் புரிவதே மாந்தர் கடமையாம்.

(வி-ம்) மனை, மக்கள், சுற்றம், செல்வம் முதலிய பொருள் கள் யாவும் இறக்கும்போது துணையாக உடன்வாரா; அறம், பாவம் என்ற இரண்டுமே உயிருடன் கூடிச்செல்லும் துணை யாம் என்ற உண்மையை உணராதவர் என்பது தோன்ற "உரிமையிவண் ஓராதார்" என்றார். "அத்தமும் வாழ்வு மகத்து மட்டேவிழியழுது விம்மி, மெத்திய மாதரும் வீதிமட்டே விம்மி விம்மியிரு, கைத்தலமேல் வைத்தழுமைந்தருஞ் சுடுகாடு

என்ற கவியின் கருத்தினை இதனுடன் பொருத்துக. புருவைப் பிடித்துக்கூட்டிலடைப்பதும் பாவமாகும் என்பதும் அப்பாவத்திற்கு மறுமையில் காலில் விலங்கு பூட்டிச் சிறையிலடைக்கப் படுவான் என்பதும் முன்னிரண்டடியின் கருத்தாகும். "இரும்பார்க்குங்காலரா யேதிலார்க்காளாய்க், கரும்பார் கழனியுட் சேர்வர்-சுரும்பார்க்குங், காட்டுளாய் வாழுஞ் சிவலுங் குறும் பூழுங், கூட்டுளாக்கொண்டுவைப்பார்" என்ற நாலடியும் இதற்குத் துணைசெய்வதாம. இறைவன் திருவடிநிழல் எங்கும் பரந்து இன்பம் தருவதால் "விரி நிழல்" என்றார். தீப்பழுவம்-நெருப்புப் போன்ற காடு; இது உவமையாகு பெயராய் நரகத்தையுணர்த்தியது. அழகிய புருவின் குரல்போலக் கூவிப் புருவைப்பிடிப்பது எளிதாம் என்றும் அங்ஙனம் பிறவுயிரை வருத்தாது பிடித்து வளர்ப்பினும் அதுவும் பாவச் செயலாம் என்பதும் இதனால் விளங்கும்.

(கு-பு) குரல் கூவி-உவமத்தொகை. சிமிழ்த்தோன்—வினையாலணையும் பெயர். ஒலிக்கும்-ஒலிப்பான்-இதுசெய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று ஆண்பாலுக்கு வந்தது. ஓராதார், உய்ப்பர் எய்தார் என வினைமுடிவு செய்க. ஓராதார்-எழுவாய்.

4\. கழிவிரக்கங் கொள்ளார் கதழ்வாளார் வேர்த்துப்
பழிமுறுகக் கோடார் பயன்பேர்த்-தழிதகலை
யில்லெங்கோண் டாக்கரிடும்பைத் தனைதணப்பர்
நல்லறனை நானணிகொள் வார்.

(சொ-ள்) கழிவு இரக்கம் கொள்ளார்-தம்மிடமிருந்து நீங்கிய பொருள்களைக் குறித்து வருந்தாதவரும், கதழ்வு ஆளார்-சினத்தைமேற்கொள்ளாதவரும், வேர்த்து பழிமுறுக வோடார், வெகுண்டு பழி மிகுதியாகும்படி அதற்குரிய செயல்களைச் செய்யாதவரும், பயன் பேர்த்து அழிமுதலை இல்லம் கொண்டு ஆக்கார்-அறப்பயனை நீக்கிக் கெடுக்கும் முதற் பொருளைத் தமது மனையிற் கொண்டுபோய்ச் சேர்த்துச் செல்வத்தைப் பெருக்காத வரும் (ஆகிய அறிஞர்) இடும்பை தளை தணப்பர்-துன்பமாகிய கட்டினை யறுப்பார், நல் அறனை நாள் அணிகொள்



வார்-நன்மையைத் தரும் அறத்தை நாள்தோறும் தமக்கு அணியும் அணியாகக் கொள்வார்.

(க-து) கழிந்த பொருட்கு இரங்காதவர், சினங்கொள்ளாதவர், பழிச்செயல் புரியாதவர், பாவத்தால் பொருள் ஈட்டாதவர் ஆகிய இவரே துன்பத்தின் நீங்கி அறம்புரியும் அறிஞராவர்.

(வி-ம்) கழிவிரக்கம் எப்போதும் கவலையுண்டாக்கும்; கதழ்வு காரணமாகப் பகையுண்டாகிப் பல துன்பம் விளையும்; பழிச்செயல் செய்பவன் பிறரால் பழிக்கப்பட்டுத் துன்புறுத்தப் படுவான்; அழிமுதலை இல்லத்தில் வைத்தால் அது பெருகாது குறைந்து நாளுக்கு நாள் கவலையையுண்டாக்கும் ஆதலால் இவற்றை யொழித்தவர்களே "இடும்பைத் தளை தணப்பார்"

என்ருர். இந்நான்கு தீப்பண்புகளையும் விடுத்தவரே ஒவ்வொரு நாளும அறஞ்செய்வர் என்னுங் கருத்தால் "நல்லறனை நாளணிகொள்வார்" எனருர். "கற்ருர் முற்ருேன்ரு கழிவிரக்கம்" என்ற நான்மணிக்கடிகையின் கருத்தும், "ம ற த் த ல் வெகுளியை யார் மாட்டும் தீய பிறத்தலதனல் வரும்" என்ற குறட் கருத்தும், "பிறர் பழியும் தம்பழியும் நாணுவார் நாணுக் குறைபதி யென்னும் உலகு" என்ற குறட் கருத்தும் "சலத்தாற் பொருள் செய்தேமார்த்தல் பசுமட்கலத்துணீர் பெய்திரீஇயற்று" என்ற குறட் கருத்தும் அந்நான்கினையும் வலியுறுத்துதல காண்க. கழிவிரக்கமும், கதழ்வும், பழிச்செயலும், அறப்பயனைக் கெடுக்கு முதலே அகத்து வைத்திருத்தலும் அறிஞர் செயலாகா என்பதும் அவற்ருல் துன்பம் விளையுமேயன்றி இன்பம் விளையா என்பதும் அறம் புரிவதற்கும் இவை தடையாம் என்பதும் இதனல் விளங்கும்.

(கு-பு) கழிவிரக்கம் நான்காம் வேற்றுமைத்தொகை. அழிமுதல்-அழிக்குமுதல் வினைத்தொகை. இடும்பைத் தலை-பண்புத்தொகை. கொள்ளார், ஆளார், கோடார், ஆக்கார் என்பன எதிர்மறை வினையாலணையும் பெயர்கள். தணப்பார், கொள்வார் என்பன உடன்பாட்டு வினைமுற்று. (சு)



5. நிரைத்த விரிக்கிற் நிரைப்பிறு வாய்போ
துரைத்த வுரையதனைக் கேட்டு—முரைத்த
பயன்றவா செய்வார் சிலரேதந் நெஞ்சத்
தியன்றவா செய்வார் பலர்

(சொ-ள்) திரைத்த விரிக்கின் - சுருட்டிய பாய்களை விரித் தால். (விரித்த) திரைப்பின் - விரித்தபாய்களைச் சுருட்டினால். நாவாய்போல்-கப்பல் (மாலுமி குறித்த இடத்திற்குச் செல்வது) போலவும், (காற்றின் வழியே செல்வது) போலவும், உரைத்த உரையதனை கேட்டும் = அறிஞர் கூறிய அறவுரைகளைக் கேட் டும், உரைத்த பயன்தவா செய்வார் சிலரே - (அவர்) கூறிய அறிவுரையின் பயன் கெடாமல் நல் வினைகளைச் செய்வார் சிலரே (உள்ளனர்), தந்நெஞ்சத்து இயன்றவா செய்வார் பலர் - தம்மனம் போன போக்காக (தீவினைகளைச்) செய்வார் பலர் (உள்ளனர்).

(க-து) அறவுரைகேட்டும் பலர் நன்னெறி யொழுகாது தீயவழியிற் செல்கின்றனரே இதுமிகவும் வருந்தத்தக்கது. எல் லாரும் நல்வாழ்வு வாழப் பழக வேண்டும்.

(வி-ம) விரிக்கின் நாவாய்போல், திரைப்பின் நாவாய்போல் எனக் கொண்டுகூட்டுக. விரிக்கின் நாவாய் செல்லுமாறும் என வருவித்துப் பொருள் கொள்க. பண்டைக் காலம் பாய்மரக் கப்பல்கள் இருந்தன; பாய்மரத்தில் பாய்சுருட்டிக் கட்டப்பட் டிருக்கும்; கப்பலோட்டி தான் குறித்த இடத்திற்குக் கப்பல் செல்ல வேண்டுமானால் காற்று வருந்திசையையறிந்து பாயை விரித்துக் கட்டுவான்; அது அவன் குறித்த இடத்திற்குச் செல் லும்.பாயைச் சுருட்டி விட்டாற் குறித்த இடத்திற்குச் செல்லாது சுழன்று திரியும். இச்செயல்களையறிந்து உரைத்த உரையறிந்து அதன் வழியே செல்லும் அறிஞர்க்கும் செல்லாத மூடர்க்கும் உவமைகாட்டினார். பாய்விரித்துக் கட்டிய கப்பல் மாலுமி குறித்த இடத்திற்குச் செல்லவேண்டியது இயற்கை. அறிவுரை

ணம் யாது? பேதைமை பெரிதும் உடையர் பலர். உரை'கேட்ட பின்னர் ஆவது நன்னெறியொழுகி வாழ்க என்ற கருத்துப்புலப் பட, "கேட்டும்" என உம்மை கொடுத்தார். பாய்மரக் கப்பலுக் குள்ள அறிவுகூடப் பலர்க்கில்லை யென இகழ்ந்தவாறு இது.

(கு-பு) திரைத்த-வினையாலணையும் பெயர். உரைத்த-உரைத்த-பெயரெச்சம். தவாத என்பது தவரா என நின்றது. ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், இயன்றவாறு என்ற சொல்லின் ஈறு கெட்டு இயன்றவா என நின்றது. இது செய் யுள் விகாரம். கேட்டும், இதில் உம்மை எதிர்மறை. (ரு)

6. அம்மை யிழைத்த தலைப்பட் டழிவாயா
இம்மையுங் கொண்டுறுத்து மீர்ம்பெயலா—மும்மை
யுணர்ந்தார் திருவத்த ரோரா குறண்டைத்
தனைப்படுவர் தட்பந் தெருர்.

(சொ-ள்) அம்மை இழைத்த தலைப்பட்டு அழிவாயா-முற்பிறப்பிற் செய்த வினைகள் (அப்பிறப்பிலேயே செய்தவினை) சென்றடைந்து (பயன்களை நல்கி) கெட்டுப்போதலைப் பொருந்தா இம்மையும் கொண்டு உறுத்தும்=இப்பிறப்பினும் வந்து பயனை யடைவிக்கும்; ஈர் பெயலாம்-கூதிர்க்கால மழைக்கு ஒப் பாகும். மும்மை உணர்ந்தார் திருவத்தர்- (முற்பிறப்பிற் செய்த வினைப்பயனை இப்பிறப்பிலடைய வேண்டும். இப்பிறப்பிற் செய்

யும் வினைப்பயனை இனி வரும் பிறப்பில் அடையவேண்டும், என்று) மூன்று பிறவிகளின் உண்மையையும் அறிந்தவரே செல்வமுடையாராவார். ஓரார் உழண்டை தளைப்படுவர் தட்பம் தெருர்-அறியாதவர் துன்பத்தின் மயங்கி நிற்பார்; பாசங்களை யறுக்கமாட்டார்.

(க-து) மறுபிறவியுண்டு; நல்வினை தீவினைப்பயன் நம்மை வந்து சேரும் என்று முக்காலங்களையும் அறியும் சான்ருேரே பிறவியை நீக்கி முத்தியடைவர்.

(வி-ம்) ஒருவன் ஒரு பிறப்பிற் செய்த நல்வினை தீவினைக் குப்பயனுக இன்பதுன்பங்களை அவன் அப்பிறப்பிலேயடைவான்



முற்பிறப்பில் செய்த வினைப்பயன் இப்பிறப்பில் எவ்வாறு வந்தெய்தும்? அது பொய் என்பதை நோக்கி "அழிவாயா" என்ருர். வினைப்பயனை அப்பிறவியில் ஒருவன் அடைவதும் அல்லாமல் அடுத்த பிறவியிலும் அடைவன் என்பது தோன்ற "இம்மையுங் கொண்டுறுத்தும்" என உம்மை கொடுத்தார். ஈரம் பெயல் என்பது ஈரத்திற் பெய்யும் மழை எனப்பொருள் படும். கார்ப்பருவத்தை யடுத்துக் கூதிர்ப்பருவம் ஆதலால் அப் பருவத்திற் பெய்யுமழையை யுணர்த்தியது. பருவமழை பெய்து நிலம் ஈரம் ஆயபோது மேலுமேலும் விடாமல் மழைத் துளி விழும் காலமே கூதிர்க்காலம் ஆம். கூதிர் என்பது

வாடைக்காற்றை யுணர்த்தும் ஆயினும் இடைவிடாமழையாற் குளிர் பொறுக்க முடியாத காலம் என்பது தோன்றக் கூதிர்ப் பருவமெனப் பெயர் பெற்றது. கூதிரிற் பெய்யும் இடைவிடா மழைபோல முற்பிறப்பிற் செய்த வினைப்பயன் இப்பிறப்பில் இடையீடின்றி வந்து செய்தவினை நுகர்விக்கும். ஆதலால் ஈரம் பெய்தலை உவமை கூறினர். இப்பிறப்பில் ஒருவன் அடையும் இன்பதுன்பங்கள் முற்பிறப்பிற் செய்த வினைப்பயன் என்றும், செய்யும் வினைகள் அடுத்த பிறவிக்கும், அவன் அடையும் இன்ப துன்பங்கட்கும் காரணமாவன என்றும் உணர்ந்து பிறவியை நீக்கக்கருதியவனே முத்திச்செல்வம் பெறுவான் என்பது தோன்ற ' மும்மையுணர்ந்தார் திருவத்தர்'' என்றார். அறியாதவர் பிறவித்தளையை விட்டு நீங்கார் என்பதை விளக்க ஓரார்......தெருர் என்றார்.

(கு-பு) இழைத்த-பலவின்பால் வினையாலணையும் பெயர். அழி என்பது விகுதி குறைந்த தொழிற்பெயர். வாயா-பொருந்தா. இழைத்த என்ற பெயர் வாயா என்ற எதிர்மறை வினைமுற்றுக் கொண்டது. ஈரம்+பெயல்=ஈர்ம்பெயல் என அம்குறைந்து இனமிக்கு முடிந்தது. தட்பம் என்பது தள் என்ற பகுதியடியாகப் பிறந்த தொழிற்பெயர். தனிதல் என்பது பொருள். (கூ)

7. நாகீட் டருவினைக டண்டா வுடம்போன்ற
நாகீட் டெடருக்கொளு ஞாங்கரடுத் தீம்பாம்

**பிதுக்கப் பெயல்போற் பிறப்பிறப்புப் போகா**
**கதுப்போ டிறுத்தல் கடன்.**

(சொ-ள்) தாம் ஈட்டு அருவினைகள் தண்டா-தாமே புரிந்து சேர்த்த அருமையான நல்வினை தீவினைகள் செய்தவர்களை விட்டு நீங்கமாட்டா. உடம்பு ஒன்ற நாம் மீட்டு ஒறுக்க ஒணு-உடம்புடன் பொருந்தியிருக்க நம்மால் வினைகளை மீண்டும் நீக்க முடியா; ஞாங்கர் அடி தீம்பால் பிதுக்கப் பெயல் போல்-உள்ளிடத்திலுள்ள இனிய பாலானது பிதுக்கப் பிதுக்க வெளி வருவதுபோல, பிறப்பு இறப்பு போகா பிறவியும் சாவும் அடுத் தடுத்து வரும்; கதுப்போடு இறுத்தல் கடன்-மூட்டொடு அப் பிறவியைக் கெடுப்பதுவே மக்கள் கடமையாகும்.

(க-து) அவரவர் செய்தவினைகள் அவரவரை விட்டு நீங்கா. செய்தவர்களாலும் திரும்பவும் அவற்றை நீக்கமுடியா. வினையுள்ளவரையும் பிறவியும் ஒழியாது. ஆதலால் வினையைக் கெடுத்துப் பிறவியை நீக்குவதே மக்கள் கடமையாம்.

(வி-ம்) தாமே செய்த வினையைத் தாமே போக்க முடியாது அவ்வினையும் அதன்பயனை ஊட்டாமல் நீங்காது என்பதை விளக்க "தாமீட்டருவினை" என்றார். நம் உடம்பில் நாம் செய்த தீவினைவந்து பொருந்தும்போது அதனைத் தடுக்கவும் முடியாது என்பார். "நாம் மீட்டொறுக்கொணு" என்றார். பிதுக்க பிதுக்க மடியிலிருந்து பால் வெளிவருவதுபோல் வினைசெய்ய செய்யப்

பிறவியும் வரும் என உவமை விளக்கம் காண்க. பிறப்பும் இறப்பும் துன்பத்தை மிகுவித்தலால் பிறவியொழிப்பதைக் கடமையாகக்கொள்க என்பார். "கதுப்போடிறுத்தல் கடன்" என்றார். கதுபபு இங்கு மூட்டுவாய் என்பதையுணர்த்தும். ஒன்றுடன் ஒன்று பொருத்தப்பட்டிருக்கும் இடம் மூட்டுவாய். அதனையறுக்கவே பற்று நீங்கித் தனித் தனியாகப் பிரிந்து விடும். வினையை வேரறுக்க வேண்டும். அதுவே பிறவியை யறுக்கும் வழியென்பார். "கதுப்போடிறுத்தல்" என்றார். வினை நீங்கியபோது பிறவியும் நீங்கும் என்பது கருத்து.



(கு-பு) சுட்டுவினை அருவினை யெனக்கூட்டுக. தண்டா- எதிர்மறைப் பலவின்பால் வினைமுற்று. ஒறுக்க என்பது அகரங் குறைந்து நின்றது. ஒண்ணு என்பது ஒணு என இடை குறைந்து நின்றது. இவை தொகுத்தல் விகாரம். தீ-இனிமை. பிறப்பு இறப்பு என்பவை போகா என்னும் வினைமுற்றைக் கொண்டன. இறுத்தல்-கெடுத்தல் இது தொழிற் பெயர். (எ)

8. தூயசொல் லாட்டுந் துணிவறிவுந் துன்பங்கள்
தோயக் கலங்காத் துணைவலியும்-பூயல்
படுக்குந் திருவத்த ஒரே பரிப்பர்
அடுக்கு மடிச்சேரா வாறு.

(சொ-ள்) தூய சொல்லாட்டும்-தூய்மையான சொற்களைப் பேசுவதும்; துணிவு அறிவு-(அறிஞர் உண்டென்று ஆய்ந்து) துணிந்தபொருளை யறிவதும், துன்பங்கள் தோய கலங்காதுணை வலியும் - கவலைகள் வந்து பொருந்தியபோது மனங்

கலங்காத வளவு வலிமை பெற்றிருப்பதும், பூயல் படுக்கும் திரு வத்தனுரே-(ஆகிய இவற்றை) பொருந்தச் சேர்க்கும் செல்வத் தினையுடையவரே, அடுக்கும் மடி சேராவாறு பறிப்பர்-அடுக்கி வருகின்ற பிறவியிற் சேராதவாறு அதனைக்களைவர்.

(க-து) தூயசொற் பேசுதலும், செம்பொருட்டுணிவும், துன்பத்திற்குக் கலங்காத மனவலிமையும் உடையவன் பிறவியை நீக்குவான் என்பது.

(வி-ம்) தூய சொல் என்பது பொய், புறங்கூறல்; கடுஞ் சொல், பயனில் சொல் என்ற நான்கினையும் நீக்கிப் பேசுஞ் சொல்லையுணர்த்தியது. வாய்மையும் இன்சொல்லும் எனக் கொள்க. துணிவு அறிவு என்பது துணிவினை அறியும் அறிவு எனப் பொருள்படும். கடவுள் உண்டு, இம்மை, மறுமை, நலவினை, தீவினை, முத்தி, நரகம் இவையுண்டு என்று சான்றோர் துணிந்தவற்றைத் தானும் அறிந்து கொள்ளல், "உலகத் தாருண்டென்பதில் லென்பான் வையத் தலகையா வைக்கப் படும்'' என்று வள்ளுவர் கூறியபடி உண்டென்பது இல்லையென்



பவன் மனிதனல்லன். அவன் ஒரு பேய்; ஆதலால் அறிஞர் உண்டு என்பதை உண்டு என்று துணிபவனே மக்களில் ஒருவனாக மதிக்கப்படுவான். "இடுக்கண் வருங்கா னகுக வதனை, யடுத்தூர்வ தஃதொப்ப தில்'' என்று வள்ளுவர் கூறியாங்கு மனமகிழ்வுடன் நகை முகங்கொண்டு துன்பத்தைப் போக்க வேண்டுமேயன்றிக் கலங்குதல் கூடாது. கலங்கு

வோன் தான் செய்யும் வினையைக் காலமறிந்து செய்யாமற் கைவிடுவான். அதனுற் கலங்காத வறிவும் வேண்டும் என்பது கருத்து. இம்மூன்றும் உடையவன் எவனே அவன் பிறவியைக் களைந்து முத்தியடைவன் என்பது சொல்லப் பட்டது.

(கு-பு) ஆட்டு-தொழிற்பெயர். பாட்டு என்பதுபோல், துணிவறிவு-இரண்டனுருபும் பயனும் உடன் தொக்க தொகை, கலங்கா-ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பூயல்–பொருந்துதல். மடி-வயிறு; இது பிறவியையுணர்த்தியது. (அ)

9. கடன்முகந்து நீம்பெயலை யூழ்க்கு மெழிலி
மடனுடையார் கோதகற்றி மாண்புறுத்த லேமம்
படைத்தாக்கல் பண்பறிந்தோர் சால்பு.

(சொ-ள்) எழிலி—மேகமானது, கடல் முகந்து நீ பெயலை ஊழ்க்கும்—கடலினுள்ள (உப்பு நீரை) முகந்து (நன்னீராக்கி) இனிய மழையாகப் பெய்யும் (அதுபோல) பண்பு அறிந்தோர் சால்பு—நற்பண்புகளை அறிந்தவரது செயலானது, மடன் உடையார் கோது அகற்றி மாண்புறுத்தல்—அறியாமையுடையவரது குற்றங்களைப் போக்கி நற்குணங்களைப் பொருந்துவித்தலும், ஏமம் படைத்து ஆக்கல்—(அவர்கட்கு) காவலாக வேண்டியவற்றை உண்டாக்கிப் பெருக்குவதும் ஆம்.

(க-து) மேகம் கடல் நீரையுண்டு மழை பொழிந்து உல

(வி-ம்) மேகம் கடலிலுள்ள உவர் நீரை மாற்றி நன்னீராக்கி மழை பொழிகிறது. அதுபோலச் சான்றோர்கள் மக்களிடத்துள்ள அறியாமையைக் கேட்டு அறிந்து அறிவுரை வழங்குவர். மேகம் மழை பெய்து பின் எவ்வாறு பலவகையான உணவு உடைக்குரிய பொருள்களை வளரச் செய்கின்றனவோ அதுபோலச் சான்றோரும் அறிவுரை வழங்கி மக்களுயிர்க்குக் காவலாகிய செயல்கள் செய்வித்து வளர்ப்பர். ஆதலால் மேகம் சான்றோருக்கு உவமையாயிற்று. ஏமம்—காவல், இன்பம். இன்பமெனப் பொருள் கொண்டு இன்பத்திற்குரியவற்றை உண்டாக்குவதும் வளர்ப்பதும் என்றும் கொள்ளலாம். உயிர்க்குக் காவலாகிய செயலாவன, "கடவுள் வணக்கம்; அறம் புரிதல், முத்திக்குரிய நெறியறிதல் முதலிய நற்செயல்களாம். இவற்றை வளர்த்துப் பெருக்குவது உயிர்கள் பிறப்பிலுழன்று நரகஞ்சேர விடாது தடுப்பதனால் காவலாயிற்று. இன்பத்திற்குரிய செயலும் இதுவேயாம். சான்றோர், மக்களது அறியாமையை நீக்கி அறிவுரை வழங்கி அதனால் நற்செயல் புரிவித்துக் காப்பர் என்று கூறினர் என அறிக.

(கு-பு) கடல் என்பது ஆகுபெயராய் அதன் நீரையுணர்த்தியது. தீ—இனிமை. எழிலி முகந்து பெயலை ஊழ்க்கும் எனவும், பண்பறிந்தோர் சால்பு, அகற்றி உறுத்தல், படைத்து ஆக்கல் எனவும் கூட்டிப் பொருள் கொள்க. அதுபோல என உவமையுருபு வாராததால் இது எடுத்துக் காட்டுவமையணி.

10. இடிப்பதென் றெண்ணி யிறைவானைக் காயார்
முடிப்ப ருயிரெனினு முன்னுர்—கடிப்பக்
கன்றமர்ந்து தீம்பால் கலுழுமே நீண்மோத்தை
யொன்ற வுணராதா ரூங்கு.

(சொ-ள்) இடிப்பது என்று எண்ணி இறைவானை காயார்—இடிவிழச் செய்கின்றது என்று கருதிச் சிறிதும் மேகத்தை வெறுக்க மாட்டார்; (மக்கள் யாவரும்) உயிர் முடிப்பர் எனினும் முன்னுர்—தம் உயிரைப் போக்குவார் (இவர்) என்று தெரிந்தாலும், முன்னுர்—(அத்தகைய கொடியோர்



உயிரை நாம் முதலிற் போக்குவது நலம் என்று (பெரியோர்) கருதமாட்டார். கன்று அமர்ந்து கடிப்ப தீ பால் கலுழும்—தனது கன்று விரும்பி மடியைக் கடித்தாலும் (தாய்ப்பசு) இனிய பாலினைச் சொரியும், ஒன்றவுணராதார் ஊங்கு நீள் மோத்தை—பொருந்த வாழ்வதனை, யறியாத மக்களைப் பார்க்கினும் நீண்ட ஆட்டுக் கடாக்கள் (நல்லனவாம்.)

(க-து) உதவி செய்பவரிடத்துக் குற்றம் இருப்பினும் பொறுக்க வேண்டும். தமக்குத் தீங்கு செய்யினும் அவர்க்குத் தீங்கு செய்ய நினைக்கலாகாது. கூடிவாழ வேண்டும்.

(வி-ம்) இடிவிழுந்தாற் சிலர்க்குத் தீமை விளையும் அது

கருதி மழையை வெறுப்பவர் இலர் என்ற வுவமையால் பலர்க்கும் பல நன்மைசெய்யும் ஒரு மனிதனிடம் ஒரு குற்றம் இருப்பினும் அக்குற்றத்தை மட்டும் நோக்கி அவனை வெறுத்தல் தகாது என்னும் நீதி விளங்கிற்று. கன்று கடித்ததென்று தாய் நினையாது பால் கொடுப்பது போலத் தம்மை அறியாத மாந்தர் வருத்தினும் பெரியோர் அதனைப் பொறுத்து நன்மையையே செய்வர் என்ற கருத்துத் தோன்ற "முடிப்பருயிரெனினும் முன்னுர்" என்ருர். எனினும் எனபது தமக்குத் தோன்றினுலும் என்ற பொருளைத் தந்தது. முடிப்பர் உயிர் எனினும் என்பது அத்தகையக் கொடுஞ் செயலாகத் தோன்றினுலும் என்பதை விளக்கி நின்றது. முன்னுர்—நினையார், அவர் புரியும் தீய செயலையே தாமும் அவர்க்குப் புரிவதற்கு நினையார் என வருவித்துக் கொள்க. ஆட்டுக்கடாக்கள் ஒன்று மற்றொன்றை முட்டினுல் மீண்டும் அதனை அது முட்டும். எத்தனைதரம் முட்டினும் விட்டுப் போகாமல் மேலும் மேலும் முட்டித் துன்பத்தை விளைவித்துக் கொண்டே நிற்கும். இது ஆட்டுக் கடாவின் செயல். ஒன்ற வுணராதார் செயல் இதனினும் மேற்பட்டது என்று கூறுவார் நீண்மோத்தை யூங்கு என்ருர். பிறர்க்குத் துன்பம் விளையாமல் வாழ்வது நல்வாழ்வு என்பதுகருத்து.

(கு-பு) காயார், முன்னுர் என்பன பலர்பாற் படர்க்கை யெதிர்மறை வினைமுற்று, உழும்—என்பது பிறவினைப்



பொருளைத் தந்தது. ஏ—அசை. நீள்+மோத்தை = நீண்

மோத்தை எனத் திரிந்தது.

## பொருட்பால்

இது பொருளைப் பற்றிக்கூறும் பிரிவு எனப்பொருள்படும். அறத்தையும் இன்பத்தையும் பொருள் தருதலின் நடுவாகப் பொருட்பால் வைக்கப்பட்டது

11. உண்மையோராப் பித்த ருடைமை மயக்கென்ப
வண்மையுற வூக்க லொருதலையே—கண்ணீர்
இருபாலுந் தோன்றன்ன வீர்க்கலார் போழ்வாள்
இருபா லியங்கலிஞே டொப்பு

(சொ-ள்) உண்மை ஓரா பித்தர் உடைமை மயக்கு என்ப-உண்மையையறியாத மயக்க முடையவர் செல்வத்தை மயக்கம் தருவது(சிறந்தது அன்று) என்று கூறுவர். ஒருதலையே வண்மை உற ஊக்கல்-துணிவாகவளம் பொருந்தும்படி தேடுவதற்கு ஊக்கங்கொள்க. கண்ணீர் இருபாலும் தோன்று அன்ன-கண்ணின் நீர்மை போன்ற இருபக்கமுள்ள அறம் இன்பங்கள் தோன்றுவதாகிய அத்தன்மையுடையது (செல்வம்) ஈர்க்கலார் போழ்வாள் இருபால் இயங்கலினேடு ஒப்பு-வெட்டுவோர்க்கு வெட்டும் வாளாயுதம் இருபாலும் இயங்குவதனேடு ஒப்பாகும் அது.

(க-து) செல்வம் அறம் இன்பங்களைத் தோனறுவிக்கும், செலவ மிருப்பது வீரர்களுக்கு வாளாயுதம் இருப்பது போன்றது. ஆதலாற் செல்வத்தைத் தேட வேண்டியது மக்கள் கடமையாம்

(வி-ம்) செல்வத்தினல் அறஞ் செய்து, இனபத்தையும்

நுகர்ந்து பின் முத்தியை யடையலாம் என்ற உண்மையறியாத
வர் செல்வத்தைச் சிறப்பாக மதிக்கமாட்டார். அது மயக்கத்
தைத்தருவது என்று வெறுப்பார். அவ்வாறு வெறுப்பவர்க்குத்
துறவு வாழ்க்கையே தக்கது. இல்வாழ்விலிருப்பவர் அவ்வாறு
கூறினுல் அது மயக்கமேயாம் என்ற கருத்து வெளிப்பட



“உண்மை ஓராப் பித்தர்” என்றார் பித்தர் என்றது துறவிகளையே குறிக்கும். வண்மையுற - வளம்பொருந்தும்படி, பெருகும்படி. ஊக்கல் - ஊக்குக. வியங்கோள். கண்நீர் இருபால் என்பது இரண்டு கண்போன்ற அறம். இன்பங்களையுணர்த்தியது. மக்கள் வாழ்வின் பயன் அறஞ்செய்தலும் இன்பந்துய்த்தலுமே. ஆதலின் அவையிரண்டும் இரு விழிகளாகக் கொள்ளப்பட்டன. இருபால் என்பது, அறம் பொருள் இன்பம் என்ற மூன்றின் நடுவினிற்கும் பொருளுக்கு இருபக்கத்தின் நிற்கும் பொருள்களாகிய அறத்தையும் இன்பத்தையும் உணர்த்திற்று “வடுவிலா வையத்து மன்னிய மூன்றின், நடுவண தெய்த விருதலையும் எய்தும்,” எனவும், “ஒண்பொருள் காழ்ப்ப வியற்றியார்க்கெண்பொருள், ஏனையிரண்டும் ஒருங்கு” எனவும் செலவபபொருள் அறத்தையும் இனபததையும தரும எனக்கூறியிருபபதும் நோக்குக வீரர் கையில் வாளிருந்தால் அதுஇருபக்கமும் செலவது போலப பொருளும் இருபக்கமும் செல்லும், பொருள் இருபக்கம் செல்லுதலாவது அறம் இன்பம் ஆகிய இருபாலும் செல்வது. வாள்பகையைத் தொலைப்பது போலச் செல்வமும் பசி பிணி முதலியவற்றைத் தொலைக்கும் எனக்கொள்க.

(கு-பு) ஓரா ஓரா எனக்குறுக்கல் விகாரமாயிற்று. என்ப-பலர்பாற்படர்க்கை வினைமுற்று. தோன்று-முதனிலையே தொழிறபெயர்ப் பொருளைத்தந்தது. அன்னது குறைந்து

அன்ன என நிறைந்து. தொகுத்தல. ஈர்க்கலார்-ஈர்க்கல் என்ற தொழிலுடையவர்-ஆர்-விகுதி.

12. உடைமையரு நீட்ட லுறுதுணையாம் யாண்டும்
உடைமையராச் சென்றக்கா லூரெல்லாஞ் சுற்றம்
உடைமைக்கோ லின்றங்குச் சென்றக்காற் சுற்றம்
உடையவரும் வேறு

(சொ-ள்) அருது உடைமை ஈட்டல் யாண்டும் உறுதுணை யாம் (ஒருநாளும்) நீங்காது செல்வததைச் சேர்க்க வேண்டும். அஃது எவ்விடத்தும் மிக்க துணையாகும்; உடைமையரா சென்றக்கால் ஊர் எல்லாம் சுற்றம் - செல்வமுடையவராகி



அயலூர்க்குச் சென்றால் சென்றவூரில் உள்ளவர் எல்லாரும் சுற்றத்தாராவார், உடைமை கோல் இன்றி அங்கு சென்றக் கால் சுற்றம் உடையவரும் வேறுபடும்-செல்வமாகிய ஊன்று கோலின்றி ஆங்குச் சென்றால் சுற்றத்தார் என்ற உரிமை யுடையவரும் வேறுபட்டு அயலார் போலாவார்.

(க-து) செல்வமுடையவரை எல்லாருஞ் சேர்ந்து தம் சுற்ற மாகவே கொண்டாடுவர். ஆதலாற் செல்வத்தை இடை விடாது வருந்திச் சேர்க்கவேண்டும்.

(வி-ம்) அருது உடைமை ஈட்டல் எனவும் யாண்டும் உறு துணையாம் எனவுங் கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது. உடைமையருது ஈட்டல எனபதற்கு, செல்வந் தன்னைவிட்டு நீங்காமலிருக்குமபடி ஈட்டுக எனவும பொருள் கூறலாம். யாண்டும்-எக்காலத்தும் என்றும் பொருள் கொள்ளலாம். சென்றக்கால் எனற குறிபபினுல் அயலூர் என்பது வருவிக்கப்பட்டது. "ஆகா தெனினு மகத்துநெய் யுண்டாயிற், போகா தெறும்பு புறஞ்சுற்றும்-யாதும், கொடாஅ ரெனினு முடையாரைப் பற்றி விடாஅ ருலகத் தவர்," எனற நாலடிப்பா இங்கு ஒப்பு நோக்கற் பாலது. செல்வரைக் கண்டால் யாவரும் சுற்றத்தார்போலச் சூழ்ந்து திரிவதும வறியரைக் கண்டாற சுற்றத்தாரும் நோக்காமற் கைவிட்டு நீங்குவதும் உலகியலபு. அவ்வுலகியலபு தோன்ற ஊரெலலாம் சுற்றம எனறும், சுற்றம் உடையவரும் வேறுபடும் என்றும் கூறினர். உடைமையை ஊனறுகோலாக உருவகஞ் செய்தவர் வாழ்வாகிய நல்வழி என உருவகஞ் செய்யாது விடுத்தலால்இஃது ஏகதேசவுருவகம். செல்வமாகிய ஊனறுகோலின்றிச் சென்ருல் வாழ்வாகிய நல்வழி கடக்கவியலாது என்று கொள்க. சுற்றம் உடையவர்-சுற்றமாகிய உரிமையுடையவர் எனக்கொள்க. தாய் தந்தை உடன்பிறந்தோர் முதலியவர் சுற்றத்தாராவர். அவ்வகைச் சுற்றத்தாரும் அயலாராக வேறுபடுவர்என்பது. அறஞ்சாரா நல்குரவீன்றதாயானும் பிறன்போல நோக்கப் படும். என்ற குறட்பாக்கூறும் பொருளும் அது.

20 இல்லிலே

(கு-பு) ஈட்டல்-அல்விகுதி பெற்ற வியங்கோள். சென்றக் கால்-கால்விகுதிபெற்ற வினையெச்சம். சுற்றம் என்பதற்கு ஆவர் என்ற பயனிலை வருவிக்க. இன்றி என்பது இன்று என விகாரமாய் நின்றது. வேறுபடும் என்ற பயனிலை சுற்றம் என் பதற்குத்தான் பொருந்தும். உடையவரும் என வந்ததால் இது வழுவமைதி எனக்கொள்க.

13. மண்ணீ ருடையார் வழங்கிச் சிறுகாலைத்
தண்ணீரார் சாரு நிலஞ்சார்வ — ருண்ணீர்
அறியி னருஞ்செவிலி மாண்பொருளே வெண்ணீர்ச்
சிறியரையு மேர்ப்படுத்துஞ் செய்.

(சொ-ள்) மண் நீர் உடையார்-நிலமும் நீர்நிலைகளும் ஆகிய செல்வங்களையுடையவர்; வழங்கி-அவற்றை வறியவர்க்குக் கொடுத்து (அறம்புரிந்து) சிறுகாலை-விரைவில், தண்நீரார் சாரும் நிலம் சார்வர்-அருட்குணமுடைய ஆன்றோர் எய்தும் மேலுலகத்தினை அடைவர், உள் நீர் அறியின்-உண்மைத் தன்மையாய்ந்தால், மாண்பொருளே அருஞ் செவிலி-மாட்சிமையுடைய செல்வப் பொருளே (அந்நற்பண்பு நற்செயல் களை வளர்க்கும்) அருமையான செவிலித்தாயாகும்; வெள் நீர் சிறியரையும் ஏர்படுத்தும்-(அப்பொருள்) வெள்ளிய தன்மையுடைய சிறியோரையும் பெருமைப் படுத்தும், செய்-(ஆதலால் அப்பொருளை) ஈட்டுக.

(க-து) செல்வமுடையவர்கள் அறம்புரிந்து மேலோர் எய் தும் துறக்கத்தினையும் அடைவர். செல்வமே நற்பண்புகளை வளர்ப்பது. ஆதலால் நீ செல்வத்தினையே தேடுக.

(வி-ம்) மண் என்பது நன்செய், புன்செய், வீடு, தோட்டம் முதலியவற்றை யுணர்த்திற்று. நீர் என்பது கிணறு, குளம், முதலியவற்றையுணர்த் திற்று. நன்செய் குளத்து நீர் பாய்ந்து

விளைவது. புன்செய் நீர் வேண்டாதது, மழையால் விளையும் இயல்புடையது. தோட்டம் கிணற்று நீரால் விளையும் இயல புடையது. வீடுகளிலும் கிணறு அமைந்திருக்கும். புன்செய் ஒன்று தவிர மற்ற நிலங்களில் நீர் இருக்கும் ஆதலால் மண் ணீர் ஆகிய செல்வமெனப் பொருள்படுமாறு மண்ணீர் எனக் கூறினர். மண்ணீர் என்பது மண்ணும் நீருமாகிய செல்



வத்தை யுணர்த்தியது. தண்ணீரார் என்பது சான்றோரை யுணர்த்தியது. தண்மை-அருள்-நீர்-பண்பு-ஆர்-விகுதி அருட் பண்புடையார் என்பது திரண்ட பொருள். அவர் சாரும் நிலம் எனவே முத்தியுலகம் என்பது குறிப்பாற் கொள்ளப் பட்டது. உண்ணீர்-உண்மைத்தன்மை. அறியின்-அறிய விரும்பினால் யான் கூறுகின்றேன் என்பது குறிப்பு. வெள் நீர்ச் சிறியர்-நுண்ணிய அறிவில்லாதவர். ஏர்ப்படுத்தும்-அழகு படுத்தும், பெருமைப்படுத்தும் என்பது அது. நீரும் நிழலும் நிலம் பொதியும் நெற்கட்டும், பேரும் புகழும் பெருவாழ்வு-மூரும் வருந்திருவும் வாழநாளும் வஞ்சமிலார்க்கென்றும் தருஞ்சிவந்த தாமரையாடான, என்ற கவியின் கருத்தை அடியொற்றியது இது.

(கு-பு) மண்ணீர் - ஆகுபெயர். தண்மை+நீர்-தண்ணீர், உண்மை+நீர்-உண்ணீர், அருமை+செவிலி-அருஞ் செவிலி இவை பண்புத் தொகை. பொருள்-எழுவாய். ஏற்படுத்தும-பயனிலை. செய் என்பதற்கு நீ என்ற எழுவாய் வருவிக்கப் பட்டது.

14. மெய்வலியுஞ் சென்னிலையும் வாழ்நாளுந் தூவொழுக்கு
மெய்யா வளிக்கும் வெறுக்கையிலார் — வையத்துப்
பல்கிளையும் வாடப் பணையணைதோள் சேய்நிரங்க
வொல்குயிர்நீத் தாரு நரகு.

(சொ-ள்) வெறுக்கை - பொருட்செல்வமானது (எல்லார்க்கும்), மெய்வலியும்-உடல்வலியும், செல்நிலையும்-தம்வாக்கு எங்குஞ் செல்கின்ற நிலைமையும், வாழ்நாளும்-நீண்ட வாயுளும், தூஒழுக்கும்-தூயவொழுக்கமும், மெய்யா அளிக்கும்-உண்மையாகக் கொடுக்கும், இலார்-செல்வமில்லாதவர்கள், வையத்து-இவ்வுலகில், பல்கிளையும் வாட-பலசுற்றத்தாரும் வருந்தும் படியும், பணை அணை தோள் சேய்திரங்க-மூங்கில் போன்ற தோளுடையவன் ஆகிய மனைவி மக்கள் மெலிந்து வருந்தும் படியும் (விடுத்து) ஒல்கு உயிர் நீத்து-குறைவாகிய உயிரைப் போக்கி, நரகு ஆரும்-(மறுமையிலும்) நரகத்திற் சேர்வர்.



(க-து) ஒருவருக்குச் செல்வமானது உடல்வலி செல்வாக்கு. வாழ்நாள், நல்லொழுக்கம் இவற்றைக் கொடுக்கும்; செல்வமில்லாதவர் இம்மையிற் சுற்றம் மனைவி மக்கள் வாடும்படி வாழ்ந்து பின் இறந்து மறுமையில் நரகத்தை யடைவர். ஆதலாற் செல்வத்தைத்தேடுக.

(வி-ம்) வெறுக்கை என்பது எழுவாய்; அளிக்கும் என்பது பயனிலை. ஆதலால் முன்கொண்டு கூட்டப்பட்டது. பொருளு டையவர், வேண்டும் உணவுண்டு உடல்வளர்ப்பதற்குத் தகுதியுடையவ ராதலால் மெய்வலியை வெறுக்கையளிக்கும் என்ருர். செல் + நிலை = சென்னிலை, செல்லும் நிலைமை. இது சொற் செல்லும் நிலைமையை யுணர்த்தியது. பொருளுடையவர் ஏவினல் அப்பணியைச் செய்ய எவரும வருவர். செல்வர் வாக்கு எங்குஞ் செல்லும். ஆதலால அதற்குச் செல்வாக்கு என்று பெயர். நோயின்றி உடலை வளர்பபதும் கவலையின்றி வாழ்வதும் ஆகிய காரணத்தால் வாழ்நாளும் நீட்டிக்கும் என்று கூறினர். அறிஞர் பலர் வந்து பொருள்கருதி அறவுரை கூறுவர். ஆதலாற் கீழ்மக்களும் அதனைக் கேட்டுக்கேட்டு நல்லொழுக்க முடையவராவர் என்பது கருத்து. இலார் என்பது. முன்னின்ற வெறுக்கையைப் பின்னும் கூட்டி வெறுக்கையிலார் எனறு பொருள் கொள்ளப்பட்டது.

(கு-பு) ஆரும் எனபது பயனிலை. ஆரும் என்னும் வினை முற்று பலர் பாறபடர்க்கைக்கு முடிபாகாது. ஆயினும் இழிவு கருதிவந்தது எனக்கொண்டு வழுவமைதி யென்க. பணையணை தோள் என்பது அன்மொழித்தொகை. அணை உவமையுருபு. வாட, திரங்க, நீத்து, நரகு, ஆரும என வினைமுடிவுசெய்க, நரகு-ஏழனுருபு இறுதியில் தொக்கு நின்றசொல்.

15\. குருட்டாய வின்காளங் கோடல் சிவனைத்
தெருட்டாயங் காலத்தாற் சேரான்—பொருட்டாகான்
நல்லறமும் பேணு நாரமிவர்த் தாளும்
பொல்லாங் குறைவிடமாம் புல்.

(சொ-ள்) தெருட்டு ஆயம் காலத்தால் சேரான்-(யாவரை யும்) தெளிவிக்கின்ற பொருள் வருவாயை,இளமைப்பருவத்தி லேயே சேராதவன். குருடு ஆயன் நீள்கானம் கோடல் சிவண- கண்குருடாகிய இடையன் நீண்ட கானத்தினை (தன் ஆடுகளை மேய்ப்பதற்கு)இடமாகக் கொள்வதை ஒப்ப, பொருட்டு ஆகான் -ஒரு பொருளாக மதிக்கப்படான். நல்லறமும் பேணான்- நல்ல அறங்களையும செய்ய விரும்பான். நாரம் இவர்த்தானும்-மக்கட் கூட்டத்தால் வெறுக்கப்பட்டவனுவன், பொல்லாங்கு உறை விடனும்-தீமைகள் யாவும் தங்குவதற்கு இடமாவன். புல்-சிறி யவன்.

(க-து) இளமையிற் பொருள் தேடாதவன், குருட்டாயன் காட்டில் ஆடு மேய்த்தது போல வாழ்வில் இடர்ப்பட்டுப் பிற ரால் மதிக்கப்படாமல் வாழ்வான்.

(வி-ம்) செல்வம்; மக்களின் மயக்கத்தை நீக்கி மனத்தைத் தெளிவுபடுத்தும் என்ற கருத்தினுல் தெருட்டு ஆயம் என்ருர். ஆயம்-பொருள்வருவாய். ஆயன்என்ற குறிப்பினுல் ஆடுமேய்ப் பதற்கு என்பது வருவிக்கப்பட்டது. காடு கண்ணுக்கெட்டாத தூரமுள்ளது என்பார் "நீள் கானம்" என்ருர். குருட்டிடையன் நீண்டகாட்டில் ஆடுகளை மேய்த்து அவற்றை ஒருவழிப் படுத் தித் தானும் அவற்றின் பின் வந்து வீடு சேரமுடியாதது போலப் பொருளில்லாதவனும் தன் வாழ்விற்குரிய பொருள் களைக்கூட்டி ஒருவழிப்படுத்தி நல்வாழ்வு நடத்தி முத்தியிற் போய்ச்சேரமுடியாது என விளக்கம் காண்க. பொருட்டு-

பொருள். பொருள் + து = பொருட்டு. உயிராகிய பொருளையுடையது என்று பொருள் தரும். உயிர் பொருள் என்க. உயிர்ப் பொருளாக மதிக்கப்படான் என்பது கருத்து. நாரம்-மக்கட் கூட்டம். இவர்த்தான் - வெறுக்கப்பட்டவன். இவர்த்தான் என்பது இப்பொருளைத்தாராது எனினும் வேறுவகையிற் பொருள் கொள்ள வியலாது போலத்தோன்றுகிறது. உவர்த் தான் என்பது பிழையாக இவர்த்தான் எனஎழுதப்பட்டிருக்கும் என்னும் ஐயம் நிகழ்கிறது. ஆய்ந்து கொள்க. புல் என்பது; மேல் கீழ் என்பன மேன்மக்கள் கீழ் மக்களை யுணர்த்துவது



போலப் புல்லியன் என்ற பொருளைத்தந்தது. "ஆன முதலி லதிகஞ் செலவானுன், மானமழிந்து மதிகெட்டுப்-போனதிசை எல்லார்க்குங் கள்ளனும் ஏழ்பிறப்புந்தீயனும், நல்லார்க்கும் பொல்லானும் நாடு" என்ற கவியிற் பல தீமைகளையும் இல் லாதவனுக்கு என்று கூறியிருப்பதாற் "பொல்லாங்குறை விடமாம்" என்றார்.

(கு-பு) நீள்கானம்-வினைத்தொகை: கோடல்-கொள்ளுதல், இது தொழிற்பெயர். சிவண-உவமையுருபு. சேரான்-வினை யாலணையும் பெயர். சேரான் எழுவாய்; ஆகான், பேணுன், இவர்த்தான் என்பன பயனிலைகள். ஆம் இரண்டும் அசை.

16. முப்பொருளுண்மை தெளிவா னருஞ்சீலன்
முப்பொருளுண்மை யுடையா னருமுனிவன்
முப்பொருளுண்மை மடுப்பானிறை யாங்கு
முப்பொருளுண்மைக் கிறை.

(சொ-ள்) முப்பொருள் உண்மை தெளிவான் அருசீலன்-(அறம் பொருள் இன்பம் என்ற) மூன்று பொருள்களின் உண்மை இயல்புகளை யுணர்ந்து தெளிந்தவன் அருமையான நல்லொழுக்க முடையவனாவான். முப்பொருள் உண்மை யுடையான் அருமுனிவன்-அம்மூன்று பொருள்களின் உண்மை யறிவுடையவன் அரியதவ முனிவனாவான். முப்பொருள் உண்மை மடுப்பான் இறை-அம்மூன்று பொருள்களின் உண் மையை மனிதர்கட்குக் காட்டி வளர்ப்பவன் அரசனாவான், முப்பொருள் உண்மைக்கு இறை-அம்மூன்று பொருள்களும் மெய்ப பொருளுக்கு உறைவிடமாம்.

(க-து) அறம்பொருள் இன்பம் என்ற மூனறு பொருள்க ளின் இயல்புணர்ந்து தெளிந்தவன் நல்லொழுக்கமுள்ளவன்; அவற்றை அறிந்தவன் முனிவன்; அவற்றை மனிதர்க்குக் காட் டிப் பெருக்குவோன் அரசன். பரம்பொருட்கு இருக்குமிடமும் அவையாம்.

(வி-ம்) உண்மை தெளிவான் என்றது, அறம் இத் தன்மையுடையது ; இவ்வாறு செய்யவேண்டும்; இன்ன பய



னைத் தரும் என்றும், பொருள் என்பது இது; பொருளை இன்ன வாறு ஈட்டவேண்டும்; இவ்வாறு செலவழிக்கவேண்டும்; அத னால் இன்ன பயன் விளையும் என்றும், இன்பம் என்பது இன் னது; அதனை இவ்வாறு துய்த்தல் வேண்டும்; அதனால் விளை யும் பயன் இது என்றும் ஒவ்வொன்றினியல்பும் கல்வி கேள்வி வாயிலாக அறிந்து ஐயம் நீங்கித் தெளிந்தவன் என்பதை யுணர்த்தும். தெளிந்தவன் முறையறிந்து அவற் றைத் தேடித்துய்த்து வாழ்வதனால் அவன் நல்லொழுக்கமுடை யவனாவான் என்றார். முனிவர்கள் அவற்றைத் தேடமாட்

டார்; ஆதலின் அவற்றின் இயல்பறிந்தவரை முனிவர் என்றார். இம்மூன்றையும் மக்கள் முறையே தேடி வாழும்படி காவல்புரிப வனை அரசன் எனபது கருதி 'மடுப்பவன் இறை' என்றார். உண் மைக்கு-மெய்ப் பொருளுக்கு இஃது பரம்பொருளாகிய கடவு ளுககு எனப பொருள் தந்தது. உண்மைக்கு முப்பொருள இறை என முடிக்க-இறைவன் இம்மூன்று பொருள்களிலும் தங்கியிருப்பான் என்பது. எனவே இம்மூன்று பொருளை யுணர்ந்து வாழ்வு நடத்துவோர்க்கு இறைவனருள் எளிதில் கிட்டும் என்பது கருத்து.

(கு-பு) மூன்று+பொருள் - முப்பொருள் பண்புத்தொகை. தெளிவான்-வினையாலணையும் பெயர். மடுப்பான் என்பதும் அது. உடையான் குறிப்பு வினையாலணையும் பெயர். ஆங்கு-அசை. சீலன், முனிவன், இறை என்பன பெயர்ப பயனிலை.

**17. கால்கலத்தாற் சேர்பொருளுங் கண்ணற்றார் தேர்பொருளும்**
**நாலிரண்டாற் கூடு நலப்பொருளுங்—கோல்தாங்கிக்**
**கோடு மரசிற் குரியாமே தொல்புவிக்கீழ்**
**ஆடும் பொருளோ டணைந்து.**

(சொ-ள்) கால் கலத்தால் சேர் பொருளும்-வண்டியாலும் கப்பலாலும் வந்து சேர்கின்ற சுங்கப் பொருளும், கண்ணற்றார் தேர் பொருளும்-அறிவில்லாதவர் தேடிய பொருளும், நால் இரண்டாற்கூடு நலப்பொருளும், -வருவாயில் ஆறிலொரு பங் காகக் கொடுக்கும் நலமான பொருளும், தொல்புவிக்கீழ் ஆடும் பொருளோடு அணைந்து-பழைமையான புவிக்குக்கீழ் அஞ்ச

கின்ற பொருளாகிய புதையலுடன் சேர்ந்து, கோல்தாங்கிக் கோடும் அரசிற்கு உரியாமே-செங்கோல் தாங்கி நீதி தவறி நடக்கும் அரசுக்கு உரியனவாமோ (உரியனவாகா செங்கோல ரசர்க்கே யுரியனவாம்.)

(க-து) சுங்கப் பொருளும் அறிவில்லார் தேடிய பொருளும், குடிகள் ஆறிலொன்று கொடுக்கும் பொருளும் நிலத்திற் புதைத்த பொருளும் செங்கோலரசர்க்கே சேரும்.

(வி-ம்) கால்-சக்கரத்தின் பெயர்; அது ஆகுபெயராய் வண்டியை யுணர்த்தியது. நிலத்தின் மீது செல்லும் வண்டியும் நீர் மீது செல்லுங் கப்பலும் பல பொருள்களை யோரிடத்திருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டு போவதா யிருப்பின் அவற்றிற்கு அரசர் வரி விதிப்பர். அதனைச் சுங்கம் எனபது மரபு. அறிவில்லார் தேடி வைத்த பொருள் அனுபவிக்காமலே யிருந்து பின் ஒரு காலத்தில் நெறிவழி யொழுகாதது குறித்துத் தண்டனையாக அரசர்பாற போய்ச் சே ரும். ஆறிலொன்று வாங்குவது அரசன் கடமையாக முன்னிருந்ததால அதனை 'நலப பொருள்'' எனறார் தொல்புவிக்கீழ ஆடும்பொருள் என்றது பூமியின் கீழ்ப் புதைத்து வைத்திருக்கும் பொருளே. பெருஞ் செலவம் உடையவர் பூமிக்குக் கீழ் ஆழமாக வெட்டி இருப்புத்தூண் நட்டு இருபபுச் சங்கிலி பூட்டிப் பெருங்கலங் களிற் பொன்னை நிறைத்துத் தொங்கவிட்டு இருப்பது வழக்கம். ஆதலால் ஆடும்பொருள் என்றார். உரியாரின்றிப் புதையல் காணப்படின் அது அரசனுக்கு உரியதாகும் என்பது. மேற் குறித்த நால்வகையாக வரும் பொருளும் கடுங்கோலரசனுக்கு உரியவாகா என்பது கருத்து. செங்கோலரசற்கே யுரியதாகும் என்பதை மறுதலைப்படக்கூறி விளக்கினர். நீதியரசே நிலைதது

நிற்கும்; கோடும் அரசு நீடுதலின்று என்ற கருத்தினுல் உரியாமே என்ருர். உரியனவாகா என்பதை அது விளக்கிற்று.

(கு-பு) கால் என்பதற்கு ஆல் உருபும் உம் என்பதும் சேர்க்க. கலத்தால் உம் சேர்க்க. உரிமை-இதில் மைவிகுதி கெட்டது; ஆம்+ஏ=ஆமே. ஏகாரம் வினுப் பொருளில் வந்



தது. உரிமையாமோ என்பது பொருள். உரிமையாகா என்பது எதிர்மறை. ஏகாரம் இப்பொருளைக் காட்டியது.

18. ஆம்போம் வினையா னணைவுற்ற பேர்வெறுக்கை
யோம்போம் பெனமறை கூறத் தலைப்பெயலென்
ஏம்போ மெனவரைத லீட்டுநெறி தேராமை
சாம்போழ் தலறுந் தகைத்து.

(சொ-ள்) வினையான் ஆம் போம்-(பொருள்) முற்பிறப்பிற் செய்த வினை காரணமாக உண்டாகும் பின்பு அழிந்துபோகும், அணைவுற்ற பேர் வெறுக்கை-(அப்பொருளுக்கு) சேர்ந்த பெயர் வெறுக்கையாம், ஓம்பு ஓம்பு என மறை கூற-ஒழித்துவிடு ஒழித்துவிடு என்று வேதங்கள் கூறவும், தலைப்பெயல என்-அப்பொருளைச்சேர்ப்பது, என்ன காரணம், ஏம்போம்எனவரைதல்-(பொருளீட்டி) களிப்படையோம் நாம் என்றுகூறி அதனை நீக்குவது, ஈட்டு நெறிதேராமை-பொருள் சேர்த்து இன்பம் துய்க்கும் வழியறியாமையே யாகும், சாமபோழ்து அலறும் தகைத்து-அது இறக்கும்போது வருந்தியழுந் தன்மை யுடையது.

(க-து) ஆம் போது ஆம் போம்போது போம் என்று எளிதாகச் செல்வத்தைக் கருதி இளமைப் பருவத்தில் தேடாமலிருந்தால் இறக்கும்போது மனைவிமக்களைக் குறித்து வருந்த வேண்டியது நேரிடும.

(வி-ம்) வினை என்பது நல்வினை, தீவினையிரண்டினையும் உணர்த்தியது. நல்வினையால் ஆம் தீவினையாற்போம் எனக் கூட்டுக. ''இடுக்குற்றுப் பற்றினும் நில்லாது செல்வம் விடுக்கும் வினையுலந்தக்கால்'' என்ற நாலடியின் பொருளும் அது. அறிஞர் வெறுத்தலால் செல்வத்திற்கு ''வெறுக்கை'' என்ற பெயர் வந்தது என்பது குறிப்பு. ஓம்பு என்பது காத்தலுக்கும் கூறலாம். ஆயினும் இடம் நோக்கி ஒழி என்று பொருள் கூறப்பட்டது. அடுக்கு விரைவைக் குறித்து நின்றது. விரைவில் ஒழித்துவிடு என்பது குறிப்பு. இவ்வாறு மறை கூறவும் நாம் தலைப்பெயலென் ஏம்போம் என்பது ஒருவர் கூற்று. தன்



-மைப் பன்மையாகக் கூறினர் எனக் கொள்க. வரைதல், பல பொருள் ஒரு சொல்லாயினும் இங்கு நீக்குதல் என்ற பொருளைத் தந்தது. பொருளீட்டுந் தொழிலை நீக்குவது என்க. பொருள் தேடும் வழி தெரியாமலே இருப்பதன்றி அது அறிஞர் செயலாகாது என்பார் ''தேராமை'' என்றார். இறக்கும்போது மனைவி மக்கள் பொருள் இன்றி வருந்திப் பின்னுளில் என் செய்வாரோ என்று நினைத்து அவர்கள் முகத்தை நோக்கி. நோக்கிப் புலம்புவார் 'என்பது தோன்ற ''சாம்போழ்தலறும் தகைத்து'' என்றார்.

(கு-பு) ஆகும் போகும் என்ற வினைமுற்றுக்கள் ஈற்றயல கெட்டுஆம் போம் என நின்றன. வினையான் இதில் ஆன மூன்றனுருபு; கருவிப் பொருளில் வந்தது. ஓம்பு+ஓம்பு+என் பன ஓம்போம்பெனக் குற்றியலுகரங் கெட்டுப் புணர்ந்தன. ஏம் போம்-தன்மைப் பன்மையெதிர் மறைவினை முற்று. ஏம்பு+ஓம் விகுதி; எதிர்மறையிடைநிலை ஆகாரங் கெட்டதெனக் கொள்க. தகைத்து-ஒன்றன்பாற் குறிபபு வினைமுற்று. வரைதல்-தொழிற் பெயர். தேராமை-எதிர்மறைத் தொழிற் பெயர்.

19. பட்டாங்குத் தூயர் பழிச்சற் குரியராய்
ஒட்டின் றுயர வுலகத்தோர் – கட்டளை
யாம் வெறுக்கை யின்றி யமையாரா மையாவின்
ஆம் வெறுக்கை நிற்க வுடம்பு

(பொ-ள்) உலகத்தோர்-உலகத்துள்ள மக்கள், பட்டாங்கு-உண்மையாக, தூயர் பழிச்சற்கு உரியராய்-தூய்மையுடைய வராகவும் துதிப்பதற்கு உரியவராகவும், ஒட்டு இன்று உயர-ஒப்பில்லாமல உயர்வதற்கு, வெறுக்கை கட்டளையாம்-செல் வமே உரைகல்லாம், இன்றி அமையாராம்-அச் செல்வமில்லா மல் (வேறொன்றாலும் அளப்படதற்கும்) பொருந்தார் ஆம், உடம்பு நிற்க- (செல்வமின்றி) உடல்மட்டும் நின்றால், மையா வின் வெறுக்கை ஆம்-காட்டுப் பசுவைப்போல வெறுப்பதற்கு உரியதாம்.

(க-து) உலகத்தில் மக்களையளந்து உயர்வு தாழ்வுகாட்டு வதற்குக் கட்டளைக் கல்லாக இருப்பது செல்வம். செல்வ மில்லாதவ ருடம்பு காட்டுப் பசுப்போல வெறுக்கப்படுவதாம.

(வி-ம்) பட்டாங்கு என்பது உள்ளபடியே என்ற பொருளைத் தந்தது. தூயராய், உரியராய் என்று பின் உம்மை கூட்டுக. ஒட்டு-ஒப்பு என்ற பொருளைத் தந்தது. இன்றி என்பது இன்று எனத்திரிந்தது. கட்டளை என்பது, பொன்னை உரைத்து மாற்றுப்பார்க்கும் ஒரு கல். உரையாணியும் ஆம். "சால்பிற்குக் கட்டளை யாதெனிற் றோல்வி, துலையல்லார் கண்ணுங் கொளல்" என்பது குறள். செல்வம் எத்துணை பெருகி யுள்ளதோ அத்துணை உலகத்தார் மதிக்கப்படுவார். செல்வம் இன்றெனில் மதிக்கப்படார். எனவே அவர் பெருமையை யளந்துகாட்டுவது செல்வம் என்பது தோன்ற "வெறுக்கை கட்டளையாம்" என்றார். கட்டளைக்கல்லாற் பொன்னின் மாற்றுக்கண்டு உயர்வு தாழ்வு கூறுவதுபோல உலகமக்களின் உயர்வு தாழ்வு அவரவர் படைத்திருக்கும் செல்வத்தையே நோக்கி அறியலாம் என்பது கருத்து. மைஆ-கரியபசு. மை என்ற அடைமொழி காட்டுப் பசுவைக் குறித்தது. இப்பசு நாவினால் நக்கினால் இன்பமாகத் தோன்றும் என்பதும் நக்கிய இடத்திலுள்ள தசை குருதி முழுவதும் அதன் வாய்க்குட் சென்று பின்னர் மிகுநத துன்பத்தை விளைக்கும் என்பதும் நூலிற்கண்ட உண்மையாம். "ஆமாபோ னக்கி யவர்கைப் பொருள்கொண்டு" என்பது நாலடியார். காட்டுப் பசுவிற் பால் கறப்பதும் இயலாது. அதனைக்கண்டவர் அதன் பண்பினை நினைந்து வெறுப்பதுபோலச் செல்வமிலலாதவன் உடம்பு, கண்டவரும் வெறுப்பர் எனக்கொள்க.

(கு-பு) பழிச்சல் + குபழிச்சற்கு. ஒட்டு + இன்று + உயர - ஒட்டின்றுயர எனற குற்றியலுகரம் கெட்டுப் புணர்ந்தது. வெறுக்கை என்பது கைவிகுதிபெற்ற தொழிற்பெயர். வெறுத்தல். இது ஆகு பெயராய்ச் செல்வத்தையுணர்த்தியது. நிற்க என்பது செய என்ற வாய்பாட்டு வினையெச்சம்; ஆம் என்ற முற்றைக்கொண்டு முடிந்தது.

## இன்பப்பால்

20. அறங்கரை நாவானு மாய்மயிலார் சீரி
லறங்கரையா நாப்பணடைவார்—புறங்கரையாத்
திண்மை நிலையி னுயர்புலத்திற் சேர்வாமீண்
டெண்ணிலைக ருய்வா யிது.

இன்பத்தின் பகுதியைக் கூறுவது இது. ஐம்புலனுகர்ச்சியிற் சிறந்த இன்பமாவது மங்கையர் காமவின்பமேயாதலின் அதனைக்கூறும் பகுதியாம். மூன்ருவதாக இன்பப்பால் வைக்கப்பட்டுள்ளது.

(சொ-ள்) அறம் கரை நாவான் ஆய் மயிலார் சீர் ஆம்-அறங்கூறும் நாவினுல் ஆராய்ந்த மயில்போன்ற மகளிருடன் கூடிவாழும் சிறப்பு (ஒருவனுக்கு) உண்டாகும், இல்லறம் கரையா நாப்பண் அடைவுஆம், இல்லறத்தின் முடிவாக நடுவுலகம் (பொன்னுலகம்) அடைவது கூடும, புறம் கரையா திண்மை நிலையின் உயர்புலத்திற் சேர்வு ஆம்-புறதொழுக்கிற் சென்று தளராத வலிமையான நிலையால் உயர்ந்த முத்தியாகிய

இடத்திற்குச் சேர்வதும் கூடும, ஈண்டு எண் நிலைக்கு உய் வாய் இது (ஆதலால்) இவ்வுலகத்தில் ஆராய்ந்த நிலைகட்கு எலலாம் செலுத்துகின்ற வழி, இவ்வழியேயாம்.

(க-து) இல்லறமே சுவர்க்கத்துச் செல்லுவதற்கும், முத்தி யுலகம் அடைவதற்கும் வழியாகும். ஆதலால் இல்லறத்தை நல்லறமாகக்கொள்ளல் வேண்டும் மக்கள் யாவரும்.

(வி-ம்) உலகத்தார்க்கு அறவுரை வழங்கும் அறிவுடை யோனை மகளிர் மணந்து வாழவிரும்புவர் என்ற கருத்தினுல் அறம் கரைநாவான் ... ஆம் என்ருர். கல்வியறிவில்லாத கய வனை மணந்து இல்லறம நடத்தக் கன்னியர் எண்ணூர் என்பது கருத்து. இல்லறம் இனிது நடத்தி அறம் புரிந்து வாழ்வார சுவர்க்கஞ் செல்வது உறுதியாதலால் "நாப்பண் அடைவு ஆம்" நாப்பண்-நடு. இது முத்தியுலகத்திற்கும் மண்ணுலகத் திற்கும் நடுவில் இருப்பது கருதி, நாப்பண் எனப்பட்டது



அன்றியும் மண் விண் பாதலம் என்ற முறையில் நடு நிற்ற லாலும் நாப்பண் என்பது பொருந்தும். புறங்கரையாத்திண்மை நிலையாவது; இல்லறத்திலிருந்து பரத்தையர் முதலிய பிற மகளுடன் கூடித்தகாத செயல் புரியாமல் தன்மனைவியையன் றிப் பிறமாதரை மனத்தானும் நினையாது வாழும் வலிய நிலைமை இந்நிலை தவத்திற்கொத்த நிலையாம். இதனையே வானப்பிரத் தம் என்பர் வடநூலார். மனைவியும் தானும் வனமடைந்து நோற்றல் என்பர் தமிழர். இந்நிலையினிற்பவர் முத்தியுலகஞ் சேர்வர் என்பது நூற்றுணிபாதலின் "உயர்புலத்திற் சேர்வு ஆம்" என்ருர். உயர்புலம்-உயர்ந்த இடம், இது முத்தியுல

கத்தையுணர்த்திற்று. இல்லறத்திருப்பவன் சுவர்க்கமும் அடையலாம் பின் முத்தியுலகத்தையடையலாம். எவ்விடத்திற்கும் செலுத்துகின்ற வழியாக இல்லறம் இருக்கின்றது என்பார் "உய்வாய" என்றார். வாய்-வழி உய்க்கும் வழி எனப் பொருள் கொள்க.

(கு-பு) கரை நா-வினைத்தொகை. நாவான்-ஆன் மூன்றனுருபு. ஆய்மயில, உயர்புலம், எண்ணில, உய்வாய் என்பன வினைத்தொகைகள்; கரையா; கரையாக என்பது ஈறுகெட்டு நின்றது. கரையாத்திண்மை, ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். அடைவு, சேர்வு தொழிற் பெயர்கள்.

21\. துணையென்ப காம விருந்துய்ப்பார் தோமில்
இணைவிழைச்சின் மிக்காகா ராகல்—புணைதழீஇக்
கூட்டுங் கடுமிசையான் கட்டியிற கொண்டற்றால்
வேட்டபோழ் தாகு மணி.

(சொ-ள்) காம விருந்து துய்ப்பார் துணையென்ப-காமவின்பமாகிய விருந்துண்பவர் (கணவனும் மனைவியும்) முத்தியுலகஞ் செல்வதற்குத் தக்க துணையாவார் என்று ஆன்றோர் கூறுவர். தோமில் இணைவிழைச்சில் மிக்காகார் ஆகல் (அவர்கள்) குற்றமில்லாத புணர்ச்சியின்பத்தின் மிகாதவர்களாகுக. புணை தழீஇ கூட்டும், அது புணையாகி அவர்களைத் தழுவி முத்தியிற் சேர்ப்பிக்கும். வேட்டபோழ்து ஆகும் அணி-மணம் புரிந்த

போது உண்டாகிய அழகின் தோன்றம், கடுமிசையான் கட்டி யிற் கொண்டற்று-கசப்பு மருந்திணையுண்ணுதவனுக்குக் கருப் புக்கட்டியில் வைத்து ஊட்டினுற்போன்றது.

(க-து) கணவனும் மனைவியும் முத்தியுலகு செல்வதற்கு வழித்துணையாவார், காதலிற் கருத்து மிகுதியுஞ் செலுத்தாது வாழ்ந்தால், அது புணைபோலக்கொண்டு போய்ச் சேர்க்கும் மணமுடிப்பது பேரின்ப வாழ்வு குறித்ததுவேயாம்.

(வி-ம்) காதலனும் காதலியுமாக வாழ்ந்து நரைதிரை மூப்புப் பிணியால் நலிந்தபோது அவ்விருவர்க்கும் உலகப்பற்று நீங்கிப் பேரின்பத்தில் கருத்துச் செல்வது இயற்கை யாதலால் சிற்றின்பத்திற்கு வாழ்க்கைத் துணையாக அமர்ந்த இவர் பேரின்பத்திற்கும் துணையாவார் என்பது தோன்ற "துணை என்ப" என்றார். காதலிருவர் கருத்தொருமித்தாதரவுபட்டதேயின்பம் என்றபடி இருவரும் கள்ளமில் உள்ளத்தராய்க் கலந்தணையும் இன்பமே இன்பம் என்பது தோன்ற 'தோமில் இணைவிழைச்சு" என்றார். காமபபுணர்ச்சியின மிகுதியும் கருததுச் சென்றால் உலகத்தில் இம்மைப்பயனும மறுமைப பயனும எண்ணாது தீயவழியை நாடுவர் என்றும், அது பேரின்பத்திற்குச் செலவதற்குத் துணை யாகாது என்ற கருத்தினால் "மிக்காகாராகல்" என்றார். நீர் வழிச்செல்வார்க்குப் புணை துணையாகிக் கரைசேர்ப்பது போல பேரின்ப நெறிசெலவோர்க்குப் புணர்ச்சியின மிகாமை துணை யாகிக் கூட்டும். என்பார் "புணை தழீ இக்கூட்டும்" என்றார். கசப்பு மருந்தினைக்காட்டி யூட்டினால் மக்கள் உண்ணாது மறுப்பர். இனிப்புமேல் தடவியூட்டினால் அதனை மறுக்காமல் உண்பர். இது மக்களியற்கை ஆதலாற் கடவுள் சிற்றின்பம் முதலிற் காட்டி மக்களுக்குப்பின் பேரின்பத்திற் பற்றுண்டாகும்படி இல்வாழ்க்கை யமைத்திருக்கின்றார் என்பது விளக்க வேட்டபோழ்து ஆகுமணி........கட்டியிற்கொண்டற்று என்றார். இதனால் இல்லறமே சிறந்தது அதனின்றே பின் முத்தியுலகஞ் சேரலாம் என்று குறிப்பாக விளக்கியது.

(கு-பு) விருந்து துய்ப்பார் என்பது சந்தம் நோக்கி விருந்துய்ப்பார் எனக்குறைந்து நின்றது. உய்ப்பார் எனப் பிரித்து

விருந்து தருவார் என்பொருள் கொள்ளினும் பொருந்தும். ஆகல்:வியங்கோள். ஆகுக என்பது. தழுவி என்பது தழீஇ என அளபெடுத்தது: மிசையான்:எதிர்மறை வினையாலணை யும் பெயர். கடு-கசப்பு. இது மருந்தினை யுணர்த்தியது. கட்டியிற் கொண்டு ஊட்டினாற்போன்ற என வருவித்து முடிக்க. அற்று+ஆல்:அசை.

22. ஒப்புயர்வில் வேட்டோ னொருநிலைப்பட் டாழ்ந்தசெயல்
நப்பின்னை ஞால மொருங்கறிக—துப்பாராய்த்
தூமலரின் மென்மையுறு தோற்றத்தே வைத்துய்க்க
ஏமக் கிழத்தி யறிந்து.

(சொ-ள்) ஒப்பு உயர்வில் வேட்டோன் ஒரு நிலைப்பட்டு ஆழ்ந்த செயல்-ஒப்பில் உயர்வு இல்லாமல் (காதலன் காதலி யிருவரும் ஒப்பென்று கருதி) மணந்தவன் ஒரு நிலைமை யடைந்து (இன்பத்தில்) ஆழ்ந்திருந்த செய்தியை, நப்பின்னை-நப்பின்னை (வாழ்வால் அறியலாம்), ஞாலம் ஒருங்கு அறிக-உலக முழுவதும் அறிந்து கொள்க, ஏமம் கிழத்தி அறிந்து. (ஒருவர் தமக்குக்) காவலாகிய இல்லாளை யறிந்து, துப்பார் ஆய் தூமலரின் மென்மையுறு தோற்றத்தே வைத்து உய்க்க-மனத்தூய்மையுடையவராய்த் தூய பூவின் மென்மையாகிய தோற்றத்தையே மனதில் வைத்து (இல்லறம்) நடத்துக.

(க-து) நப்பின்னையும் கண்ணனும் காதலுடன் கூடி இல் லறம் நடாத்தியது போல ஒருவர் தமக்கு வாழ்க்கைத்துணையை யறிந்து 'மணம் புரிந்து' மென்மைத் தன்மையாக இல்லறம் நடத்த வேண்டும்.

(வி-ம்) ஒப்பு-(நாமும் இவனும்) ஒப்பாவோம். உயர்வு இல் (நம்மிருவரில் ஒருவர்) உயர்வில்லை (யென்று கருதி வேட்டோன்) என்றும் பொருள் கூறலாம். ஒப்பு உயர்வு இல் ஒரு நிலைபட்டு-உலகில் தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லை என்னும் ஒரு நிலைமையடைந்து எனக்கூட்டினும் அமையும். வேட்டோன்-ஆழ்ந்த செயல் நம்பின்னை வாழ்விற் காணலாம்; என



வருவித்து முடிக்க. "மலரினும் மெல்லிது காமஞ் சிலரதன், செவ்வி தலைப்படுவார்" என்ற வள்ளுவர் வாக்கிற்கிணைய 'தாமலரின்....வைத்துய்க்க' என்றார். ஏமம்-காவல், இன்பம் ஆகிய பொருளைத்தரும் எனினும் காவல் என்ற பொருளே சிறந்தது. கணவனுக்குக் காவலாக இருப்பவளே மனைவியாவள். "தற் காத்துத் தற்கொண்டாற் பேணி" என்ற குறட் கருத்தும் இதனை வலியுறுத்தும். உய்க்க-செலுத்துக. இவ்வினைமுற்றுக் குச் செயப்படு பொருளாக இல்லறம் என்பது வருவிக்கப்பட்டது. ஒருவர் என்பது தோன்று எழுவாய். ஒருவர் ஏமக்கிழத் தியறிந்து துப்பாராய்..........தாமலரின்.......உய்க்க என வினை முடிவு காண்க.

(கு-பு) ஒப்பு உயர்வு-ஒப்பின் கண் உயர்வு என ஏழாம் வேற்றுமையாம், ஒப்பும் உயர்வும் இல்லாது என விரிக்கின் உம்மைத் தொகையாம். வேட்டோன்:வினையாலணையும் பெயர். அறிக, உய்க்க:வியங்கோள். செயல்:தொழிற்பெயர். தாமலர் பண்புத்தொகை. ஞாலம்:ஆகுபெயர்.

**23.** பாலை வளர்த்துக் கனங்குழை மாலையுறல்
சால்பென்ப கண்கூடாக் காணுய்—தழைகாதல்
வாலறிவ னாக்க வகையறிக காலத்தால்
தோலொடு நாலைந் தணைந்து.

(சொ-ள்) பாலை வளர்த்து-பாலகனை வளர்த்து, தழை காதல்-பெருகிய ஆசையுடன், தோலொடுநால் ஐந்து அணைந்து காலத்தால்-அழகுடன் நான்கு அல்லது ஐந்து ஆண்டு கூடிய அக்காலத்தில், வால் அறிவன் ஆக்கவகையறிக-(பள்ளியில் வைத்து) தூய அறிவுடையவனுக்குவதற்கு வேண்டும் வழியினை அறிந்து செய்க, கனங்குழை மாலை உறல் சால்பு என்ப-(அவ்வாறு செய்யின்) திரண்ட காதணிகளையுடைய மங்கையின் இன்பத்தையுறுவது பெருமை என்று சொல்வர் (பெரியோர்), கண் கூடா காணுய்-அவ்வின்பத்தினை நீ கண்ணுக்குத் தோன்றும்படி காண்பாய்,



(க-து) நல்ல மைந்தனைப் பெற்றெடுத்து வளர்த்துக் கல்வியறிவுடையவனுகச் செய்தால் இல்லறத்தில் மனையாளுடன் கூடியவின்பம் பெருமையுடையதாம்.

(வி-ம்) பால் என்பது பால் உண்ணும் மகனை யுணர்த்தியது. தழை காதல்-பெருகிய ஆசை. தோல்-அழகு., நால் ஐந்து என்றது நான்காம் ஆண்டின் முடிவிலாவது ஐந்தாம் ஆண்டின்

தொடக்கத்திலாவது மள்ளியின் வைத்தலைக் கருதிக் கூறிய தாம். அணந்து என்ற செய்து என் எச்சத்தைச் செயவென் னெச்சமாக்கிப் பொருள் கொள்க. நால் ஐந்து கூட அக்காலத் தில் வாலறிவனுக்க எனக் கூட்டுக. காலத்தால்-காலத்தில் எனப் பொருள் கொள்க. இளமையிற்கல் என்ற சொற்படி பரு வத்திற் கல்வி பயிற்றல் வேண்டும் என்பதைக் குறித்து "நாலைந்து அணந்து காலத்தால்" என்றார். வாலறிவனுக்க வகையறிந்தாலல்லது பெருமையில்லை. இல்லற வாழ்வின் பயன் நன்மகப்பேறே என்பது தோன்ற " கணங்குழை மாலை யுறல் சால் பென்ப" என்றார். பெருமை என்பது பெரியோர் கூற் றாயினும் இஃது கண்கூடாக நீ பார்க்கக் கூடியதுதான் என் பார், "காணாய்" என்றார். பாலகனை வளர்த்துக் கல்வி பயிற்றி அறிவனுக்கிப் பின் கணங்குழை மாலையுறுதல் சால்பு என்று கூறிய பெரியோர் கூற்றைக் கண் கூடாக் காண்பாய் என்பது கூறப்பட்டது.

(கு-பு) பால் பாலகனையுணர்த்தியது; ஆதலால் ஆகு பெயர். கணங்குழை: அன்மொழித்தொகை. என்ப பலர்பால் வினைமுற்று. கூடாக என்பது கூடா எனக் குறைந்து நின்றது. தழை காதல்: வினைத்தொகை, வாலறிவன்: பண்புத்தொகை.

24. அழுக்குடம்பு யாத்தசீர் மெல்லியலை யானை
முழுக்காட்டி மன்றின்முன் கைத்தாக்—குழிக்கூடல்
என்னே செறிகாமம் பூட்டு மியன்மாறன்
மன்னரசான் மாண்பூப் புலை.

(சொ-ள்) யாத்தசீர் அழுக்கு உடம்பு மெல்லியலை (எலும்பு நரம்பு முதலியவற்றால்) கட்டப்பட்ட சிறப்புடைய அழுக்கும்

பொருந்திய உடலுடைய மங்கையை; ஆணம் முழுக்கு ஆட்டி-பலவகைக் கூட்டுப் பொருள்களைப் பூசி நீராட்டுவித்து (அலங் கரித்து) மன்றின் முன் கைத்தா குழீஇ கூடல் என்னே-அவை யோர் முன் கைப்பற்றிக் கொண்டுபோய்ப் புணர்தல் என்ன வியப்பு! செறிகாமம் பூட்டும் இயல் மாரன்-நெருங்கிய காமத்தை (ஆடவர் மகளிர் என்ற இரு திறத்தார்க்கும்) பூட்டுகின்ற இயல்புடைய மன்மதனுடைய, மன் அரசால் உலகு மாண் பூப்பு-நிலைபெற்ற அரசாட்சியினால் மண்ணுலகமானது மாண் பாக உண்டாவது.

(க-து) அழுக்குடம்புடைய பெண்ணை ஒருவன் அலங் கரித்து மணம் புரிந்து வாழ்கிறான். அதனால் உலகம் மேலும் மேலும் பெருகி நிலைத்து நிற்கிறது.

(வி-ம்) எலும்பு, நரம்பு, தோல், குருதி, மூளை, கொழுப்பு, தசை இவைகளை யொழுங்குட னிறுத்திக்கட்டுவது, எவராலும் முடியாத செயலாதலால் இது சிறப்புடையது என்பது தோன்ற "யாத்தசீர்" என்றார் சீர்-சிறப்பு எனன சிறப்பு, எனின் யாத்த சிறப்பு என்க.சீர் உடம்பு, அழுக்கு உடம்பு எனக் கூட்டுக: "குடருங் கொழுவுங் குருதியு மென்பும், தொடரு நரம்போடு தோலு-மிடையிடையே, வைத்த தடியும் வழும்புமா மற்றிவற்றுள், எத்திறத்தா ளீர்ங்கோதை யாள்" என்று மங்கையரைப் பழித்தபடி காண்க. அழுக்குடைய மங்கையரைப் புனைந்து பூமாலை சூட்டிப் புணர்ந்து இன்பந் துய்ப்பது மன்மதன் மூட்டிய காமமேயன்றி வேறில்லை என்பார், "என்னே" என வியந்தார். காமத்தின் இழிவு தோன்றியது அவ்வியப்பால். மன்மதன் அரசாட்சியால் மக்கள் விளைவு பெருகுகிறது; அவன் அரசின்றெனில் இவ்வளவு மக்கட்கூட்டம் உலகத்தில் காணமுடியாது; அரசுதான் இதற்குக் காரணம் என்பார் "அரசால் மாண் பூப்பு உலகு" என்றார். மாரன் ஆசையை உண்டாக்குகிறான். அதனால் அழுக்குடைய மங்கையரைக் கூடுகின்றனர். அதனால் மக்கட் பேறு மிகப்பெருகி உலகம் பொலிகின்றது என்று காரணம் விளங்குவது காண்க. ஆணம் ஆகும்படி வாசனைக் [illegible]



(கு-பு) மெல்லியல் என்பது மெல்லிய இயல்பினையுடையாள் என அன்மொழித்தொகையாயிற்று. அழுக்கு + உடம்பு முழுக்கு + ஆட்டி: குற்றியலுகரம் கெட்டுப்புணர்ந்தன. குழீஇ- என்பது அளபெடையாயினும் தளைகெடவரலால் அலகு

கொள்ளாமல் விடுக. குழீ என நிரையசையாக்குக. செறி காமம் :வினைத்தொகை.

25. இன்ப வியலோரார் யாணர் விழைகாமம்
பொன்னி னணிமலரிற் செவ்விதாந்—தன்மேனி
முத்த முறுவன் முயக்கொக்கி னன்னத்தின்
பெற்றியரி னென்பெறும் பேறு.

(சொ-ள்) இன்பம் இயல் ஓரார்-காமவின்பத்தின் இலக்கணங்களை யறியார் (சிலர்), யாணர் விழைகாமம் பொன்னின் அணிமலரின் செவ்விது ஆம்-புதுமையாக விரும்பும் காமவின்பம் பொன்னைப்போலவும், அழகிய மலரைப் போலவும் சிறப்புடையதாகும், தன்மேனி முத்தம் முறுவல் முயக்கு ஒக்கின்-ஒருவன் தனது உடம்புக்கு முத்துப்போன்ற பற்களையுடையார் புணர்ச்சி இன்பம் கிடைத்தால், அன்னத்தின் பெற்றியரின் பெறும்பேறு என்-அன்னப்பறவையின் இயல்பு வாய்ந்த அம் மங்கையராற் பெறும் இன்பத்தினும் வேறு சிறந்த பேறு யாது? (இல்லை).

(க-து) காமவின்பத்தின் இயல்பறியார் சிலர் இகழ்ந்து பேசுவர். காமம் பொன்மலர் போல அழகும்,இன்பமும் தருவது. காமத்தைப் போலச் சிறந்த பேறு வேறு ஒன்றும் இல்லை.

(வி-ம்) யாணர்-புதுமை. ஆயுந்தோறும் அறிவுபெருகுவது

போலத் தோயும்தோறும் இன்பம் பெருகுவதால்(புதுமையாய்த் தோன்றுவதால்) "யாணர் விழை காமம்" என்ருர். "அறிதோ றறியாமைகண்டற்றுல் காமம்" என்பதும் ஆய்க. பொன்னைப் போலக் காமம் எப்போதும் ஒரு தன்மையாய் நிற்கும் என்ற கருத்திஞல் "பொன்னின்" என்ருர். புனையும் பூ மணந்தந்து மனத்திற்கு இன்பந்தருவது போலக் காமமும் இன்பந்தரும் என்ற கருத்திஞல் "அணிமலரின்" என்ருர். முத்தமுறுவல் என்



பது முத்துப்போன்ற பற்களையுடையார் எனப் பெண்களை யுணர்த்தியது. ஒருவன் தன் மேனி மகளிர்புணர்ச்சியின்பத்திற் பொருந்திஞல் அதனினும் பெரும்பயன் வேறு ஒன்றும் இன்று என்பார் "முயக்கு ஒக்கின்" என்ருர். ஒக்கின்-பொருந்திஞல். அன்னத்தின் பெற்றியர்-அன்னம் போன்ற நடையழகுடையவர். (மகளிர்) மகளிரினும் சிறந்த பேறில்லை. மகளிரைக் கொண்டு வாழ்வதே சிறந்த வாழ்வு என்பதாம். "பெண்ணிற் பெருந்தக்க யாவுள கற்பென்னும், திண்மையுண் டாகப் பெறின்"என்ற குறட் கருத்தும் காண்க.

(கு-பு) இன்பம்+இயல்-இன்பவியல்-மகரங்கெட்டு உடம் படு மெய்பெற்றுப் புணர்ந்தது : ஆரும் வேற்றுமைத்தொகை. விழைகாமம்: வினைத்தொகை. பெண்ணின், மலரின். இன் : உவமையுருபு. முத்தமுறுவல்: அன்மொழித்தொகை. முயக்கு: முதனிலை திரிந்த தொழிற் பெயர். பேறு என்பதும் அது.

26. தூவி நெருஞ்சிக்காய் நீர்முள்ளி தும்பையலர்
காவியன சேர்கட் குறுந்தொடியார்—ஆவிக்
கினிய ரிணைசேரா ரீர்ங்கண் மாஞாலத்
தனிமைக் கவரோர் கரி.

(சொ-ள்) தூவி நெருஞ்சிக்காய் தும்பையலர் நீர் முள்ளி- அன்னப்பறவையின் சிறகிலுள்ள மயிர்கள் நெருஞ்சிக் காய் முட்களாகவும் தும்பை மலர்கள் நீர் முள்ளியின் முட்களாகவும் தோன்று மெல்லிய அடிகளையும், காவி அன சேல்கண் குறு தொடியார் - நிலமலரும் கெண்டை மீனும் போன்ற விழிகளையும் சிறியவளையலையும் உடைய மகளிர், ஆவிக்கு, இனியர் -(ஆடவரது) உயிர்க்கு இனிமை தருவோராவார்; இணைசேரார் -(அம் மகளிரைத் தமக்கு) இணையாகக் கொண்டு கூடி வாழாதவர்; ஈர்ங்கண் மா ஞாலம்-குளிர்ந்த இடத்தையுடைய பெரிய வுலகத்தில், தனிமைக்கு அவர் ஓர் கரி-தனிமை வாழ்வுக்கு அவ்வாடவர் ஒரு சான்றாவர்.



(க-து) மங்கையரை வாழ்க்கைத் துணையாக மணந்து வாழ்வதே சிறந்த வாழ்வு. அவ்வாழ்வே இன்பந் தருவது. அவரைக் கூடாத வாழ்வு தனிமையுடையது; துன்ப வாழ்வு.

(வி-ம்) தூவி-மென்மையுடையது; தும்பைப் பூவும் மென்மையுடையது. இவ்விரண்டும் நெருஞ்சி முள்ளாகவும், நீர் முள்ளியின் முள்ளாகவும் தோன்றும் மகளிர் அடிக்கு. அத்தகைய மெல்லிய தன்மையுடைய குறுந்தொடியார் எனக் கூட்டுக. "அனிச்சமும் அன்னத்தின் றூவியு மாதர்,அடிக்குநெருஞ்சிப்பழம்" என்ற வள்ளுவர் வாக்கினை நோக்கிடுக. தும்பையலர் நீர்முள்ளி·எதிர் நிரனிறையாகக் கொள்க. தூவியின் மிதிக்கினும் தும்பை மலரின் மிதிக்கினும் நெருஞ்சி, நீர் முள்ளிமேல் மிதிதததுபோல அழுத்தப்பட்டு வருந்தும் இயறகையையுடைய அடியென விரித்துக் கொள்க. அன என்பது உவமையுருபு காவி சேல் அன எனப் பின் கூட்டுக "ஆவிக்கு இனியர்" என்ற குறிபபினால் "ஆடவரது" என்ற சொல் வருவிக்கப்பட்டது. இணைசேரார் தனிமைக்குக் கரி என்று கொள்க. உலக வாழ்வு வாழ்க்கைத் துணையோடு கூடிவாழ்வதேயாம். தனித்து வாழ்வது வாழ்வாகாது. இன்பத்திற்காகவே இவ்வுலகம படைக்கப்பட்டது. குளிர்ந்தது; இடமகனறது; பெரியது. இத்துணைச் சிறப்புடைய வுலகத்தில் தனிமை வாழ்வு தக்கதன்று என்ற கருத்துத் தோன்றும்படி "ஈர்ங்கண் மா ஞாலம" எனச் சிறபபிததார். விலங்குகளும், பறவைகளும் கூடியே வாழ்கின்றன. ஆதலால் அவர்களே அவர்களுக்குச் சான்றுவர் எனபது தோன்ற "அவர் ஓர் கரி" என்றார். வேறு சான்று உலகிற் காட்ட வியலாது என்பது கருத்து.

(கு-பு) குறுமை+தொடியார்: பண்புத்தொகை. நெருஞ்சிக்காய்:ஆகுபெயர்; முள்ளையுணர்த்தலால் நீர் முள்ளியும் அது. சேரார்:எதிர்மறை வினையாலணையும் பெயர். ஈரம்+கண் = ஈர்ங்கண் என அம் குறைந்து வருமொழிக் கினவெழுத்

துப் பெற்று நின்றது. இது பண்புத் தொகை.



27. காமம்வீ ழின்பக் கடலாமே காதலரின்
ஏம விருக்கையே தூந்திரையாம்—ஏமத்தீண்
டாம்பரலே தோன்று மளியூட லாம்பரலிற்
றெற்றித் தெறிப்ப மொளியொளிபாய் கண்ணேசீர்த்
துற்றுகப்பாய்ப் பெற்ற மகவு.

(சொ-ள்) காமம் வீழ் இன்பம் கடல்ஆம்-காமமானது யாவரும் விரும்புகின்ற இன்பக் கடலாகும், காதலரின் ஏமம் இருக்கையே தூம் திரை ஆம்-காதலன் காதலி இருவரும் கூடிய இன்பத்தின் இருக்கையே வீசும் அலையாகும், ஏமத்து ஈண்டு ஆம் அளிபரலே-அவ்வின்பத்தினின்று இங்கு உண்டாகும் அன்பே முத்தாகும், பரலில் தெற்றி தெறித்த ஒளி ஊடல்ஆம்-அம்முத்தினின்று தெளிந்து எழுகின்ற ஒளியே ஊடலாம்; ஒளி பாய் கண்ணே சீர்த்து உகப்பாய் பெற்ற மகவு-அவ்வொளி பாய்கின்ற இடமே சிறந்து மகிழ்வுடன் பெற்ற குழவிகளாம்.

(க-து) காமம் கடலாகும்; புணர்ச்சியே அக்கடலிற்றோன்றும் அலையாம்; அன்பு அலையில் வந்த முத்து ஆம்; ஊடல் அம்முத்தின் ஒளியாகும்; மக்கள் அவ்வொளி கூடும் இடமாகும்.

(வி-ம்) காதலர் இருவர்க்கும் காமத்தின் அளவு குறைவு நிறைவின்றி என்றும் பெருகியிருப்பதாற் காமத்தைக் கடலென்றார்; அலைவருவது போலப் புணர்ச்சி மேன்மேலும் நிகழ்வதால் அதனை அலையென்றார்; காதலன் காதலியாகிய இருவரிடத்தும் புணர்ச்சி நிகழினும் ஒத்த அன்பு தோன்றுவது அருமையாத

லால் அதனை முத்து என்றார். அன்புடையாரிடத்து மேலும் மேலும் ஊடல் நிகழ்வது அன்புப் பெருக்கத்திற்குக் காரணமா தலால் அவ்வூடலை முத்தின் ஒளி யென்றார். புணர்ச்சியால் மக்கட் பேறுண்டாதலால் அவ்வொளி பாயும் இடமே மக்கள் என்றார். எனவே காமம் தோன்றிக் காதலன் காதலியாய்ப் புணர்ந்து அன்பு அரும்பிப் பின்னர் ஊடலும் கூடலுமாய் வாழ்ந்து மக்கட்பேறு பெறும் இன்ப வாழ்வு இல்லறம் என விளக்கினர் எனக் கொள்க. வள்ளுவரும் "இன்பம் கடல் மற்று" என்றும், "காமக்கடல் மன்னும் உண்டே" என்றும் கூறியது



காண்க. "அன்புற்றமர்ந்த வழக்கென்ப வையகத், தின்புற்ரு ரெய்துஞ் சிறப்பு" என்பதும், "புலத்தலிற்புத்தேளு டுண்டோ" என்பதும், "ஊடுதல் காமத்திற் கின்ப மதற்கின்பங் கூடி முயங்கப் பெறின்" என்பதும் "மங்கலமென்ப மனைமாட்சி மற்றதன்,நன்கலம் நன்மக்கட்பேறு" என்பதும், அன்பு, ஊடல், கூடல், மக்கட்பேறு இவற்றின் சிறப்பை எடுத்துரைப்பனவாம்.

(கு-பு) வீழ் இன்பம்,வினைத்தொகை. ஏமவிருக்கை: இருபெயரொட்டுப் பண்பு. தூவும் திரை என்பது உயிர் மெய் கெட்டுத் தூந்திரை என நின்றது "செய்யுமெனெச்ச வீற்றுயிர் மெய் சேறலும்" என்பது விதி. ஆம்பரல் என்பதும் அது. சீர்த்து+உற்று+உகப்பு+ஆய் என்பவை குற்றுகரங்கெட்டு நின்றன. பாய்கண்:வினைத்தொகை;ஏ:அசை.

28. கறங்குபறை காணு வுறலூனைக் காதற்
பிறங்கறை நாவாரு மஃதே—திறமிரங்கி
யூடி யுணர்வாரே தாமிசைவார் பல்காலம்
ஈடில தோரின்ப விருந்து.

(சொ-ள்) உறு ஊனை கறங்கு பறை காணு-பலியிடும்போது தன் பாலுற்ற ஊனினது சுவையை ஒலிக்கின்ற பறைகள் அறியா, காதல்பிறங்க அறை நாவாரும் அஃதே-காதலை விளங் கச் சொல்லுகின்ற நாவினையுடையவரும் அப்பறைகள் போலக் காதற் சுவையை யறியார்; திறம் இரங்கி ஊடி உணர்வாரே- (காதலிருவரும்) தன்மையறிந்து மனமிரங்கிப் புலந்து பின் அப்புலவி நீங்கிக் கூடியவரே, ஈடு இலது ஓர் இன்ப விருந்து பல்காலம் தாம் மிசைவர்-ஒப்பற்றதாகிய ஓர் இன்ப விருந்தி னைப் பலகாலமும் தாம் நுகர்ந்து சுவையறிபவராவர்.

(க-து) காதற் சுவையைப் பலர்க்கும் விரித்துப் பேசுவார் எல்லாரும் காமச்சுவையையறியார், காதலர் இருவரும் இயல் பறிந்து பிரிவுக்கிரங்கிப் பின் ஊடியும் கூடியும் போகம் நுகர்ந்த வரே சுவையறிந்தவராவர்.

(வி-ம்) ஊன் என்பது இங்குப் பலியிடுங் குருதியையுணர்த் திச் சுவையைக் குறிப்பாகக் காட்டியது. ஊன்-தசை. அது



ஆகுபெயராயிற்று. வெற்றிகண்ட மன்னர்கள் தம் போர்ப்பறை கனை நீராட்டிக் குருதிப் பலியூட்டி யரசுகட்டிலேற்றி விழாக் கொண்டாடுவது மரபு. ஒலிக்கின்ற பறைக்கு அதன்மேல் பலி யூட்டும்போது வழிந்த குருதியின் சுவைதெரியாது என்பார். "கறங்குபறை காணுவுறுவூனை" என்றார். குருதி தன் மேல் வழிந்தும் அதன் சுவையையறியாத பறையைப் போலச் சிலர் மங்கையரோடு கலந்திருந்தும் இன்பச்சுவையையறியார் என்ற கருத்தினால் "அஃதே" என்றார். காதலரிருவரும் கருத்தொரு

மித்து ஒருவரியல்பை மற்ருெருவரறிந்து பிரிவுக்கிரங்கி இடனறிந்து ஊடி இனிதின் உணர்ந்து பின் கூடிக் காதற் சுவையறிந்தவர்க்கே அதன் சிறப்புத்தோன்றும் என்று கூறுவார் உணர்வாரே....தாமிசைவார் என்ருர். இதனுல் இன்பச்சிறப்புக் கூறப்பட்டது.

(கு-பு) கறங்கு பறை:வினைத்தொகை. உறுவூன் என்பதும் அது. பிறங்க அறை என்பது அகரந்தொக்குப் பிறங்கரை என நின்றது தொகுத்தல் விகாரம். அஃது + ஏ:தேற்றம். அறைநாவார்-வினைத்தொகை. நாவார் + உம்: உம்மை எச்சப் பொருளில் வந்தது. இன்பவிருந்து:இருபெயரொட்டு. உணர்வார்: வினையாலணையும் பெயர். அது எழுவாயாக நின்று மிசைவார் என்ற பயனிலை கொண்டது.

29. தோற்ருரே வெல்வர் துணைமிசைவார் கோட்டியானை
யேற்றுக கழறெடியார் மிக்காரை யார்வரைவர்
போற்றவி கூடல் கரி.

(சொ-ள்) ஏற்றுயானைக் கோட்டு கழல் தொடியார்-ஆண் யானைத் தந்தத்தாற செய்த வீரக்கழலும் வளையலும் அணிந்த ஆடவர் மகளிரில், மிக்காரை யார் வரைவர்-உயர்ந்தவர்களை யார் மணஞ்செய்துகொள்வர் (ஒப்பவரையே மணம்புரிவர்), துணைமிசைவார்-(அவ்வாறு ஒத்த) வாழ்க்கைத் துணையாக அமைந்து காமவின்பம் நுகர்வாரில், தோற்ருரே வெல்வர்-ஊடலில் தோல்வியடைந்தவரே வென்றவராவர்; கரிபோற்று அனி கூடல்-அதற்குச் சான்று தோற்றவர் போற்றுவதும் தலையளி செய்வதும் கூடுவதும் ஆகிய செயல்களேயாம்.

(க-து) கழல்-ஆடவர்க்குரியது ; தொடி-மகளிர்க்குரியது ; கழல் தொடியார் எனவே கழலும் தொடியும் அணிந்தவர் என அவ்விருவரையும் குறிப்பாக உணர்த்திற்று. "ஒத்த கிழவனும் கிழத்தியும் காண்ப" என்றும் பிறப்பே குடிமை ஆண்மை, ஆண்டோடு உருவு நிறுத்த காமவாயில், நிறையே யருளே யுணர்வொடு திருவென, முறையுறக் கிளந்த ஒப்பினது வகையே" என்றும் தொல்காப்பியம் கூறுவதால் "மிக்காரை யார் வரைவர்" என்றார். இருவரும் ஒத்தவராயமைந்தால் அது வாழ்க்கைத் துணையென மதிக்கப்படும் என்பது கருத்து. வாழ்க்கைத் துணையாக மதித்து மணம்புரிந்த காதலர் இருவரினும் "தோற்றாரே வெல்வர் எனக்கொள்க. காதலன், காதலியாகிய இருவரிடத்தும் ஊடல் நிகழ்வதுண்டு. "யானூடத்தானுணர்த்த யானுணராவிட்டதற்பின், தானூட யானுணர்த்தத் தானுணரான்" எனறு தலைவி கூறுவது சான்றும். ஊடியிருந்த தலைவியைத் தலைவன் இன்சொற்கூறி யிரந்து வேண்டுவன், அதுபோலவே தலைவன் ஊடியிருப்பின் தலைவியும் வேண்டுவள் இருவரும் பின் புலவிநீங்கிக் கூடுவர். இவ்வாறு ஊடல் நிகழ்ந்து பின் கூடுவது மிகவும் இன்பம் பயக்கும் என்பது அறிஞர் கண்டவுண்மை. ஊடியிருந்த இருவரில் ஒருவர்க்குக் காமம் மிகின் அவர் பிணக்கு நீங்கி முதலிற் கூடுதற்கு மனங் கொள்வர். அவரையே தோற்றவர் என்று கொள்க. அவர் புணர்ச்சி விருப்ப மிகவும் உடையர் ஆதலால் அவரே புணர்ச்சிப்போரில் வெல்வார் என்பது குறிப்பு. வள்ளுவரும் "ஊடலிற் றோற்றவர் வென்றா ரதுமன்னும் கூடலிற் காணப் படும்" என்றார். இதனுண்மையாய்க. அவரது தலையளியும் கூடலும் அவர் வென்றமையை யுணர்த்துஞ் சான்றும் என்பார் " போற்று அளி கூடல் கரி" என்றார்.

(கு-பு) தோற்றார்: வினையாலணையும் பெயர் ஏகாரம்: தேற்றப்பொருளில் வந்தது. வெல்வர்: பலர்பாற் படர்க்கை எதிர்கால வினைமுற்று. போற்று அளிகூடல்: உம்மைத் தொகைகள். யார்: வினாக்குறிப்பு. கோடு+யானை-கோட்டியானை: நெடிற்றொடர் இரட்டித்துப் பின் யகரம்வர இகரம் பெற்றும் புணர்ந்தது.

44 இன்னிசை

30. காதல் விரிநிலத் தார வகைகாணார்
சாதனன் றென்ப தகைமையோர் — காதலும்
ஆக்கி யளித்தழிக்குங் கந்தழியின் பேருருவே
நோக்கிலரை நோவ தெவன்.

(சொ-ள்) விரிநிலத்து-பரந்த மண்ணுலகத்தில், காதல் ஆராவகை காணார்-காதலின்பம் (எப்போதும்) நிறையாதிருக்கும் விதத்தையறியாதவர்கள் ; சாதல் நன்று என்ப-(காதலின்பத்தைக் கருதிவாழ்வதினும்) சாவதே நல்லது என்று சொல்லுவார் ; தகைமையோர் காதலும் ஆக்கி அளித்து அழிக்கும் கந்தழியின் பேர் உருவே-நற்பண்புடையோரது காதலின்பமும் படைத்துக் காத்துத் துடைக்கும் கடவுளின் பெருமையாகிய வடிவமேயாகும் ; நோக்கிலரை நோவது எவன்-(இவ்வுண்மையை) ஆராய்ந்து அறியும் அறிவில்லாதவர்களைக் குறித்து வருந்துவது என்னபயன்.

(க-து) காமவின்பத்தின் இயல்பு அறியாதவர் இறந்து பேரின்பம் அடைவதே நல்லது என்பார், ஆராய்ந்து பார்த்தால்

இச்சிற்றின்பமும் பேரின்பத்திற்கு வழியாகும். ஆதலால் சிற்றின்பத்தினைத் துய்த்து வாழ்வதே நல்லது.

(வி-ம்) காதலின்பம்மனத்தில் நிறைவுற்று இனி வேண்டாம் என்றுவெறுக்கும் அளவுக்கு வராது; இன்னும்துய்க்கவேண்டும் துய்க்கவேண்டும் என்றே மனங்கருதும்; ஆதலால் அவ்வின்பம் ஆராவியற்கையுடையது என்றும், அதனியற்கையையறிந்தவர் முடிவுவரை காத லின்பத்தினை யடைந்தே வாழக் கருதுவர்; என்றும் இறக்கக் கருதார் என்ற கருத்தும் விளங்க "காதல் ஆராவகை காணார் சாதல் நன்று என்ப" என்றார். நற்பண்புடையோர் காதல், தீது விளைத்தலின்றி இன்பத்தையே தந்து மக்களைப் படைத்துக் காத்து முடிவில் தாமும் இறந்து மக்களும் இறந்துவிடுவதற்குக் காரணமாயிருத்தலால் அத்தகையோர் காதலும் கந்தழியின் பேருருவமேயாகும் என்றார். கந்தழி-பற்றுக் கோடற்றது; கடவுள். கடவுள் படைக்கின்றார் மனிதர்



முதலிய பலவுயிர்களை. காதலும் மகப்பேற்றை விளைக்கிறது; காக்கின்றார் கடவுள் பல்லுயிர்களை, காதலும் பெற்றமக்களைக் காக்கின்றது. பின்னர்க் கடவுள் எல்லாவுயிர்களையும் அழிக்கின்றார். பிறந்த மக்களையும் காதல் அழிக்கின்றது. கடவுள் நேர்வந்து உயிர்களையழிக்கின்றனரா ? இல்லை. பலகாரணங்களால் உயிர்கள் அழிவதைக் கடவுள் அழிப்பதாகக் கூறுகின்றோம்; அதுபோலக் காதலாற் பிறந்த குழந்தைகள் அழிவதையும் காதல் அழித்ததாகக் கூறுகிறோம். இவ்வொப்பினால் தகைமையோர் காதலும் கந்தழியின் பேருருவும் ஒக்குமெனக் கொள்க. ஆராயாதவர்கள் சிற்றின்பம் என்

றும் பேரின்பம் என்றும் கூறுவர். ஆராய்ந்தால் சிற்றின்பமே தான் பேரின்பத்தையும் கொடுக்கும் என்பது கருத்து.

(கு-பு) காதல், சாதல்: தொழிற் பெயர்கள். விரிநிலத்து: வினைத்தொகை. ஆரா.ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். காணூர்.எதிர்மறை வினையாலணையும் பெயர். சாதல்+நன்று வருமொழிநகரம் னகரமாகத் திரிந்து நிலைமொழியீறு கெட்டு நின்றது. என்ப:பலர்பாற் படர்க்கை வினைமுற்று.

31. அளகு மளிநாகைப் பேண வணியார்
அழகரிவை வீழ்முயக்கை யண்ணுத்—தளியாளர்
பெற்ற பிறக்கெறிந்து புத்தாய பெட்டுழலும்
பெற்றியர் பெட்ட கழுது.

(சொ-ள்) அளகும்அளி நாகைப் பேண-பெண்பறவைகளும் அன்பினால் இளமையான குஞ்சுகளைப் பேணிவளர்க்கவும், அணிஆர் அழகு அரிவை வீழ்முயக்கை அண்ணு தளியாளர்-(அதனைக்கண்டும்) நகைநிறைந்த இயற்கையழகுடைய பெண்கள் விருப்பமான புணர்ச்சியின்பத்தைக் கருதாத கோயிலையிடமாகக் கொண்ட துறவிகள்; பெற்ற பிறக்கு எறிந்து புத்தாய பெட்டு உழலும் பெற்றியர்-தாம்பெற்ற பொருள்களைப் புறம்பாக எறிந்துவிட்டுப் புதிதாகிய பொருள்களைவிரும்பிஉழன்று திரியும் இயல்புடையவராவார்; பெட்டகழுது-(அவர்கள் மேலுமேலும் உணவைமட்டும்) விரும்பிய பசாசு ஆவர்.

(சு-து) மங்கையரின்பத்தைக் கருதாத மனமுடைய துறவிகள் பெற்றபொருளை யெறிந்துவிட்டு வேறுபொருள் தேடியுழலும் பித்தர் போன்றவர். பசாசு போன்றவர்கள் என்றுங் கூறலாம்.

(வி-ம்) பெண்பறவை தம் குஞ்சுகளைப் பேணுவது கண்டால் இவ்வாறு நாமும் குழந்தைகளைப் பெறுவிப்பதற்குப் பெண்களை மணந்து இல்லறத்தில் வாழவேண்டும் என்ற கருத்து மனிதரெல்லார்க்கும் உண்டாகும், அதனைக்கண்டும் புணர்ச்சியை விரும்பாதவர் மனையை விரும்பாமற் கோவிலையே தம் மனையாகக் கருதிவாழ்வார் என்ற குறிப்புத்தோன்ற, "அண்ணுத்தளியாளர்" என்றார். தளி-கோயில், ஆளர்-ஆள்பவர். கோவிலையிடமாகக் கொண்டவர் என்பது. துறவிகள் ஊருக்குட் சென்று பிச்சைவாங்கியுண்டு கோவிலில உறங்குவது பெரும்பான்மையும் வழக்கம். மங்கையரோடு மருவும் இன்பம் உலகிலிருக்கவும் இதனை நீக்கிப் பேரின்பம் ஒன்று உண்டென்றும் அது குறித்து விரதம் நோன்பு பூண்டு கடவுளையே கருதி இல்வாழ்வை வெறுத்துப் பேரின்ப வாழ்வை விரும்பியிருப்பது தம்கையிற் கிடைத்த பொருள்களை யெறிந்துவிட்டுப் புதுப் பொருள் தேடியுழல்வார் செயலாகும் என்றுதோன்ற, 'பெற்ற.... பெற்றியர்' என்றார். மக்கள் இல்லறத்தைவிரும்பிப் பின் துறவு பூண்பதே மேல் என்பது கருத்து. கழுது-பேய், பசாசு. உணவைமட்டும் விரும்பிய பசாசு என்று பொருள்படும்படி பெட்டகழுது என்றார். கனி காய் கிழங்குகளைத் தின்று மலைகளில் வசிப்பவர்களே உண்மைத் துறவிகள் என்பது இவர் கருத்துப்போலும்.

(கு-பு) அழகு+அரிவை: குற்றியலுகரங் கெட்டு நின்றது. இரண்டனுருபும் பயனும் தொக்கதொகை. வீழ்முயக்கு. வினைத் தொகை. அன்னஞ: ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பெற்ற: பலவின்பால் வினையாலணையும் பெயர், புத்தாய என்பதும் அதுஇ

## வீட்டுப்பால்

32\. ஒத்த வுரிமையளா ஞூடற் கினியளாக்
குற்ற மொருஉங் குணத்தளாக்—கற்றறிஞர்ப்
பேணுந் தகையளாக் கொண்கன் குறிப்பறிந்து
நாணுந் தகையளாம் பெண்.

(சொ-ள்) ஒத்த உரிமையள் ஆ-(பிறப்பு முதலியவற்றால்) ஒத்த உரிமையுடையவளாகியும், ஊடற்கு இனியவள் ஆ-ஊட லில் இனிமையுடையவளாகியும், குற்றம் ஒருஉம் குணத்தள் ஆ-குற்றங்கள் நீங்கிய நற்குணங்களையுடையவளாகியும், கற்ற அறிஞர் பேணும் தகையள் ஆ- (பலநூல்களையும்) கற்ற அறிவுடையவரைப்பேணும் தன்மையுடையவளாகியும், கொண் கன் குறிப்பு அறிந்து நாணும் தகையள் பெண் ஆம்-கணவ னுடைய குறிப்பினை அறிந்து (அதற்கியைய) நாணுகின்ற தன் மையுடையவளே பெண் ஆவள்.

(க-து) ஒத்தவுரிமையும், ஊடலினிமையும், குற்ற நீங்கிய குணமும், கற்றவரைப் பேணும் கருத்தும், கணவன் குறிப் பறிந்து நாணும் பண்பும் உடையவளே இல்லறத்திற்குத் தக்க பெண்ணாவள்.

(வி-ம) ஒத்தவுரிமையாவது "பிறப்பே குடிமை யாண்மை

யாண்டொடு உருவு நிறுத்த காம வாயில், நிறையே அருளே யுணர்வொடு திருவென முறையுறக் கிளந்த வொப்பினது வகையே" என்ற தொல்காப்பியர் கருத்தின்படி பத்து வகையிலும் ஒத்த வுரிமையாம். ஊடலினினிமையாவது, "இடனறிந் தூடி]இனிதி னுணரு மடமொழி மாதராள் பெண்" என்ற நாலடியாரிற் கூறியபடியும், "உப்பமைந் தற்றாற் புலவி யதுசிறிது,மிக் கற்று னீள விடல்" என்ற குறட் கருத்தின்படியும், ஊடும் அமையம் அறிந்து ஊடி உணரும் அமையம் அறிந்து உணர்வதாம். கலவி மேலெழுந்த காதலன் குறிப்பறிந்து உணர்தலே இனிமையாம். புலவி நீட்டித்தல் இன்னாது எனக் காண்க.



"மனைத்தக்க மாண்புடைய ளாகித்தற் கொண்டான், வளத்தக்காள் வாழ்க்கைத் துணை" என்றும்," தற்காத்துத் தற்கொண்டாற்,பேணித் தகைசான்ற, சொற்காத்துச் சோர்விலாள் பெண்" என்றும் வள்ளுவர் கூறிய நற்பண்புகள் அமைந்துள்ளவள் என்பது தோன்ற "குற்றமொரூஉங் குணத்தள்" என்றார். குணங்களினீங்கிய பண்புகள் யாவும் குற்றமெனப்படும் என்றுணர்க: அறிவுடையோரைப் பேணின் அறிவு மிகவும் விளங்கும். ஆதலாற் பெண்களுக்கு அறிவுடையோரைப் பேணி நட்புக்கொள்ளுதல் நற்குணமாம். கொண்கன் குறிப்பறிந்து நாணுதலாவது அவன் மனத்துளெண்ணிய எண்ணத்தையறிந்து அதன்படி நாணியொழுகுதலாம். நாணம் என்பது இயற்கையாகப் பெண்கட்கு அமைந்த குணமாயினும் கணவன் குறிப்பறிந்து நாணத்தைக் கொள்வதும் நாணத்தை விடுவதுங் குற்றமல்ல என்பது தோன்ற, "குறிப்பறிந்து நாணுந்

தகையள்" என்ருர். "நறைமலர்க் குழலார் தமக்குமெய் யகலா நாணமே நலஞ்செய்பூ ணெனினும், நிறையுடைப் பெரும்பூ ணமளிவாய் நாண நிகழ்வுரு நிகழ்ச்சியே யன்ருே" எனப் பள்ளியிற் கணவன் குறிப்பறிந்து நாணத்தை விடுத்தலைப் பெரும் பூண் எனப் பேசுவதும் காண்க. இதனுல் இல்லறத்திற்கு இப்பண்புடையவளே தக்கவள் என்று கூறினர்.

(கு-பு) உரிமையள்+ஆ. இதில் ஆ என்பது, ஆகி என்னும் வினையெச்சங் குறைந்து நின்றது. அவ்வினையெச்சம் பல அடுக்கி ஆம் என்னும் வினைமுற்றைக் கொண்டு முடிந்தது உரிமையள்,இனியள் என்பனபோல வந்தவை வினையாலணையும் பெயர்கள். கற்ற+அறிஞர் : அகரம் தொகுத்தல்.

33. மனைக்கொளி சேய் நாற்பணியோன் நாரப் புலக்கார்
விளைக்கொளியாங் கட்கா மனலி—முனைக்கஞ்சா
வீரரொளியா மடமே யரிவையர்க்காம்
ஏரொளியா மில்லுடையான் றப்பு.

(சொ-ள்) மனைக்கு ஒளி சேய்-வீட்டிற்கு விளக்கு மக்கள் ஆவர், நாரம் புலக்கு ஆர் விளைக்கு ஒளி நற்பணியோன்-நீர் பொருந்திய நிலத்திற்குச் செய்யும் தொழிலுக்கு விளக்கு



நான்கு தொழிலும் அறிந்த உழவனேயாவன். கட்கு அனலி-விழிகளுக்கு விளக்காவது சூரியனேயாவன், முனைக்கு அஞ்சா வீரர் ஒளியாம்-போர் முனைக்கு அஞ்சாத படைவீரர்களே

விளக்கு ஆவர், அரிவையர்க்கு மடமேஆம்-மங்கையருக்கு விளக்கு மடமை யென்னும் பண்பேயாகும், இல் உடையான் துப்பு ஒளி ஏர் ஆம்-இல்வாழ்வான் வலிமைக்கு விளக்கு ஏருழுதல் என்னுந் தொழிலாம்.

(க-து) மனைக்கு மக்களும், நிலத்திற்கு உழவனும், கண்ணுக்குக் கதிரவனும், போருக்கு வீரரும்; பெண்ணுக்கு மடமையும், இல்வாழ்வானுக்குப் பயிர்த்தொழிலும் சிறப்பைத்தருவனவாம்.

(வி-ம்) "மைந்தன் மனைக்கு மணி" என்ற நீதி வெண்பாவின் அடியும், "கண்ணில் யாக்கையும் திங்களில் கங்குலும் கண்போல், அண்ணன் மந்திரி யில்லர சாட்சியு மருளில், திண்ணெனெஞ்சமும் புலவரி லவையுமொண் டீம்பால், வண்ண வாயிள மக்களில் வாழ்வுமொப் பாமால்" என்ற சீகாளத்திப் புராணக் கவியும் மக்களின் சிறப்பை விளக்குவது காண்க. நாரம் - நீர், புலம்-நிலம். புலத்திற்கு எனச் சாரியை பெற்றுவராது புலக்கு என நான்கனுருபு வந்தது. நீர் பொருந்திய நிலமாவன:வயல், தோட்டம் என்பன. எனவே சிறந்த விளைநிலம் என்பது குறிப்பு.ஆர் வினை-பொருந்திய தொழில்கள். உழவு, களையெடுத்தல், நீர்பாய்ச்சல் முதலிய தொழில்களை யுணர்த்திற்று. நாற்பணியோன் என்றது உழவனை. அவனுக்கு உழுதல், எருவிடுதல் களைகட்டல் நீர் பாய்ச்சல் ஆகிய நான்கு தொழிலும் சிறந்தனவாதல் பற்றி "நாற்பணியோன்" என்றார். வள்ளுவரும் "ஏரினும் நன்றா லெருவிடுதல் கட்டபின், நீரினும் நன்றதன் காப்பு" என்று கூறி இறுதியிற் காப்புத் தொழிலையும் உடன் சேர்த்தனர். காவல் உழவர்க்கே யுரிய சிறப்புத் தொழில் அன்று என்பது இவர் கருத்துப் போலும்; " எண்ணுக்கு வரும்

புவனம் யாவினுக்கும் கண்ணுவா னிவனே யன்றே'' எனவும், ''மலர் தலை யுலகத்திருளெறிவிளக்கும்,மன்னுயிர் விழிக்கக் கண்
4



ணரிய கண்ணும்'' எனவும் சூரியனைப் பிறபுலவர்களும் கண்ணு கக் கூறியிருப்பது நோக்குக. கதிரவனொளியில்லை யெனிற் கண் ணொளியாற் பயனின்றென்பது எவர்க்குந் தெரிந்ததே. வெற்றி பெற்ற வீரர் போரில் விளக்குப்போல் ஒளிர்தலின் முனைக்கு அவர் ஒளியென்றார். மடம் என்பது மகளிர் குணத்தின் முதன் மைக் குணம். அது கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை என்பர். இல்வாழ்வார்க்குச் சிறந்த தொழில் பயிர்த்தொழில் என்பது யாவர்க்குந் தெரிந்ததே; உலகத்துள் உணவும் உடை யும் அத்தொழிலால் வருவன எனின் அதன் உயர்வு கூறல் வேண்டுமோ? இல்லறச் சிறப்பு இதனாற் கூறப்பட்டது.

(கு-பு) மனைக்கு, வினைக்கு, முனைக்கு, என்ற குற்றுகரங் கள் கெட்டுப்புணர்ந்தன. நான்கு + பணி நாற்பணி,கண் + கு = கட்கு என்றாயிற்று, ஆகும் — ஆம் என நின்றது.

34. எய்ப்பில்வைப் பாக வருவாயி லைந்தொன்றை
மெய்ப்பிணி செய்வரைவிற் கூட்டிடுக — கைப்பொருள்
இட்டினும் வாயிடுக்க வீங்க விழையற்க வாய்
வட்டன் மனைக்கிழவன் மாண்பு.

(சொ-ள்) கைப்பொருள் வாய் இட்டில் உய்வாய் இடுக்க-கைப்பொருள் வருவாய் குறைந்தால் செலவுவழியையும் சுருக்குக, வீங்க விழையற்க- தன்னைப்பெருக்கிக்காட்ட விரும்பற்க; வட்டல் மனைக்கிழவன் மாண்பு-பொருளைத் திரட்டுவதே மனைக்குரிய தலைவன் செயலாகும், வருவாயில் ஐந்துஒன்றை-தனக்கு வரும் வருவாயில் ஐந்தில் ஒருபங்கை, எய்ப்பில் வைப்பாக-இளைத்த பருவத்தில் (கிழப்பருவத்தில்) நுகர்தற்குரிய சேமப்பொருளாகவும், மெய்ப்பிணி-உடற்பிணிக்கு வேண்டும் மருந்துண்டற்குரிய பொருளாகவும், சேய்வரைவில்-மக்கட்கு மணம் புரியும் செலவிற்குரிய பொருளாகவும், கூட்டிடுக-சேர்த்து வைத்திடுக.

(க-து) வீட்டுக்குரிய தலைவன் பொருளைச் சேர்க்க வேண்டும்; வருவாய் குறைந்தாற் செலவைக் குறைக்கவேண்டும்; ஐந்தில் ஒரு பங்கைச் சேம நிதியாக வைத்திருக்க வேண்டும்;



அப்பொருள் மக்கள் மணத்திற்கும் தன் முதுமைப்பருவத்திற்கும் நோய்க்கும் உதவியாகும்.

(வி-ம்) வரவுக்குத்தக்கவாறு செலவு செய்யவேண்

வரவிற்குக்குறைந்த செலவே தக்கதாம். வரவிற்கு மேற்செலவு செய்வது தகாததாம். 'ஆகா றளவிட்டி தாயினும் கேடில்லை, போகா றகலாக் கடை' என்பதும், "அளவறிந்து வாழாதான் வாழ்க்கை யுளபோல, இல்லாகித் தோன்றாக் கெடும்' என்பதும் ஈண்டுக் கருதத்தக்கன. ஆறில் ஒருபங்கு அரசனுக்கு இறையாகக் கொடுக்கபபடும் ஆதலால் ஐந்து பங்கில் ஒன்றை என்றார். ஆண்டுதோறும் ஐந்தில் ஒருபங்கைச் சேர்த்துச் சேமவைப்

பாக வைத்திருந்தால் அது மக்கட்கு மண முடிக்கவும் நோய் வந்தால் மருந்துண்பதற்கும் முதுமைப்பருவத்தில் உதவியாகும் என்பது கருத்து. வீங்க-பெருக. இது தன்னைப் பிறர்க்குப் பெருக்கிக் காட்ட என்ற பொருளைத் தந்தது. வெளித்தோற்றம் பெருமையாகக்காட்டுவது, இதனை "ஆடம்பரம்" என்பர். அதனாற் பயனின்று'என்பார், "விழையற்க" என்றார். வட்டல-திரட்டுதல்; இது பொருளைத்திரட்டுதல் என்ற பொருளைத்தந்தது. "பொருளில்லார்க், கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்ற குறளடியை நினைவு கூர்க.

(கு-பு) மெய்ப்பிணி: ஏழனுருபும் பயனும் உடன்றொக்க தொகை. எய்ப்பு, வைப்பு எனபனதொழிற்பெயர்; ஆகுபெயரால் முதுமையையும் பொருளையும்உணர்த்தின. உய்வாய்-உய்க்கும் வாய் என வினைத்தொகையாயிற்று. இடுக்க : வியங்கோள், விழையற்க:எதிர்மறை வியங்கோள்,

35. ஐம்புலத்தோர் நல்குரவோ ரோம்பித் தலைப்பட்ட
செம்பாக நன்மனையைப் பேணிக்—கடாவுய்த்த
பைம்பு விலைபேணி யூற்ப்ப வடுவடார்
ஐம்புலமிர்த் தாரிற் றலை.

(சொ-ள்) ஐம்புலத்தோர் நல்குரவோர் ஓம்பி-தென்புலத்தார் முதலிய ஐந்து திறத்தாரையும் வறியவரையும் காத்து, தலைப்பட்ட செம்பாகம் தன் மனையைப் பேணி-தம்மைச்சார்ந்த

ஒழுங்காகிய பங்கினுல் நல்ல மனைவியைக்காத்து, கடாஉய்த்த பைம்புல் நிலைபேணி-எருமைக்கடாக்களைச் செலுத்தி யுழுத பசிய புல் நிற்கும் நிலையையுடைய நிலங்களைக் காத்து, வாழ்ப்ப வடு அடார்-சிறக்கும்படி குற்றம் பொருந்தாத வாழ்க்கையுடையவர், ஐம்புலம் ஈர்த்தாரில் தலை-ஐம்புலங்களையும் வென்ற முனிவரினும் முதன்மையாவர்.

(க-து) இல்வாழ்க்கையை முறைப்படி நடத்தி வாழ்பவர் ஐம்புலமடக்கிய முனிவரினும் சிறந்தவர்.

(வி-ம்) ஐம்புலத்தோர் என்றது, தென்புலத்தார், தெய்வம், விருந்து, ஒக்கல், தான் என்ற ஐந்து இடத்தாரை யுணர்த்தியது. நல்குரவோர்-வறுமையுடையவர். ஐம்புலத்தோரை யோம்பி நல்குர வோரையும் ஓம்பி என உம்மையும் உருபும் விரித்துக்கொள்க. தலைப்பட்ட என்பது ஐந்து பங்கில் ஒன்ருகத் தம் மிடத்துச்சேர்ந்த பொருளை யுணர்த்தியது. செம்பாகம், கூடுதல் குறைதலின்றிப் பிரித்த பாகம் என்பதை விளக்கியது. தன்னைப்போலவே தன் மனைவியும் உணவு உடை முதலியவற்ருற் சிறந்து வாழ வேண்டும் என்று கணவன் கருதி அப்பங்கில் தனக்கு மிகுதியாக வைக்காமல் அவளுக்கும் அதிற் பாதி யுதவிப்பேணவேண்டும் என்ற கருத்து விளங்க "செம்பாகம் நன் மனையைப்பேணி" என்ருர். கடாவுய்த்த என்பது உழவு செய்த என்ற பொருளில் நின்றது. பைம் புல் நிலை என்பது, நன்னிலம் என்பதை யுணர்த்தியது. "புல் முளையாத பொட்டல்" என்று உலகில் உவர்த்தரையைக் கூறுவதும் அறிக. புல் முளைத்துத் தழைத்திருக்கும் நிலங்களே நன்செய்யாம்,

உழுத நிலங்களைக்காப்பதும் இல்வாழ்வான் கடமையாம் என்பதனைப் "பைம்புனிலை பேணி" என்றார். வடு-குற்றம், அடார்-அடுக்காதவர்:குற்றம் சேராதவர் எனப் பொருள் பட்டது. செய்ந்நன்றி மறத்தல், பிறனில் விழைதல் போன்ற கொடிய குற்றங்கள் இல்லறத்தாருக்குச் சேரின் அவர் சிறப்படையார். அக்குற்றங்களின்றி வாழ்ந்தவரே முனிவரினும் தலையாவார் என்பது கருத்து. ஈர்த்தார் என்பது ஐம்புலமும் தன்னையிழுக்க அவற்றின் வழியே சென்றுழலாமல் அப்புலங்களைத் தன் வச



மாக இழுத்தவர் என்பதை விளக்கியது. ஈர்த்தல்—இழுத்தல். "ஐந்தவித்தான்" என்று வள்ளுவர் கூறியதன் பொருளும் அதுவே.

(கு-பு) செம்மை+பாகம்—செம்பாகம். நன்மை+மனை—நன்மனை. பசுமை+புல் பைம்புல்:இவை பண்புத்தொகை. புன்னிலை; ஆகுபெயராய் நிலத்தை யுணர்த்தியது. அடார்: வினையாலணையும் பெயர்.ஈர்த்தார் என்பதும் அது.

36. உள்ளவா சேற லியைபெனினும் போம்வாய
வெள்ளத் தனசேறல் வேண்டல்—மனைக்கிறைவன்
நன்னளவின் மிக்காய காற்றொழிலை யோம்பலே
தெள்ளறிஞர் கண்ட நெறி.

(சொ-ள்) உள்ளஆ சேறல் இயைபு எனினும்-தன்னிடத்தில் உள்ள பொருளுக்கு ஏற்றவாறு செலவழித்து நடப்பது பொருத்தமென்றாலும், போம்வாய வெள்ளத்து அன சேறல் வேண்டல்-செலவழிக்க வேண்டிய இடத்தில் வெள்ளத்தைப்

போலப் பெருக்கமாகச் செலவு செய்து நடப்பதை விரும்பற்க; மனைக்கிழவன்-ஒரு மனைக்குரிமையுடைய தலைவன், நள் அளவின் மிக்காய கால் தொழிலை ஓம்பலே - விரும்பும் அளவிற்கு மேற்பட்ட அளவுடைய முயற்சியை விலக்குவதே, தெள் அறிஞர் கண்டநெறி-தெளிந்த அறிவுடையோர் கூறிய வழியாம்.

(க-து) இல்வாழ்வோர் செல்வத்திற்குத் தக்கவாறு செலவழிக்க வேண்டுமெனினும் அளவுகடந்து செலவழித்தல் ஆகாது; தம்பொருள் அளவிற்கு மேற்பட்ட முயற்சியையும் செய்யக் கருதலாகாது.

(வி-ம்) உள்ளவா சேறல் என்பது பொருள் உள்ள வாற்றையுணர்ந்து அதற்குத்தகச் செல்லுதல் எனப் பொருள் படும். சேறல்-செல்லுதல். இது நடப்பதையுணர்த்திற்று. செல்வத்துக்குத் தக்கவாறுதான் செலவழிக்கின்றான்; அதிகமாகச் செலவு செய்திலன்;இவ்வாறு செலவுசெய்வது இவற்கு இயைந்ததே என்று பிறர் கூறத்தக்கதாயினும் அதுவுஞ் செய்ய



விரும்பற்க என்பார் "இயைபு எனினும்....வேண்டல்" என்றார். போம்வாய்-பொருள் செல்லும் இடத்தன. வாயஎன்னும் குறிப்புவினை பெயராகி ஏழனுருபு தொக்கு நின்றதாகக் கொள்க. வேண்டல்:எதிர்மறைவியங்கோள். உடன் பாட்டிலும் இவ்வாறே நிற்கும். நள் என்பது விரும்பும் என்ற பொருளில் வந்

தது. நள் என்பதை நடு எனப் பொருள் கொண்டு இடையாகிய அளவிற்கு மேற்பட்ட அளவுடைய தொழில் எனவும் கொள்ளலாம். தன் பொருளளவுக்கு நடுவாகிய முயற்சியைச் செய்ய முயலலாம்; அதற்கு மேற்பட்டதெனில் அம் முயற்சியை விட்டொழிப்பது நல்லது. ஓம்பல்:ஒழித்தல், நீக்குதல் என்று பொருளில் வந்தது.

(கு-பு) ஆறு-என்பது ஈறு குறைந்து ஆ என நின்றது. செல்+தல்-சேறல். போகும் என்பது உயிர்மெய் கெட்டுப் போம் என நின்றது. மனைக்கிழவன்: நானகனுருபுத் தொகை. தகுதிப் பொருளில் வந்தது. நள்ளளவு: வினைத்தொகை. நடு என்ற பொருளில் அது பண்புத் தொகை. கால்+தொழில் பண்புத்தொகை.

37. ஐங்குரவ ரோம்ப லினனீக்கல் சேர்ந்தோர்க்குப்
பைங்கூழ் கனிகளைப் பார்த்தளித்தல்—நையுளத்தார்க்
குற்ற பரிவீர்த்த லெண்ணான் கறநெறியில்
உற்ற புரிதல் கடன.

(சொ-ள்) ஐங்குரவர் ஓம்பல்-ஐந்து குரவரையும் காத்தலும், இனல் நீக்கல்-அவர்கட்கு வருந்துன்பத்தை நீக்குவதும், சேர்ந்தோர்க்கு பைங்கூழ் கனிகளை பார்த்து அளித்தல்-தன்னைச் சார்ந்தவர்க்கு நல்ல உணவினை ஆதரவாக ஆய்ந்து கொடுப்பதும், நை உளத்தார்க்கு உற்ற பரிவு ஈர்த்தல்-வருந்தும் நெஞ்சுடையார்க்கு நேர்ந்த துன்பத்தை நீக்குதலும், எண்ணான்கு அறம் நெறியில்-முப்பத்திரண்டாகிய தரும வழி

யில், உற்ற புரிதல் கடன்-தனக்கு இயன்ற அறங்களைச் செய் வதும் (இல்வாழ்வானுக்குரிய) கடமையாம்.



(க-து) இல்வாழ்வான், ஐந்து குரவரைப் பேணித், தன்னைச் சார்ந்தவர்க்கு உணவு கொடுத்தாதரித்து, வருந்துவோர் கவலையை மாற்றி, முப்பத்திரண்டு தருமங்களில் தனக்கியன்ற சில தருமங்களைச் செய்து வாழவேண்டும்.

குரவர் ஐவராவர், குரு, அரசன், அன்னை, தந்தை, தம் முன் ஆகிய இவர்.

(வி-ம்) குரவர்-பெரியார், இல்வாழ்வான் ஒருவன் தனக் குப் பெரியராகிய ஐவரையும வணங்கிக் காப்பாற்றவேண்டும்; அவன் கடமையாம் அது. பைங்கூழ்-என்பது பசுமை + கூழ் இவ்விரண்டுஞ் சேர்ந்தது. பசுமை நிறத்தை யுணர்த்தாது நலத்தையுணர்த்திற்று, பைம்பொன் என்பதுபோல. கூழ்-உணவு. களைகண்-ஆதரவு. எனவே வந்தவர்க்கு ஆதரவாக இருந்து அவர்க்கு வேண்டும் உணவளித்தல் எனக்கொள்க நை-வருந்து என்ற பொருளையுடைய முதனிலை, இதுநைந்த, நைகின்ற, நையும் என மூன்று காலத்தையும் உணர்த்தும் பொருளில் நின்றது. உளத்தர்-மனமுடையவர். வருந்து மனத் தவரை ஆய்ந்து வினவி அவர்க்குக் கவலை எதனால் நேர்ந் ததோ அதனைத் தீர்த்தல் என்பது தோன்ற "உற்ற பரிவு ஈர்த் தல்" என்றார். ஈர்த்தல்-அறுத்தல. எண்ணான் கறம் ஆவன: "ஆதுலர் சாலை யைய மறுசம யத்தோர்க் குண்டி, ஓதுவார்க் குணவு சேலை யுறுமேறு விடல்கா தோலை, மாதுபோ கம்ம கப்பால் மகப்பேறு மகவ ளர்த்தல், வேதைநோய் மருந்து கொல் லா விலைகொடுத் துயிர்நோய தீர்த்தல்; கண்ணாடி பிறரிற்

காத்தல் கன்னிகாதானங் காவே, வண்ணார் நாவிதரே சுண்ண மடந்தடங் கண்மருந்து, தண்ணீர்பெய பந்தல் கோலத் தலைக்கெண்ணெய் சிறைச்சோ றேடு, பண்ணுன விலங்கூ ணல்கல் பசுவின்வா யுறைகொடுத்தல்; அறவையாம் பிணம டக்கலறவைத்தூ ரியம்வ ருந்தாநிறுவியேயிடம்வி டாம னிறை யத்தின் பண்டம் நல்கல், உறுதியா வுரிஞ்சு கின்ற தறியிலை யோது மெண்ணுன், கறநிலை யபிதா னங்க ளம்பிகை செய்யு மாறே'' எனச் சூடாமணி நிகண்டிற் கூறியிருப்பன காண்க. பெருஞ் செல்வர்களே எண்ணுன் கறங்களையும் இயற்றத்தக்க



வர். எல்லாரும் இயற்ற இயலாது என்பது குறித்து "உற்ற புரி தல்'' என்ருர். மேற்கூறியவைகள் அனைத்துஞ் செய்ய வேண்டியவை என்ருராயிற்று.

(கு-பு) ஐங்குரவர்:பண்புத்தொகை. ஓம்பல், நீக்கல், அளித்தல், ஈர்த்தல், புரிதல் இவை தொழிற் பெயர்கள். நை யுளத்தர்:வினைத்தொகை. இன்னல்-இனல், உள்ளம்-உளம் எனக் குறைந்து நின்றது. தொகுத்தல் என்னும் செய்யுள் விகாரம்; இன்னல்-துன்பம்.

38. நல்லினஞ் சார லயனுணர்தல் பல்லார்கண்
நல்லின மோம்பல் பொறையாள—லொல்லும் வாய்
இன்னார்க் கினிய புரித லெற்றீற்றல்
நன்னுப்ப னுய்ப்பதோ ராறு.

(சொ-ள்) நல் இனம் சாரல்-நல்லோர் கூட்டத்தைச் சேர்

வதும், நயன் உணர்தல்-நல்ல வழிகளையறிவதும், பல் ஆற்றான் நல் இனம் ஓம்பல் - பலவழிகளாலும் நல்லொழுக்கமுடையவர்களையே காத்தலும், பொறைஆளல்-பொறுமை என்னும் குணத்தைக்கொள்வதும், இன்னார்க்கு ஒல்லும் வாய் இனிய புரிதல்-பகைவர்க்கும் அமையம் வாய்த்தபோது நன்மையான செயல்களைச் செய்வதும், நெறி நிற்றல்-நல்லொழுக்க நெறியில் நின்று வாழ்வதும், நாப்பண் உய்ப்பது-நடு விடத்திற சேர்ப்பதற்குரிய. ஓர் ஆறு-ஒரு வழியாம்.

(க-ரு) நல்லாரைச் சேர்வதும், நல்வழியை யறிவதும், நல்லவர்களைக் காப்பதும், பொறுமையை மனங்கொள்வதும், பகைவர்க்கும் நன்மை செய்வதும், நல்வழியினிற்பதும் ஆகிய செயல்கள் மேலுலகத்திற் சேர்க்கும்.

(வி-ம்) இனம்-கூட்டம், ஞானம் தோன்றுவதற்கு முதற் காரணம் நல்லோரைச் சேர்தலேயாம் ஆதலால் "நல்லினஞ் சாரலை" முன்வைத்தார். அதன் பின்னர் "நயன் உணர்தலை" வைத்தார்; அது அவருடன் சார்ந்த பின்பு தோன்றுவதால். உணவு, உடை, மனை நிலம்; பொருள் இல்லாமை யாய்ந்து அவரவர்க்கு வேண்டுவன வளித்தலே கற்பாற்று முறையாத



லால் "பல்லாற்றான் நல்லினமோம்பல்" என்றார். பொறுமைக் குணம் உடையார்க்கே "இன்னார்க்கினிய புரியும் எண்ணம் தோன்றும் ஆதலால் "பொறையாளலை முன் வைத்து இன்னார்க்கினிய புரிதலைப் பின் வைத்தார். பலநூல்களைக்கற்பினும், அவற்றிலுள்ள நெறி முறையுணரினும் நெறி முறைகளைப் பிறர்க்கு எடுத்துரைப்பினும், அந்நெறி முறைபற்றி நிற்றல் அருமையா

தலால் நெறி நிற்றல் சிறப்புடைத்து என்பது தோன்ற அதனை யிறுதியில் வைத்தார். நாப்பண்-நடு. நல்நாப்பண் என்ற அடைமொழியால் நல்லோர் எய்தும் மேலுலகத்தையுணர்த்தியது. துன்பவுலகில் வாழ்வார் ஆகிய மனிதர் நற்செயல் புரிந்தால் இன்ப வுலகம் எய்துவது ஒருதலை யென்பது இதனாற் கூறப்பட்டது. "வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும் தெய்வத்துள் வைக்கப் படும்" என்ற குறட்கருத்தையும் நோக்குக.

(கு-பு) நன்மை+இனம் நல்லினம்:பண்புத்தொகை. சாரல், உணர்தல், ஓம்பல், ஆளல் புரிதல், நிற்றல் இவைகள் தொழிற் பெயர்கள். இன்னார்,இன்னாமை என்பதன் அடியாகப் பிறந்த பலர் பாற் பெயர். இனிய.பலவின்பால் வினைமுற்று லணையும் பெயர்.

39. முனியா னறமறங்கண் முக்குற்றம் பேணான்
நனிகாக்கு மொண்மை யுறைப்படுத்தும் பண்போன்
பனிநிலத்தின் வித்தாய்ப் பெயரா னடுக்கற்
றினியனு வான்மற் றினி.

(சொ-ள்) அறம் முனியான்-அறஞ்செய்வதில் வெறுப்பில்லாதவனும், மறங்கள் முக்குற்றம் பேணான்-பாவங்களையும் மூன்று குற்றங்களையும் செய்ய விரும்பாதவனும், நனிகாக்கும் ஒண்மை உறைப்படுத்தும் பண்போன்-மிகவும் காக்கப்படுகின்ற ஒழுக்கத்தை நிலை நிறுத்தும் குணமுடையவனும் (ஆகிய ஒருவன்), பனி நிலத்தின் வித்தாய்-குளிர்ந்த நிலத்தில்

இட்ட விதையைப்போல, பெயரான் நடுக்கு அற்று இனி இனியன் ஆவான்-நிலையை விட்டுப பெயராமல் அச்சமற்று வாழ்ந்து இனிமேல் எவர்க்கும் இனியவன் ஆவான்.

58· இன்னிலை

(க-து) அறம் புரிந்து பாவமும் குற்றமும் நீக்கி ஒழுக்கத்தைக்காத்து வாழும் ஒருவன் நிலை பெற்று இனியவனாய் இருப்பான்.

(வி-ம்) மறம்-பாவம். இஃது ஐந்து பாவங்களை யுணர்த்தும், அவை பொய், களவு, கொலை, கள்ளுண்டல், சூதாடல் என்ற ஐந்து என்பர்; சூதாடலை நீக்கிக் குருநிந்தை கூட்டிக் கூறுவர் பலர்; காமம் என்பது கூட்டிக் களவை விடுவார் சிலர்; புலவருலகம கூறும் புதுமையிவை யெனவுணர்க. முக்குற்றம் ஆவன : காமம், வெகுளி, மயக்கம் என்பன. ஒண்மை என்பது விளக்கம் எனப்பொருள் பட்டு விளக்கத்திற்கு ஏதுவாய நல்லொழுக்கத்தினை யுணர்த்தியது. உறைப்படுத்தல்-உறைவிடமாகச் செய்தல். உறை-இருப்பிடம். நல்லொழுக்கத்தினைத் தன்பால் இருத்தியவன் எனக்கொள்க. வெப்பமான நிலத்தில் விதையிட்டாற் காய்ந்து பயனற்று இடந்தெரியாது மறைந்து போம்; குளிர்ந்த நிலத்தில் விதையிட்டால் அது அவ்விடத்தில் நின்று முளைத்து வளர்ந்து செழித்து நிலை பெற்றுப் பயன் தரும்; அதுபோல நற்பண்புடையவனும் தான் நின்ற நிலையை விட்டுப் பெயராமல் புவியில் வளர்ந்து செழித்துப் பலர்க்கும் பயன் தருவான் என உவமையை விரித்துக்கொள்க. பெயரான் -பெயராமல் என எச்சப்பொருள் பட்டது. நடுக்கு-அச்சம். இனி என்பது அப்பண்புடையவன் ஆயின பின்பு என வருங் காலத்தை யுணர்த்தியது. மற்று:அசை.

(கு-பு) முனியன், பேணான்:எதிர்மறை வினையாலணையும் பெயர். பண்பு+ஆன் என்ற பண்புப்பெயர் விகுதியின் ஆ ஓ ஆகிப் பண்போன்என நின்றது. "பெயர்வினை யிடத்து னளரய வீற்றயல், ஆ ஓ ஆகலும் செய்யுளு ளுரித்தே என்பது விதி. பெயரான் என்பது முற்றெச்சம்.

## துறவியல்

40. முப்பாலை வீழ்வார் விலங்கார் செறும்பாலை
முப்பான் மயக்கேழ் பிறப்பாகி—எப்பாலும்
மெய்ப்பொரு டேறார் வெளியோரார் யாண்டைக்கும்
பொய்ப்பாலை யுய்வகையாப் போந்து.



(சொ-ள்) முப்பாலை வீழ்வார் செறும்பாலை விலங்கார்- (அறம், பொருள், இன்பம் ஆகிய) மூன்று பகுதிகளையும் விரும்புவார் தம்மை வருத்தும் பகுதியை விட்டு விலகார், முப்பால் மயக்கு ஏழ் பிறப்பு ஆகி-அம் மூன்று பகுதியால் மயங்கும் மயக்கத்தால் எழுவகைப் பிறப்புக்களும் உண்டாகி, யாண்டைக்கும் பொய்ப்பாலை யுய்வகையா போந்து-எவ்விடத்திற்கும் பொய்யாகிய பகுதிகளையே பிழைக்கும் வழியாகக் கொண்டு சென்று, எப்பாலும் மெய்ப்பொருள் தேறார் வெளி ஓரார் - எவ்விடத்திலும் உண்மைப்பொருளைத் தெளியார்; பரவெளியையும் ஆராய்ந்தறியார்.

(க-து) இல்வாழ்வின் நின்று இன்பம் பொருள் அறம் இவற்றை விரும்பியவர்க்குத் துன்பம நீங்காது; எழுவகைப் பிறவியும் உண்டாகும், பொய்வாழ்க்கையே பிழைக்கும் வழி யாகக் கொள்வர். மெய்ப்பொருளையும் அறியார். ஆதலால் துறவே சிறந்தது.

(வி-ம்) துறவு வீட்டிற்கு வழியாதலால் அவ்விலக்கணம் கூறப்படுவது குறித்து அறம் பொருள் இன்பம் வீடு என்ற நாற் பொருளில் வீட்டினை விலக்கி முப்பால் என்றது முன்னின்ற மூன்றினையும் உணர்த்திற்று. பொருளையீட்டி அறம் புரிந்து இன்பம் நுகர்ந்து வாழ்வது துன்பத்தையே பெரும்பாலும் தருவ தால் "செறும்பாலை விலங்கார்" என்றார். இங்கு செறும்பால் என்றது வருத்துகின்றபகுதி எனப் பொருள்பட்டுக் குறிப்பினால் துன்பத்தை யுணர்த்திற்று. எழுவகைப்பிறப்பாவன தேவர், மக்கள், விலங்கு, பறவை, நீர்வாழ்வன, ஊர்வன, தாவரம் என் பவை.யாண்டைக்கும் என்பதுஎவ்வகையான முயற்சிகள் செய் வதிலும் எனப் பொருள் தந்து நின்றது. எப்பாலும் என்றது எவ்வழியில் நின்றாலும் எனப் பொருள் தந்தது. ஒருவன் கட வுட் பூசனைபுரியும் தொழில், ஆசிரியனாகிக் கல்வி கற்பிக்கும் தொழில் முதலிய உயர்ந்த தொழில்களில் இருப்பினும் அவனும் மெய்ப்பொருளை யறியான் என்ற கருத்துத் தோன்ற "எப்பாலும் மெய்ப்பொருள் தேறார்" என்றார். சிறந்த அறிவும் முப்பாலிற் கருத்தூன்றினால் மயங்கும் என்பது குறிப்பு. உய்வாய்-பிழைக்.

கும் வழி. பொய்ப்பாலைப் பிழைக்கும் வழியாகக் கொள்வதால் மெய்ப்பொருள் தோன்ருது மறையும் என்பதாயிற்று. போந்து என்ற செய்து என்னும் வாய்பாட்டைச் செயவென்னெச்சமாகக்கொண்டு போக அதனால் தேருர் எனப் பொருள் கொள்க. இதனால் அறம் பொருள் இன்பப்பற்றற்றவர்க்கே மெய்ப் பொருள் தோன்றும், என்று கூறினர்.

(கு-பு) மூன்று + பால்-முப்பால்:பண்புத்தொகை. செறும் பால்:பெயரெச்சத்தொடர். ஏழ்பிறப்பு:பண்புத்தொகை. தேருர் ஓரார் என்பன பலர்பாற்படர்க்கை எதிர் மறை வினைமுற்றுக்கள். வீழ்வார்:வினையாலணையும் பெயர் ;இது எழுவாய்.

41. உண்மைமா லீர்த்து விருள்கடிந்து சாரையம்
புண்விலங்கச் சார்பொருளைப் போற்றினேர்—நுண்ணுணர்
அண்ணு நிலைப்படுவ ராற்றல் விழுப்புலனை [வான்
யெண்பொருட் கூரியலைச் சார்ந்து.

(சொ-ள்) உண்மை மால் ஈர்த்து-மெய்யாகத் தோன்றும் மயக்கத்தைக் கொடுத்து, இருள் கடிந்து-அஞ்ஞானத்தையும் நீக்கி, சார் ஐயம் புண்விலங்க-சார்ந்த ஐயமும் துன்பமும் விலக, சார்பொருளை போற்றினேர்-சார்தற்குரிய மெய்ப் பொருளை வணங்கியவர்கள், நுண் உணர்வான் ஆற்றல் விழு புலனை ஒண்பொருட்கு ஊர் இயலைச்சார்ந்து-நுட்பமான அறிவினால் வலிய சிறந்த அறிவையும், ஒள்ளிய பரம்பொருட்குச் செலுத்துகின்ற தன்மையையும் சேர்ந்து, அண்ணுநிலை படுவர்-(ஒருவராலும்) அணுகமுடியாத நிலை (ஆகிய முத்தி) யை யடைவர்.

(க-து) மயக்கத்தையும், அஞ்ஞானத்தையும் நீக்கிப் பரம் பொருளை வணங்கியவர் கூரிய அறிவால் நல்வழி சார்ந்து முத்தியடைவர்.

(வி-ம்) மால்-மயக்கம், தமக்குரிமையில்லாத பொருள்களை யெல்லாம் தமக்குரியனவாக எண்ணி மயங்குதல். "வைத்த நிதி பெண்டிர் மக்கள் குலம் கல்வியென்னும் பித்தவுலகு" என்றார் மாணிக்கவாசகரும். பித்தம்-மயக்கம், பொருள்



மனைவி மக்கள் முதலியவை ஒருவர்க்கு உண்மையான பொருள்களாகத் தோன்றுவதுதான் மயக்கம், உண்மையாக அவரவர்க்குத் தோன்றுவதால் "உண்மை மால் என்றார். இருள்-இருளைப்போன்ற அஞ்ஞானத்தை யுணர்த்தியது; இது உவமையாகுபெயர். ஐயமும் கவலையும் நீங்கினாலொழியப் பரம்பொருளைப் போற்றுவது இயலாது; ஆதலால் "சார்ஐயம் புண் விலங்கப் போற்றினோர்" என்றார். புண் என்பது உடற் புண் போன்ற உள்ளக்கவலையையுணர்த்திற்று. இதுவும் ஆகுபெயர். நுண்ணுணர்வு-கூரிய அறிவு. அவ்வறிவால் மேலும் வலிய அறிவினையும், பரம்பொருளிடத்திற்குச் செலுத்தும் இயற்கையையும் அடைவார் என்பது விளங்க "நுண்ணுணர்வான்...புலனை... இயலைச் சார்ந்து" என்றார். புலனையும் இயலையும் சார்ந்தவர் தவறாது முத்தியை யடைவார் என்பது. போற்றுவார் கூரிய அறிவினால் அறிவு வலிமையடைந்து செல்லும் நெறியறிந்து முத்தியடைவர் என்பது இதனாற் கூறப்பட்டது.

(கு-பு) ஈர்த்து, கடிந்து என்பன செய்து என்ற வாய்பாட்டு வினையெச்சம். சாரையம், சார்பொருள், ஊர் இயல் என்பன வினைத்தொகை. போற்றினோர்:வினையாலணையும் பெயர். படுவர்:தெரிநிலை வினைப பலர்பாற் படர்க்கை வினைமுற்று. ஒண்பொருள்:பண்புத்தொகை. அண்ணா:ஈறுகெட்ட எதிர் மறைப் பெயரெச்சம். நிலை என்பதனோடு சேர்ந்து குறிப்பால் முத்தியையுணர்த்தியது.

42. மாசகல வீறு மொளியன்ன நோன்புடையோர்
மூசா வியற்கை நிலனுணர்வார்—ஆசகற்றி
இன்ன லினிவாயாக் கொள்வார் பிறப்பிறப்பிற்
றுன்னா ரடையும் நிலன்.

(சொ-ள்) மாசு அகல வீறும் ஒளியன்ன நோன்பு உடையார்-களங்கமற்றுப்பெருகும் ஒளிபோன்ற தவத்தினையுடையார், மூசா இயற்கை நிலன் உணர்வார்-அழியாத இயற்கையையுடைய இடம் (ஆகிய முத்தி) அறிவார், ஆசு அகற்றி இன்



னல் இனிவாயா க்கொள்வார்-முக்குற்றங்களையும் நீக்கித் துன்பத்தினை இனிய வழியாகக் கொள்வார், பிறப்பு இறப்பில் அடையும் நிலன் துன்னார்-பிறப்பிலும் இறப்பிலும் அவற்றிற்குரிய இடங்களிலும் சேரமாட்டார்.

(க-து) சிறந்த தவமுடையவர் முத்தியுலகத்தையே அறிந்து சேர்வார். துன்பத்தை இன்பத்திற்கு வழியாகக் கொள்வார். பிறப்பு இறப்பு இவற்றை நீக்குவர்.

(வி-ம) ஒளி, களங்கமின்றி இருந்தால் நல்ல ஒளிவீசும், எப்போதும் ஒரு தன்மையாகவே இருக்கும். அதுபோலத் தவமும், காம முதலிய குற்றங்களை நீக்கியிருப்பின் அத் தவஞ்சிறந்தது ஆம் என்பார் "மாசகல... நோன்புடையோர்" என்றார். ஒளியைத் தவத்திற்கு ஒப்புரைத்தார். மூசுதல்-கெடுதல், சாதல். மூசா-கெடாத. இயற்கை நிலன் என்றது என்றும் அழியாதிருக்கும் இன்பவுலகத்தினை. உணர்வார் என்பது உணர்ந்து சேர்வார் என்பதைக் குறிப்பாலுணர்த்தியது. ஆசு-குற்றம்; இது தவமுடையார் செய்யத்தகாத காமம் வெகுளி, மயக்கம் என்ற முக்குற்றங்களையும் காட்டிற்று. "காமம் வெகுளி மயக்கம் இவைமூன்றன், நாமங் கெடக்கெடு நோய்" என்றார் வள்ளுவரும். காமம், பொருள்கள் மேல் செல்லும் விருப்பம்; வெகுளி அவ்விருப்பத்திற்கு இடையூறு நேர்ந்தபோது தோன்றும் சினம். மயக்கம், உரிமையற்ற பொருள்களை யுரிமையுடையனவென நினைத்து மயங்குதல். இவை மூன்றும ஒழித்தவர் துன்பத்தினை யின்பமாகவே கொள்வார்.இனிவாய்: இனியவாய் என்பதன் குறுக்கம். வாய்-வழி, இடம். துன்பம் என்பது பொருள் அழிவுகாரணமாகவே தோன்றுவது; பொருள் அழிவே தவமுனிவர்க்கு இன்பமாகும். "யாதனின் யாதனின் நீங்கியான் நோதல், அதனின் அதனின் இலன்" என்ற குறட் கருத்தை நோக்குக. பிறப்பிற்குரிய நிலம் மண்ணுலகம், விண்ணுலகம். இறப்புக்குரிய நிலம் எமனுலகம், இவ்விரண்டினையும் முத்தியுலகத்தையடைந்தவர் அடையார் என்று கொள்க.

(கு-பு) மாசு+அகல:குற்றியலுகரங் கெட்டது; ஆசு+அகற்றி என்பதும் அது. மூசா:ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்

சம். உணர்வார்:வினையாலணையும் பெயர். இனிவாய்:தொகுத் தல் விகாரம். துன்னுர்:எதிர்மறைப்பலர்பால் வினைமுற்று. பிறப்பு+இறப்பு குற்றியலுகரம் கெட்டது.

43. பேராப் பெருநிலன் சேய்த்தே யுடம்பொன்று
பேரா வொருநிலனு நீங்காப் பெரும்பொருளை
யேரா வறிந்துய்யும் போழ்து.

(சொ-ள்) உடம்பு ஒன்று-பலவகையுடம்புகளிலும் பொருந்தி யும் பொருந்தாத, பேரா ஒரு நிலனு-பெயராத ஒப்பற்ற உலக மாக, நீங்காப பெரும் பொருளை-(எபபோதும்)நீங்காத பெருமை யுடைய பரம்பொருளை,ஏரா அறிந்து உய்யும் போழ்து-எழுச்சி யாக வுணர்ந்து பிழைக்கும் பொழுதில, பேரா பெருநிலன் சேய்த்தே-இடம் விட்டுப் பெயராத பெருநிலமாகிய முத்தியுல கம் தூரத்துள்ளதோ (அடுத்தது தான்)

(க-து) பரம்பொருளை யுணர்ந்து வாழ்வார்க்கு முத்தி சேர் தல் எளிது.

(வி-ம்) பலவகையுயிர்க்குள் உயிராகி நிற்பினும் அவ் வுடம்புகளில்ஒட்டாது நிற்பவன் இறைவன்; நல்வினை தீவினைப் பயன்றுய்ப்பதும் அவ்வவவுடமபுகளே ; இறைவன் அவறறு ணிற்பினும் இன்ப துன்பங்கள் அவ்வவ்வுயிர்க்கே யுரியன என நூல்கள் கூறுவதால் "உடம்பு ஒன்று" என்ருர். "ஆக் கையெனும் புழுக்குரம்பை யணைந்தணையாப் பொருளை" எனப பிறர் கூறுவதும் காண்க. பேரா ஒரு நிலன் என்றது உலக

முழுவதையும். இடம் விட்டுப் பெயர்ந்து செல்லாது உலகம்; ஆதலின் "பேராநிலன்" என்றார். நிலனு நீங்காப் பெரும் பொருள் என்றுகொள்க. 'அங்கிங்கெனாதபடி எங்கும் ப்ரகாசமா யானந்த பூர்த்தியாகி, யருளொடு நிறைந்ததெது' என்ற தாயுமானார் வாக்கின் உண்மையுணர்க. உலகம்வேறு; பரம் பொருள் வேறு என நீக்கமற நிற்பதே பரம்பொருள் இயற்கையாம். ஏரா அறிந்து-எழுச்சியாக அறிந்து. ஏர்-எழுச்சி, இது மனவெழுச்சியைக் குறித்தது. உய்யும்-வாழும். பரம பொருளையறிவதற்குக் கல்வியும் கேள்வியும் நல்வினையுஞ் சேர்த



லும் வேண்டும். இவையாவும் மனவெழுச்சி யில்லார்க்குக் கூடா ஆகையால் "ஏரா அறிந்து" என்றார். உய்யும்போழ்து அவ்வாறு உய்யும் அவர்க்குப் பெருநிலன் சேய்த்தே எனச் சொல் வருவித்துப் பொருள் முடிக்க. சேய்த்து-தூரத்துள்ளது. ஏ-வினாவாகி வந்து எதிர்மறைப் பொருளைத் தந்தது. சேய்த்தே-சேய்த்தோ-தூரத்துள்ளதோ? இல்லை; அடுத்துள்ளது என்று பொருள் கொள்க. பரம்பொருளை யுணர்வார்க்கு முத்தி கிடைப்பது எளிது என்பது இதனாற் கூறப்பட்டது.

(கு-பு) பேரா:ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம், நீங்கா, ஒன்று என்பனவும் அன்ன. பெரும்பொருள், ஒரு நிலன் இவை பண்புத்தொகைகள். உடம்பு+ஒன்று:குற்றியலுகரங் கெட்டது. அறிந்து+உய்யும்:குற்றியலுகரங்கெட்டது. சேய்த்து-சேய்மையென்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன்

பாற் குறிப்பு வினைமுற்று.

44. மெய்யுணர்வே மற்றதனைக் கொள்ள விழுக்கலனும்
பொய்யுணர்வா னீண்டிய வெல்லா மொருங்கழியும்
ஐயுணர்வா னாய்ந்து வறஞ்சார்பாச் சார்பொறுக்க
நையா நிலைவேண்டு வார்.

(சொ-ள்) பொய் உணர்வான் ஈண்டிய எல்லாம் ஒருங்கு அழியும்-பொய்யாகிய அறிவினால் சேர்க்க வந்து சேர்ந்த பொருள்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து கெடும், நையா நிலை வேண்டுவார்-அழியாத நிலையாகிய முத்தியை விரும்புவோர், ஐயுணர்வான் ஆய்ந்து - ஐந்தாகிய அறிவினால் ஆராய்ந்து, அறம் சார்பு ஆ-துறவறத்தைச் சார்பாகக்கொண்டு, சார்பு ஒறுக்க-பற்றுக்களையெல்லாம் ஒழிக்க, மெய்யுணர்வே மற்று அதனைக் கொள்ள விழு கலன் ஆம்-உண்மையறிவே அம் முத்தியுலகத்தை யடைவதற்குச் சிறந்த புணையாகும்.

(க-து) பொய்யுணர்வினாற் சேர்த்த பொருள்களெல்லாம் தொலையும். பற்றுக்களையெல்லாம் ஒழித்துப் பின் மெய்யுணர்வு பெற்றால் முத்தியுலகம் பெறலாம்...



(வி-ம்) ஐயுணர்வு என்றது மனவுணர்வை யுணர்த்தியது; ஐந்து புலன்களாலும் நுகர்ந்து அறிந்ததே மனவறிவு ஆதலின்.

சார்பு அகப்பற்று, புறப்பற்ருகிய பொருள்கள். யான் என்பது அகப்பற்று. எனது என்பது புறப்பற்று. இவ்விரண்டினையும் ஒழித்தலே பற்றறுத்தலாம் "யானென தென்னும் செருக்கறுப் பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்" என்பது பொய்யா மொழி. அறம் சார்பா என்றது துறவறத்தைத் துணையாகக் கொண்டு எனப் பொருள் தந்தது. துறவறத்தைத் துணையாகக் கொள்ளலாவது "பற்றில்லான் பற்றினைப் பற்றுதலாம்" "பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு" என்ற குறட் கருத்தும் ஆய்க. நையா நிலை என்றது முத்தியுலகத்தை; என்றும் ஒரு தன்மைத்தாயிருக்கும் நிலையதுவே யாதலின். பொய்யுணர்வான் ஈண்டிய வெல்லாம் என்றது எனது எனது என்று கருதி யீட்டிய மண் பொன் பெண் முதலிய எல்லாப் பொருள்களையும் யுணர்த்தும். அவைகளெல்லாம் ஈட்டியவன் அழிந்தவுடன் எல்லாம் அவனைவிட்டு அப்பொழுதே நீங்கு தலால் "ஒருங்கு அழியும்" என்ருர். "அடுத்தா னிறும்போதி லர்ச்சித்த பொன்பூண், வடுத்தா னிலாவாழ்வு மனைமற்றும் எங்கே, எடுத்தான் விழுந்தால் விழாதே யிருக்கத், தடுத்தாலு மங்கோர் தலைச்சுமை யிராதே" என்ருர் பிறரும். தலையிற்சுமை வைத்துநடந்தவன் தவறி விழுந்தாற் சுமையும் கீழ் விழுவது போல நீங்கும் என்பது இக்கவியின கருத்து. மெய்யுணர்வு என்பது உண்மையை யறியும் அறிவு என விரியும். அழியும் பொருள் அழியாப் பொருள் இவற்றை யாய்ந்து அழியாப் பொருளைப் பற்றும் அறிவே மெய்யுணர்வு என்று கொள்க. அதனை அடிப்படையாகக்கொண்டதுதான் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற வழிகள் நான்கும். இவ்வழிகளிற் சென்று வீட்டுலகம் அடைவதற்கு மெய்யுணர்வு துணையாதலால் அதனை "விழுக்கலனும்" என்ருர். கலன்-புணை; மரக்கலம்.

(கு-பு) மெய்+உணர்வு பொய்+உணர்வு : தனிக்குறில் முன்ஒற்றுதலால் இரட்டியது; மற்று:அசை. அதனை என்ற சுட்டு நையா நிலை எனப் பின் வந்ததனைச் சுட்டிற்று. பொய்யு ணர்வு+ஆன், ஐயுணர்வு+ஆன் மூன்றனுருபு கருவிப் பொரு
5



ளும் வேண்டும். இவையாவும் மனவெழுச்சி யில்லார்க்குக் கூடா ஆகையால் "ஏரா அறிந்து" என்றார். உய்யும்போழ்து அவ்வாறு உய்யும் அவர்க்குப் பெருநிலன் சேய்த்தே எனச் சொல் வருவித்துப் பொருள் முடிக்க. சேய்த்து-தூரத்துள் ளது. ஏ-வினாவாகி வந்து எதிர்மறைப் பொருளைத் தந்தது. சேய்த்தே-சேய்த்தோ-தூரத்துள்ளதோ? இல்லை; அடுத்துள் ளது என்று பொருள் கொள்க. பரம்பொருளை யுணர்வார்க்கு முத்தி கிடைப்பது எளிது என்பது இதனாற் கூறப்பட்டது.

(கு-பு) பேரா:ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்; நீங்கா, ஒன்று என்பனவும் அன்ன. பெரும்பொருள், ஒரு நிலன் இவை பண்புத்தொகைகள். உடம்பு+ஒன்று:குற்றியலு கரங் கெட்டது. அறிந்து+உய்யும்:குற்றியலுகரங்கெட்டது. சேய்த்து-சேய்மையென்னும் பண்படியாகப் பிறந்த ஒன்றன் பாற் குறிப்பு வினைமுற்று.

44. மெய்யுணர்வே மற்றதனைக் கொள்ள விழுக்கலனும்
பொய்யுணர்வா னீண்டிய வெல்லா மொருங்கழியும்

ஐயுணர்வா ஒய்ந்து வறஞ்சார்பாச் சார்பொறுக்க
நையா நிலைவேண்டு வார்.

(சொ-ள்) பொய் உணர்வான் ஈண்டிய எல்லாம் ஒருங்கு அழியும்-பொய்யாகிய அறிவினால் சேர்க்க வந்து சேர்ந்த பொருள்கள் எல்லாம் ஒன்றாகச் சேர்ந்து கெடும், நையா நிலை வேண்டுவார்-அழியாத நிலையாகிய முத்தியை விரும்புவோர், ஐயுணர்வான் ஆய்ந்து - ஐந்தாகிய அறிவினால் ஆராய்ந்து, அறம் சார்பு ஆ-துறவறத்தைச் சார்பாகக்கொண்டு, சார்பு ஒறுக்க-பற்றுக்களையெல்லாம் ஒழிக்க, மெய்யுணர்வே மற்று அதனைக் கொள்ள விழு கலன் ஆம்-உண்மையறிவே அம் முத்தியுலகத்தை யடைவதற்குச் சிறந்த புணையாகும்.

(க-து) பொய்யுணர்வினாற் சேர்த்த பொருள்களெல்லாம் தொலையும். பற்றுக்களையெல்லாம் ஒழித்துப் பின் மெய்யுணர்வு பெற்றால் முத்தியுலகம் பெறலாம்...



(வி-ம்) ஐயுணர்வு என்றது மனவுணர்வை யுணர்த்தியது; ஐந்து புலன்களாலும் நுகர்ந்து அறிந்ததே மனவறிவு ஆதலின். சார்பு அகப்பற்று, புறப்பற்றாகிய பொருள்கள். யான் என்பது அகப்பற்று. எனது என்பது புறப்பற்று. இவ்விரண்டினையும் ஒழித்தலே பற்றறுத்தலாம் "யானென தென்னும் செருக்கறுப் பான் வானோர்க், குயர்ந்த வுலகம் புகும்" என்பது பொய்யா மொழி. அறம் சார்பா என்றது துறவறத்தைத் துணையாகக்

கொண்டு எனப் பொருள் தந்தது. துறவறத்தைத் துணையாகக் கொள்ளலாவது "பற்றில்லான் பற்றினைப் பற்றுதலாம்" "பற்றுக பற்றற்ருன் பற்றினை யப்பற்றைப், பற்றுக பற்று விடற்கு" என்ற குறட் கருத்தும் ஆய்க. நையா நிலை என்றது முத்தியுலகத்தை; என்றும் ஒரு தன்மைத்தாயிருக்கும் நிலையதுவே யாதலின். பொய்யுணர்வான் ஈண்டிய வெல்லாம் என்றது எனது எனது என்று கருதி யீட்டிய மண் பொன் பெண் முதலிய எல்லாப் பொருள்களையும் யுணர்த்தும். அவைகளெல்லாம் ஈட்டியவன் அழிந்தவுடன் எல்லாம் அவனைவிட்டு அப்பொழுதே நீங்கு தலால் "ஒருங்கு அழியும்" என்ருர். "அடுத்தா னிறும்போதி லர்ச்சித்த பொன்பூண், வடுத்தா னிலாவாழ்வு மனைமற்றும் எங்கே, எடுத்தான் விழுந்தால் விழாதே யிருக்கத், தடுத்தாலு மங்கோர் தலைச்சுமை யிராதே" என்ருர் பிறரும். தலையிற்சுமை வைத்துநடந்தவன் தவறி விழுந்தாற் சுமையும் கீழ் விழுவது போல நீங்கும் என்பது இக்கவியின கருத்து. மெய்யுணர்வு என்பது உண்மையை யறியும் அறிவு என விரியும். அழியும் பொருள் அழியாப் பொருள் இவற்றை யாய்ந்து அழியாப் பொருளைப் பற்றும் அறிவே மெய்யுணர்வு என்று கொள்க. அதனை அடிப்படையாகக்கொண்டதுதான் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்ற வழிகள் நான்கும். இவ்வழிகளிற் சென்று வீட்டுலகம் அடைவதற்கு மெய்யுணர்வு துணையாதலால் அதனை "விழுக்கலஞ்ம்" என்ருர். கலன்-புணை; மரக்கலம்.

(கு-பு) மெய்+உணர்வு பொய்+உணர்வு : தனிக்குறில் முன்ஒற்ருதலால் இரட்டியது; மற்று:அசை. அதனை என்ற சுட்டு நையா நிலை எனப் பின் வந்ததனைச் சுட்டிற்று. பொய்யு ணர்வு+ஆன், ஐயுணர்வு+ஆன் மூன்றனுருபு கருவிப் பொரு

ளில் வந்தது. ஒறுக்க: வியங்கோள்: வேண்டுவார்:வினையா லணையும் பெயர். அதுவே எழுவாய்.

45. ஒன்றுண்டே மற்றுடலிற் பற்றி வினையிருக்கும்
பொன்று வுணர்வால் விலங்கொறுக்க பைம்மறியாத்
தன்பாற் பெயர்க்குந்து பற்றுத்தலைப் பட்டோர்
நன்பா லறிந்தார் துறந்தார் வரலுய்ந்தார்
புன்பாலாற் சுற்றப் படார்.

(சொ-ள்) ஒன்று உண்டே-உயிர் என்பது ஒன்று உண்டு (இருக்கிறது), உடலிற்பற்றி வினை இறுக்கும்-(அவ்வுயிர்) உடம்பைப் பற்றி நின்று வினைகளை மேன்மேலும் கொடுக்கின்றது; பொன்று உணர்வால் விலங்கு ஒறுக்க-கெடாத நல்லறிவினால் அப்பாசத் தளையைத் தகர்த்து விடுக; பை மறியா தன்பால் பெயர்க்குந்து பற்று தலைப்பட்டோர்-பையின் உட்புறமாகத் திருப்பிப்பார்பபதுபோலத் தன் பகுதியைப் பெயர்த்துப்பார்க்கும் பற்றினைக் கூடியவர்களே, நன்பால் அறிந்தார்-நல்ல வழிகளை யறிந்தவராவார், துறந்தார்-அவரே துறவிகளாவார், வரல் உய்ந்தார்-பிறப்பினின்றும் நீங்கியவர், புன்பாலால் சுற்றப் படார்- சிறிய பகுதிகளாற் சூழப்படாதவராவர்.

(க-து) உடம்பில் உயிர் நின்று வினை செய்யச்செய்ய மேன்மேலும் பிறப்பு வளரும் என்பதையும் உடம்பின் இழிவையும் அறிந்தவர் துறவிகளாவார். அவர்கள் பிறவாது முத்தியை யடைவார்.

(வி-ம்) உயிர் உடம்பிலிருக்கும் வரையும் வினை வளரும் என்பதை விளக்க "உடலிற்பற்றி வினையிறுக்கும்" என்குர். இறுக்கும் என்பது கடன் இறுக்கும் என்பது போலக் கொடுத் தலையுணர்த்திற்று. பொன்ருவுணர்வு என்பது கெடாத அறிவு எனப் பொருள் பட்டு நிலையாக நிற்கும் பொய்யுணர்வைக் குறித்தது. விலங்கு என்பது உவமையாகு பெயராய் வினைக் கட்டினை யுணர்த்தியது. உண்மையறிவு தோன்றிய வுடன் பாசம் ஒழியும் என்பது ஞானநூற் றுணிபாதலின் "உணர்வால் ஒறுக்க" என்குர். ஒறுத்தல்-தண்டித்தடக்குதல்; இங்கு ஒழித்



தலுக்கு ஆயிற்று. மீப்போர்வை, பொய்ம்மறையாக் காமம் புக லாது மற்றதனைப், பைம்மறியாப் பார்க்கப் படும்" என்ற நாலடி யார்க்கருத்தினை இங்குக் காண்க. பையின் உட்புறம் அழகின்றி வெளிப்புறம் அழகாயிருக்கும் என்பதும், அப்பையைத் திருப் பிப்பார்ப்பது போல் உடம்பினுள்ளே யிருக்கும் குடரும் கொழு வும் குருதியு மென்பும், தொடரும் நரம்போடு தோலும் இடை யிடையே வைத்த தடியும் வழும்பும்ஆகிய இவற்றை நோக்கின் உடம்பின் இழிவு தோன்றும் என்பதும் கூறினர். அவ்வறிவு உடையவரையே "பற்றுத்தலைப்பட்டோர்" என்குர். அப்பற்று உண்டாயின அவர் பிறப்பின் இழிவறிந்து துறந்து முத்தியடை வார் என்பது இதனுல் விளக்கப்பட்டது. தன்பால்-தனது உடம் பின் பகுதிகளான குடர்கொழுவு ஆகியவற்றைக் குறிக்கும். பெயர்க்குந்து என்றபெயரெச்சம் பற்றுஎன்று பெயர்கொண்டது. பெயர்க்கும் பற்று ஒவ்வொன்ருகப் பெயர்த்து ஆய்ந்து காணும் அவா எனக்கொள்க. அப்பற்றினுல் தூயவறிவு தோன்றி முத்தி யடைவர் என்பது தெளிவு. உயிர், வினை, முத்தி, நரகு இவை

இல்லையென்பாரும் சிலருளர் ஆதலின் உண்டே எனத் தேற்றேகாரம் கொடுத்தார்.

(கு-பு) பொன்று: ஈறுகெட்ட எதிர்மறைப்பெயரெச்சம். ஒறுக்க: வியங்கோள். பெயர்க்குந்து: உம் உந்தாகத் திரிந்த பெயரெச்சம். தலைப்பட்டார்:வினையாலணையும் பெயர். அறிந்தார், துறந்தார், உய்ந்தார்:வினைமுற்று.

இன்னிலை மூலமும் உரையும் முற்றும்.

## பாட்டு முதற்குறிப்பகர வரிசை

| பக்கம் | | பக்கம் |
|---|---|---|
| 10 | குருட்டாய னீள் | 22 |
| 35 | கோலப் புற | 6 |
| 45 | தாமீட் டருவி | 11 |
| 30 | திரைத்த விரிக்கிற் | 9 |
| 3 | துணையென்ப காம | 31 |
| 27 | தூயசொல் லாட் | 13 |
| 15 | தூவி நெருஞ்சிக் | 38 |
| 37 | தோற்றேரே வெல் | 42 |

# 2. கைந்நிலை

## கைந்நிலை

### க. குறிஞ்சி

வரைவு நீட்டித்தவழி யாற்றளாய
தலைவி தோழிக்குக் கூறுதல்.

1. நுகர்த லிவருங் கிளிகடி யேன
னிகரின் மடமா னெரியு—மம...சாரற்
கானக நாடன் கலந்தா னிலனென்று
மேனி சிதையும் பசந்து.

(சொ-ள்) நுகர்தல் இவரும் கிளிகடி ஏனல் - தினைக்கதிரைத் தின்பதற்காகத் தினைத்தாளின் மேல் ஏறுங் கிளிகளை யோட்டுகின்ற தினைப்புனத்தின்கண், நிகர் இல் மடமான் நெரியும் அமர் சாரல்-ஒப்பில்லாத இளமையான மான்கள் நெருங்கித் திரியும் விரும்புகின்ற மலைச்சாரலில்; கானக நாடன் கலந்தான்-காட்டிற்கு உள்ளாகிய நாட்டையுடையவன் என்னைப் புணர்ந்தான்; இலன் என்று-அவ்வாறு புணர்ந்த தலைவன் இஞ்ஞான்று அருகில் இல்லாது பிரிந்தான் என்பதையறிந்து; மேனி பசந்து சிதையும்-என் உடல் பசலை நிறமாகி எழிலழிந்தது, (என்று தலைவி தோழிக்குக் கூறினள்.)

(துறை) தொல். கள. சூத். 21. பிரிந்த வழிக்கலங்கினும் என்பதற்கு மேற்கோள்.

(வி-ம்) நுகர்தல்-தின்னுதல். இவரும்-ஏறுகின்ற. கடி-ஓட்டு கின்ற. ஒன்றற்கொன்று உயர்ந்ததும் தாழ்ந்ததுமாய்க், கன்றும் பிணையும் கலையுமாய்ப் பலவகையாக வரும் மான்கள் என்பதை விளக்க "நிகரில்மடமான்" என்றார் நிகரில்என்பதுஒன்றற்கொன்று ஒப்பில்லாத என்ற பொருளைத் தந்தது. நுகர்தல் இவரும்-நுகர் தற்கு இவரும் என நான்கனுருபு விரிக்க. ஏனல்- தினை. இது தினை விளையும் இடத்தையுணர்த்தியது: ஆகு பெயர். கானக நாடன் என்பது தலைவனையுணர்த்தியது. மலைச்சாரலில் வந்து

சேர்ந்தான், தினைப்புனத்தின்கண் வந்து சேர்ந்தான் எனக் கொள்க. பகற்குறியிற் பல இடங்களில் வந்து கலந்திருப் பன் ஆதலால் "ஏனல், சாரல்" என்றார். சாரலிலுள்ள ஏன லில் எனினும் ஏனல்களையுடைய சாரலில் எனினும் பொருந் தும். என்னையறியாதே என் மேனி பசந்து சிதையும் என்று வியப்பாகக் கூறினள் எனக் கொள்க. என்று என்பது என்று அறிந்து என்ற பொருளைத் தந்தது.

(இ-பு) கடியேனல், அமர் சாரல்: வினைத்தொகைகள். கிளி கடி: இரண்டாம் வேற்றுமைத் தொகை. கலந்தான்: வினைமுற்று. இலன்: குறிப்பு வினைமுற்று. மடமான்: பண்புத்தொகை.

2. வெந்த புனத்துக்கு வாசமுடைத்தாகச்
சந்தன மேந்தி யருவி கொணர்ந்திடூஉம்
வஞ்ச மலைநாடன் வாரான்கொ லேழியென்
னெஞ்ச நடுங்கி வரும்.

(செ-ள்) தோழி-என்பாங்கியே!; வெந்த புனத்துக்கு வாசம் உடைத்து ஆக-நெருப்பால் வெந்து கருகிய காட்டிற்கு மணம் உண்டாகும்படி; அருவி சந்தனம் ஏந்தி கொணர்ந்து இடூஉம்-மலையினின்று வரும் அருவியானது சந்தனக் கட்டைகளை ஏந்திக்கொண்டு வந்து போடுகின்ற; வஞ்சமலைநாடன்-வஞ்சகமுள்ள மலைநாட்டுத் தலைவன்; வாரான்கொல்-இனிவாரானோ, வருவனோ யான் அறியேன்; என் நெஞ்சம் நடுங்கிவரும்- எனது மனம் அது குறித்து நடுங்கி வருகின்றது, (என்று கூறினள் தலைவி).

(வி-ம்) "வெந்த புனம்" எனவே முன் அகிலும் சந்தனமும் வளர்ந்திருந்தன. மணமுடையதாயிருந்தது. அம்மரங்களையெல்லாம் வெட்டித் தீயினாற் சுட்டுத் தினை விதைத்த புனம் என்பது குறிப்பால் தோன்றியது. சுட்டெரித்ததனால் மணமின்றி இருந்தது எனவும் அப்புனத்துக்கு மணமுண்டாக்கக் கருதி அருவி சந்தன மரத்துண்டுகளைக் கொண்டு வந்து



போடும் எனவும் கற்பித்தார். இயற்கையாக அருவி சந்தனம் கொண்டுவருவதை மணமுண்டாக்கக் கருதினக் கற்பித்தனர். அன்றியும் வஞ்சம் உடையது என்றார். வஞ்சம் என்பது ஒருவரும் அறியாமல் ஒரு செயலைச்செய்வது. புனத்திற்கு மணமில்லையென்பதை மனத்துட்கொண்டு, புனத்திற்குங் கூறாமல், ஒருவர்க்குந் தெரியாமற் சந்தனக் கட்டைகளை இழுத்துக்கொண்டு வந்து போட்டது அருவியின் செயல்; ஆதலால் அச்செயல் வஞ்சம் எனக் கூறினர். மலைநாடு வஞ்சகச் செயலுடையது. அது

போலவே அந்நாட்டுத் தலைவனும் இருப்பான் போலும் எனத் தலைவி தோழிக்குக் கூறினள். வெந்த புனம்போன்ற எனக்கு அருவிபோல வரைபொரு ளீட்டிவந்து மணந்தருவான் என்று எண்ணுவதைக் குறிப்பாலுணர்த்தினள் என்று அறிக. வந்து மணம் புரிவான் என்று துணிகின்றேன் ; ஆயினும் என்நெஞ்சம் நடுங்குகின்றது ; அதற்குக்காரணம் என்ன என்று வினவினள் எனவும் கொள்க. இதனால் தன் மனத்துயரத்தையும் துணிவையும் தோழிக்குத் தலைவி கூறினள் என்க.

(இ-பு) இடூஉம் : என்பது இன்னிசையளபெடை. கொல்-ஐயப் பொருளில் வந்தது. இடூஉம் நாடன் எனக் கூட்டுக இடூஉம் : செய்யும் என் வாய்பாட்டுப் பெயரெச்சம். கொணர்ந்து செய்து என்வாய்பாட்டு வினையெச்சம். வஞ்சம் மலை நாடன்: இரண்டனுருபும் பயனும் தொக்க தொகை. வெந்த:செய்த என்வாய்பாட்டுப் பெயரெச்சம்.

## இதுவு மது

3. பாசிப் பசுஞ்சுனைப் பாங்க ரழிமுது நீர்
காய்சின மந்தி பயின்று கனிசுவைக்கும்
பாசம்பட் டோடும் படுகன் மலைநாடற்
காசையிற் றேம்புமென் னெஞ்சு.

(சொ-ள்) பாசி பசு சுனை பாங்கர் அழி முது நீர்-பாசம் படர்ந்த பசுமையான நீர்ச் சுனையின் பக்கத்தில் வழியும் பழமையான நீரில்;காய் சினம் மந்தி பயின்று கனி சுவைக்கும்-மிகுந்த சினமுடைய மந்திகள் பழகி அந்நீரில் வருங் கனிகளை

யெடுத்துத் தின்று சுவைத்திருக்கும் இயல்புடைய; பாசம் பட்டு ஓடும் படுகல்-பாசமுண்டாக நீரோடுகின்ற உயர்ந்த கற்களையுடைய மலைநாடற்கு-மலைநாட்டுத் தலைவன் பொருட்டு; என் நெஞ்சு ஆசையில் தேம்பும் என் நெஞ்சமானது காதலால் வருந்துகின்றது, (என்று தோழியினிடம் கூறினள்).

(வி-ம்) சுனை என்பது மலையருவி வந்து பெருகி நிற்கும் நீர் நிலை. அந்நீர் நிலை பாசம் படர்ந்திருப்பதும் நீரில் முளைக்கும் ஆம்பல் முதலிய கொடியிலைகள் படர்ந்து பசுமையாகத் தோன்றுவதும் இயற்கை. ஆதலால் "பாசிப் பசுஞ்சுனை" என்றார். புது நீர் வந்து பாய்ந்தவுடன் அச்சுனையிலுள்ள முது நீர் புது நீருடன் கலந்து வெளிவரும் என்பது குறித்து "அழி முது நீர்" என்றார். அழி என்பது சுனையின்மேற் பொங்கி வழிகின்ற எனப் பொருள் தந்தது. மந்திகள் காரணமின்றி ஒன்றோடொன்று சினந்து போரிடும் இயற்கையுடையன என்பது குறித்து, "காய்சின மந்தி" என்றார். நீர் இடையறாது ஓடுவதால் கற்கள் பாசமுண்டாக்கி வழுக்கும் இயலபுடையனவாம் என்பது தோன்ற, "பாசம் பட்டு ஓடும்" என்றார். பட்டு என்பதை பட எனத் திரித்துப் பொருள் கொள்க. மலைநாடன் களவொழுக்கம் மலைநாட்டின் இயல்பு போல இருக்கின்றது எனக் குறிப்பாலுணர்த்தியது இது.

பாசிப் பசுஞ் சுனையைக் குறவர் குடியாகவும், அதன் பாங்கர் அழிமுது நீரைத்தலைவி பிறந்த மனையாகவும், அம்முது

நீரில் வந்த கனி தலைவியாகவும், அக்கனியை மந்தி சுவைப்பது தலைவியைத் தலைவன் கூடி யின்புறுவதாகவும், பாசம் பட்டு ஓடும் படுகல் என்றது களவொழுக்கமாகவும் உள்ளுறை யுவமை கொள்க.

(இ-பு) பசுமை + சுனை. முதுமை + நீர் முன்னது : மை கெட்டு இனவெழுத்து மிக்குப்புணர்ந்தது. பின்னது சுறு கெட்டுப் புணர்ந்தது. காய்சினம்:வினைத்தொகை. கனி சுவைக் கும்: இரண்டனுருபுத் தொகை. படுகல்:வினைத்தொகை.



கல் + மலை = கன்மலை, நெஞ்சு ஆசையில் தேம்பும் எனக் கூட்டுக.

## இதுவு மது

4\. ஓங்கல் விழுப்பலவி னின்பங் கொளீஇய
தீங்கனி மாவின் முசுப்பாய் மலைநாடன்
றன்கலந் துள்ளாத் தகையதே நேரிழாய்
தேங்கலந்த சொல்லின் றெளிந்து.

(சொ - ள்) நேரிழாய்-என்தோழீ! ; ஓங்கல் விழு பலவின் இன்பம் கொளீஇய தீகனி-உயர்ந்த சிறந்த பலா மரத்திற் பழுத்த இன்பத்தைத் தருகின்ற இனிய கனியை; மாவின் முசு பாய் மலைநாடன்-மாமரத்திலிருந்து கருங் குரங்குகள் பாய்ந்து

கவரும் மலைநாடன் ஆகிய தலைவன்; தேம் கலந்த சொல்லால் தெளித்து தான் கலந்து-இனிமை பொருந்திய சொற்களால் சூளுரை கூறித் தெளிவித்து முன் தானே வந்து கூடிப் புணர்ந்து; உள்ளாத் தகையானே-பின்பு அதனை நினையாது மறக்குந் தன்மையுடையவனே, (கூறுக என்றாள்).

(வி-ம்) தகையனே என்றது அத்தகைய நல்லன் மறவாது வந்து மணப்பான் எனக் கருதுகின்றேன்; உன் கருத்து யாது என்று வினவியவாறும் இது. மலைநாட்டினியல்பு போலஅவனியல்பும் இருந்தது என்று குறிப்பினுற் றோன்றும்படி தோழிக்குக் கூறியது இது. மாமரத்திலிருந்து குரங்கு தாவிப் பலாப் பழத்தைக் கவர்ந்தது போல் மலைநாட்டிலிருந்து வந்த தலைவன் குறவர் குலத்திற் பிறந்த என்னைக் கூடிக் கலந்து இன்பம் நுகர்ந்தான் என்று உள்ளுறை கொள்க. முசு என்பது குரங்கின் ஒருவகைச் சாதி, கருங்குரங்கு எனவும் கூறுவர். கொளீஇய என்பது கொள்வித்த என்ற பொருளில் வந்தது. பலவின் கனிக்குப் பல அடைமொழி கொடுத்துச் சிறப்பித்தது. உயர்ந்த சிறந்த ஓர் குடியிற் றோன்றி இன்பந்தரத் தக்க கன்னி எனத் தன்னையுயர்த்திக் கூறியதாம். மாவின் முசு என்றது வேறொரு குடியிற் பிறந்து வந்த தலைவன் எனக் கூறியதாம். தெளித்து என்றது இயற்கைப் புணர்ச்சியின் நின்னிற் பிரி



யேன் பிரியினும் தரியேன் என்று சூளுரை கூறித் தெளிவித்-தலைக் குறித்தது.

(இ-பு) கொளீஇய : சொல்லிசையளபெடை; பிறவினைப் பொருளைத் தருதலால். நேரிழை என்பது பண்புத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழி; நேரிழாய் என விளியாயிற்று. நேர்மையான அணியணிந்தவள் என்பது பொருள். தகையஹோ-ஓகாரம் ;எதிர்மறை. நாடன் தெளித்து கலந்து உள்ளாத் தகையஹோ எனக் கூட்டுக. உள்ளா: ஈறு கெட்ட எதிர் மறைப் பெயரெச்சம்.

## இதுவு மது

5. இரசங்கொண் டின்றே னிரைக்குங் குரலைப்
பிரசை யிரும்பிடி பேணி வருஉ
முரசருவி யார்க்கு மலைநாடற் கென்றோ
ணிரைய மெனக் கிடந்த வாறு.

(சொ-ள்) இரும்பிடி-கரிய பெண் யானைகளானவை; இன் தேன்-இனிய வண்டுகள்; இரசம் கொண்டு-இன்பத்தைக் கொண்டு; இரைக்கும் குரலை-பாடுகின்ற ஒலியைக் கேட்டு ; பிரசை பேணி வருஉம்-தேன் கூட்டினை விரும்பி வருகின்ற; முரசு அருவி ஆர்க்கும்-முரசு முழங்குவது போல அருவி யாரவாரஞ் செய்கின்ற; மலைநாடற்கு-மலை நாட்டையுடைய என் தலைவனுக்கு; என்தோள்-எனது தோளிற் கூடும் இன்ப மானது; நிரையம் எனக் கிடந்த ஆறு-நரகம்போல நினைக்கு மாறு இருக்கும் இயல்பு, (என்ன காரணம் என்று கூறினள்).

(வி-ம்) முன் என் தோளிற் கூடும் இன்பத்தை விரும்பி இரவும் பகலும் இடையறாது வந்து திரிந்தவர், இஞ்ஞான்று நர

கம் போலக் கருதி வெறுத்து வராது இருப்பதற்குக் காரணம் யாது என்று அறியாது கலங்குகின்றேன் எனத் தோழியிடம் கூறினன் என்பது. வருஉ மலைநாடன், ஆர்க்கு மலைநாடன் எனத் தனித்தனி கூட்டுக.தேனியின் குரலைக்கேட்டு,தேன்கூடு இருக்கும் இடமறிந்து அக் கூட்டினை யெடுக்கப் பெண்யானை



வருவது போல நமது குரலைக் கேட்டு நாமிருக்கும் இடமறிந்து வந்து என்னைக் கலந்து இன்பம் நுகர்ந்த தலைவன் என அவனி யல்பு கூறியவாறு காண்க. நாட்டினியல்பு உடையவன் அவன் என நயப்புக் கூறியவாறு இது. முரசருவி யார்க்கும் நாடன் என்றது, இவன் நாடு போலவே அவனைக் குறித்து அலர் பரவி யெங்கும் ஒலிக்கும் என்ற குறிப்பை விளக்கியது. இரசம்-சுவை. அஃது இன்பத்தை யுணர்த்தியது. பிரசம்- தேன். இது அம் குறைந்து பிரசு என நின்று ஐ யுருபு புணர்ந்து பிரசை என்றாயிற்று. தேன் கூட்டினைக் காட்டியது.

(இ-பு) இனிமை+தேன்-இன்றேன. இருமை+பிடி= இரும்பிடி: பண்புத் தொகைகள். வரும் வருஉம் என அள பெடுத்தது. இசை நிறையளபெடையிது: முரசருவி:உவமைத் தொகை; முரசு போல என உவமை யுருபுவிரிக்கப்படுவதால். என்றேள்:ஆறும் வேற்றுமைத் தொகை.

## இதுவுமது

## 6. மலையா வுகளு மரம்பயில் சோலை

புரைசான் மடமந்தி யோடி யுகளும்
புரைதீர் மலைநாடன் பூணேந் தகலம்
உரையா வழங்குமென் னெஞ்சு.

(சொ-ள்) மரை ஆ உகளும்-காட்டுப் பசுக்கள் தாவித் திரிகின்ற; மரம் பயில் சோலை-மரங்கள் வளர்ந்திருக்கும் சோலையில்; உரைசால் மடம் மந்தி ஓடிஉகளும்-உயர்த்துச் சொல்லப் படுதலமைந்த இளமையான குரங்குகள் விரைந்து தாவித் திரிகின்ற; புரைதீர் மலைநாடன் பூண் ஏந்து அகலம் - குற்றம் நீங்கிய மலை நாடனாகிய தலைவனது ஆர முதலிய அணிகலம் தாங்கிய மார்பானது, என் நெஞ்சு உரையா வழங்கும்-என் மனத்தைத் தேய்த்து அதனுள் நடக்கின்றது, (என் செய்வேன் தோழி என்றாள்).



(வி-ம்) உகளும்என்ற பெயரெச்சம் இரண்டும் மலைநாடன் என்ற பெயர் கொண்டு முடிந்தன. மரையா உகள்வது மலையில் என்றும் மந்தியுகள்வது சோலையில்என்றும் உணர்ந்துகொள்க. குரங்கு அறிவினுஞ் செயலினும் விலங்குகளி னுயர்ந்தது என்று புகழப்படுவதால் உரைசால் என அடைகொடுத்தார்: மனிதர் செய்யுஞ் செயல் பலவுங் கண்டு அவ்வாறே புரியத் தொடங்குவது குரங்கின் இயற்கை என்பதும் அறிக. தலைவனோடு கூடிக் கலந்த இன்பத்தை என் நெஞ்சு விழைகின்றது. அவ்விழைவாற் காதல்கொண்டு கலங்குகின்றேன் என்ற குறிப்புத்

தோன்ற "அகலம் உரையாவழங்கும் என்னெஞ்சு" என்றாள். என் நெஞ்சைத் தேய்க்கின்றது அவன் மார்பு; அன்றியும் அதனுள் அடிக்கடி பழகி நடக்கின்றது; அதனால் என்நெஞ்சு புண்ணாகி வருத்தமுறுகின்றேன். என் நெஞ்சு மெலிது; அவன் மார்போ கல்லினும் வலிது;அதனோடு பல பூண்களும் அணியப்பட்டது; அடிக்கடி வந்து நடக்கின்றது; தேய்க்கின்றது; எவ்வாறு ஆற்றுவேன்; ஆற்றாமையாற் புலம்புகின்றேன் என்ற குறிப்புக் காண்க. உழக்கும என்ற பாடத்திற்கு மிதித்துக் கலக்குகின்றது என்று பொருள் கொள்க. மார்பு, மாதர் நினைக்கும் சிறந்த உறுப்பு; கொங்கை ஆடவர் நினைக்கும் சிறந்த உறுப்பு என அறிக. மலைநாட்டில் மரையாவும் மந்தியும் உகள்வது போல அவன் மார்பு என்னெஞ்சில் உகள்கின்றது என்ற குறிப்புத் தோன்றுதல் காண்க. உரைத்தல்-தேய்த்தல்.

(இ-பு) பயில் சோலை:வினைத்தொகை. தீர்மலைநாடன் என்பது,ம்அது. உரையா:செய்யா என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம்; உரைத்து எனக்கொள்க. உரையா வழங்கும் என வினை முடிவு செய்க. அகலம் என்பது எழுவாய். நெஞ்சு என்பதில் இரண்டனுருபு தொக்கது. நெஞ்சினை உரையா அதில் வழங்கும் எனக் கூட்டுக.

இச் செய்யுள் தலைவி கூற்று நிகழுமிடத்து மறையாது வாய்விட்டுக் கூறி அழுங்குதலாகிய "விட்டுயிர்த்தழுங்கல்" என்பதற்கு மேற்கோள் தொல். கள. சூத். உக. இளம். "உழக்கும்" என்ற பாடமும் அவ்வுரையிற்கண்டதுவே;

## இதுவுமது

7. கல்வரை யேறிக் கடுவன் கனிவாழை
யெல்லுறு போழ்தி னினிய பழங்கவுட்கொண்
டொல்லென வோடு மலைநாடன் றன் கேண்மை
சொல்லச் சொரியும் வளை.

(சொ-ள்) கடுவன் கல்வரை ஏறி - ஆண்குரங்குகள் பல கற்களையுடைய மலையில் ஏறி; எல் உறு போழ்தின்-சூரியன் பொருந்திய பகற்காலத்தில்; வாழை கனி இனிய பழம் கவுள் கொண்டு-அங்குள்ள, வாழை மரத்திற் கனிந்த பழத்தைப் பறித்து உரித்துக் கன்னத்தில் ஒதுக்கிக் கொண்டு; ஒல்லென ஓடு மலைநாடன் தன் கேண்மை-விரைவாக ஓடுகின்ற வளம் பொருந்திய மலைநாடனாகிய நம் தலைவனது நட்பின் இயல் பினைப்பற்றி; சொல்ல வளை சொரியும்-கூறத் தொடங்கினால் அப்போதே என் கைவளையல்கள் கழன்று விழும், (என்று கூறினள்).

(வி-ம்) ஆண் குரங்குகள் வாழைக் கனிகளைப் பகற்காலத் திற் பறித்து உரித்துக் கன்னத்திலொதுக்கி விரைந்தோடும் மலைவளமுடைய தலைவன் ஆதலால் அவன் செயலும் அது போலவே யிருக்கின்றது என்று குறிப்பிற் கூறினள். தினைப புனத்திலேறி அங்கிருந்த என்னைக் களவிற் புணர்ந்து இன்பந் துய்த்து விரைவில் நீங்கினான் என்பது குறிப்பு. அவ்வாறு பிரிந்த தலைவனியல்பை நான் சொல்லக் கருதியபோதே என் வளையல் கழல்கின்றன என்பது உடல் மெலிகின்றது என்பதை யுணர்த்தியதாகக் கொள்க. சொல் என்பதற்கு நீ கூற என்று பொருள் கொண்டு தோழி இயற்படமொழிந்தனள் என்றும்

அது குறித்துத் தலைவி இயற் பழித்துரைத்தனள் என்றும் பொருள் கூறலாம். அவ்வாறு கூறினும் தொல். கள. சூத். 21. பிரிந்த வழிக்கலங்கினும் என்பதின் கண்ணே அடங்கும் என்று அறிக.

(இ-பு) கல்வரை:இரண்டனுருபும் பயனும் தொக்க தொகை. கவுட்கொண்டு : ஏழாம் வேற்றுமைத் தொகை.



ஒல்லென:விரைவுக்குறிப்பிடைச்சொல். நாடன் தன்-தன்: சாரியை, சொல்ல:செய என் வாய்ப்பாட்டு வினையெச்சம்; இது சொரியும் என்பதனைக் கொண்டு முடிந்தது; காரணப் பொருட்டில் வந்தது.

தலைவி வேறுபாடு கண்டு வினவிய செவிலிக்குத்
தோழி அறத்தோடு நிற்றல்.

3. கருங்கைக் கதவேழங் கார்ப்பாம்புக் குப்பங்
இ......க் ...கொண்.........கரும்
பெருங்கள் மலை நாடன் பேணி வரினே
கருங்கு மிவளுற்ற நோய்.

(சொ-ள்) கருங்கை கதம் வேழம்- வலிய கையையுடைய சினம் பொருந்திய யானைகள் ; கார் பாம்புக்கு பங்கு-கரிய மலைப் பாம்புகளின் பக்கத்தில் ; இ....க் கொண்.... கரும்-பெரியகை களால் தேனீக்களை யோட்டித் தேன் கூட்டினை யெடுத்து அதன் கண்ணுள்ள இனிய தேனையுண்ணும் ; பெருங்கல் மலை

நாடன் பேணி வரின்-பெரிய கற்களையுடைய மலை நாடனாகிய தலைவன் இவளை விரும்பி நாடோறும் வந்தால்; இவள் உற்ற நோய் சுருங்கும்-இவள் கொண்ட காமநோயானது தணியும், (என்று தோழி செவிலியிடம் கூறினள்).

2 ஆம் அடி (கருங்கைக்கொண் டோச்சியிரு லின்றேனுக கும்) என்று கொண்டு பொருள் எழுதப்பட்டது.

(வி-ம்) தலைவி வேறுபாட்டிற்குக் காரணம் வேறொன்று மில்லை. ஒரு தலைவனைக் காதலித்து அவன் வாராமை குறித்து உடல் மெலிந்து வருந்துகின்றாள்; அத்தலைவன் நாடோறும் வந்து இவளுடன் கலந்தால் இவள் நோய் நீங்கும்; அவனை நினைந்து உடல் மெலிகின்றாள் என்று குறிப்பாலுரைத்தாள். இவ்வாறு உரைக்கவே செவிலி பாங்கியைத் தொடுத்து வினவு வாள்; காதலன் யார்? அவனைக் காதலித்ததற்குக் காரணம் யாது? அவன் எவ்வாறு இவட்குக் காதலனானான்? என்று.



வினாக்கட்குத் தகுதியாக பூத்தருபுணர்ச்சி, புனறருபுணர்ச்சி, களிறுதருபுணர்ச்சி என்ற மூன்றிலொன்றைப் படைத்து மொழிந்து அறத்தொடு நிற்பாள். அவனுக்கே மணமுடிப்பது அறமாகும் என்றும் வற்புறுத்துவாள். இதுவே அறத்தொடு நிலையாகும். வரைதல் பயன். யானை கரும்பாம்புகளின் பக்கத் திற் றுணிவாக நின்று தேன் கூட்டினையழித்துத் தேனுகர்ந்தது

போல நம் குறவர்குடி வேடர்கட்கு அஞ்சாது இரவில் வந்து இவளைக் கூடிக்கலந்து இன்பம் நுகர்நது செல்கின்றான் எனக் களவொழுக்கம் உள்ளுறையுவமை வழித் தோன்றுவதும் காண்க. இது. தொல். கள. சூத். 24. முன்னிலை யறனெனப் படுதலென் றிருவகைப், புரைதீர் கிளவி தாயிடைப்புகுப்பினும் என்பதன்பாற்படும்.

(இ-பு) கருமை + கை-கருங்கை, இருமை + கை-இருங்கை: பண்புத்தொகைகள். பெருமை + கல்-பெருங்கல் என்பது மது. பேணி, வரின் நோய் சுருங்கும் என வினை முடிவு செய்க. பேணி : செய்து என்னும் வாய்ப்பாட்டு வினையெச்சம். வரின் செயின் என்ற வாய்பாடு சுருங்கும, செயயும் என் வாய்பாட்டு வினைமுற்று.

வரைவு நீட்டித்தவழி ஆற்றுளாய தலைவி தோழிக்குக் கூறுதல்.

9. காந்த ளரும்புகை யென்று கதவேழம்
ஏந்தன் மருப்பிடைக் கைவைத் தினனோக்கிப்
பாய்ந்தெழுந் தோடும் பயமலை நன்னாடன்
காய்ந்தான்கொ லெங்கட் கலப்பு.

(சொ-ள்) கதம் வேழம்-சினம் பொருந்திய யானையானது; காந்தள் அரும்புகை என்று-செங்காந்தள் மலரைக் கொடிய தீ யென்று கருதி; ஏந்தல் மருப்பிடை கை வைத்து-உயர்ந்த தன் கொம்புகளினிடையே துதிக்கை உயர்த்தி நீட்டிக்கொண்டு; இனன் நோக்கி பாய்ந்து எழுந்து ஓடும்- தன் இனமாகிய யானைக் கூட்டம் இருக்கும் இடத்தை நோக்கி விரைந்து ஓடு கின்ற; பயம் மலை நல் நாடன்- அச்சத்தைத்தரும் மலைகளை

தான் கொல்-நம்மிடத்தில் வந்து கூடிக்கலந்து செல்லும் இன் பத்தை வெறுத்தானே? வெறுத்திலனே? யானறியேன். (என்று தலைவி தோழியிடங் கூறினள்.)

(வி-ம்) காந்தள் என்பது மலரையுணர்த்தியது. புகை என் பது நெருப்பினையுணர்த்தியது. காந்தட் பூக்கள் பல நெருக்க மாக மலர்ந்திருந்தால் அது தீயெரிவது போலத்தோன்றும். யானைகள் தீக்கு மிகவும் அஞ்சும். யானைகள் வராமல் தடுப்ப தற்கு மலையில் வாழ்வோர் பரண்கட்டி அதன்மேற் படுத்துச் சுற்றிலும் மரக்கட்டைகளைப் போட்டுத் தீ மூட்டிவிடுவர். இரவு முழுவதும் எரியும். அது கண்டு, நெருப்புத் தோன்றும் இடத் திற்கு யானை வராது. யானைகளின் இயற்கை நெருப்பைக்கண்டு அஞ்சுவது. யானை அஞ்சி ஓடும்போது துதிக்கையை இரு கொம்புகட்கும் நடுவில் நிமிர்த்திக்கொண்டே செல்வதும் இயற்கை. இதனையறிந்து கவிஞர் இவ்வாறு கூறினர் என் றுணர்க. யானைகள் வீறிட்டோடுவது கண்டார்க்கு அச்சந்தரும் ஆதலாற் "பயமலை" என்றார். பயம்-பயன் என்று பொருள் கொண்டு பலவகைப் பயன்களையும் மக்கட்குத் தரும் மலை என் றுங் கூறலாம். யானை ஓடும் இயற்கையுடைய மலை, பயந்தரு மலை என்று தனித்தனி கூட்டுக. யானை காந்தள்மலரைக்கண்டு தீயென மருண்டு வெருண்டோடுவது போல அந்நாட்டுத் தலை வனும் நம்மைத் தீயோர்கள் எனக்கருதி வெருண்டு ஓடிமறைந் தான் போலும் என உள்ளுறை கொள்க. பிரிந்துசென்ற காத லன் வராததால் வெறுத்தானே? வெறுத்திலனே என்று ஐய முறுகின்றேன். உன்கருத்து யாது எனக்கேட்பாள் போல வின

வினள். தோழியிடம் கூறியது தன்துயரத்தை மாற்றுவள் என்று கருதியேயாம்.

(இ-பு) காத்தள்: பொருளாகுபெயர். புகை: சினையாகுபெயர். அரும்புகை-பண்புத்தொகை. இனம்-இனன் இறுதிப்போலி. நங்கண்-கண் ஏழனுருபு. கொல்: ஐயப்பொருளில் வந்த இடைச் சொல். கலப்பு-கூடல். இது பு விகுதிபெற்ற தொழிற் பெயர். கலப்பு இறுதிதொக்க இரண்டாம் வேற்றுமை. நாடன் நங்கட் கலப்பு காய்ந்தான் கொல் எனக் கூட்டுக.





தலைமகள், இரவுக்குறி ஏதமுடைத்து என்று அஞ்சித் தோழிக்குக் கூறுதல்.

10. பொன்னிணர் வேங்கைப் புனஞ்சூழ் மலைநாடன்
மின்னி னனையவே லேந்தி யிரவினுள்
இன்னே வருங்கண்டாய் தோழி யிடையாமத்
தென்னை யிமைபொரு மாறு.

(சொ-ள்) தோழி-என்னுயிர்ப் பாங்கியே; பொன் இணர் வேங்கை புனம் சூழ் மலைநாடன்-பொன் போன்ற மலர்கள் பொருந்திய வேங்கை மரங்களையுடைய புனம் சூழ்ந்திருக்கும் மலைநாட்டை யுடையவனாகிய தலைவன்; மின்னின் அனைய வேல் ஏந்தி-மின்னலைப்போல ஒளிவீசும் வேற்படையைக்

கையில் ஏந்தி; இரவினுள் இடையாமத்து இன்னே வரும்-இரவின் நடுச்சாமததில இப்போதே வருவான், இமை பொரும் ஆறு என்னை-என் கண்ணிமை யொன்றோடொன்று பொருந்தி யான் உறங்குமாறு எங்ஙனம் (அவன் வருவதை நினைந்து கவலையுறுகினறேன் என்றாள்)

(வி-ம்) இணர்-பூங்கொத்து. இது விரிந்த மலருக்காயிற்று. வேங்கை மலர் பொன் போன்றது. புனம் என்றது மலையைச் சூழ்ந்த காடுகளைக் குறித்தது. தோழி இரவுக் குறிநேர்ந்தவள் ஆதலால் தலைவியை யெழுப்புவதற்கு அவள் உறங்கும் இடஞ் சென்றாள். உறங்காது விழித்திருப்பதுகண்டு ஏன் இவ்வாறு விழித்திருக்கின்றனை என வினவியபோது அவள் கூறியதாகக் கொள்க. தலைவன் தனியனாய்க் கையில் வேலேந்தி நள்ளிருளில் வருவதை யெண்ணினேன். புலி கரடி முதலிய பொல்லா விலங்கினங்களும் அரவும் பேயும் வழங்கும் வழிகளைக் கடந்தன்றோ வரல்வேண்டும்? அவனுயிர்க்கு இடையூறு நேரினும் நேருமே! நேர்ந்தால் என்னுயிர் நிற்குமோ? இத்தகைய களவொழுக்கம் என்னாலன்றோ நேர்ந்தது; என்று எண்ணி எண்ணிக் கண்ணிமை சிறிதும் பொருந்தாது கலங்குகின்றேன். இதனை நீக்கும் சூழ்ச்சியை ஆய்ந்து விரைவிற் செய் எனக் குறித்தாளாயிற்று. அவன் கைப்பற்றிய வேலால் வழியறிந்து வருகின்றான் என்பதை விளக்க "மின்னின் அனைய வேலேந்தி"



என்றார். தோழிசென்று தலைவியைக் கண்டவமையும் அரையிருள் ஆதலால் "இன்னே வரும்" என்றாள். "என்னை" என்பது எங்ஙனம் என்ற பொருளைத் தந்தது. கண்டாய்: முன்னிலை

யசை. ஆராய்வாய் என்று பொருள்கொள்ளினும் பொருந்தும்.

(இ-பு) இணர்:சினையாகுபெயர். பொன்னிணர்:உவமைத் தொகை. மின்னின்:இன்சாரியை. வரும்:செய்யும் என்னும் முற்று; ஆண்பாற்கு வந்தது. 'தோழி' அண்மை விளி, இயல பாய் நின்றது. பொரும்:பெயரெச்சம் ஆறு என்ற பெயர் கொண் டது. என்னை:வினைக்குறிப்பு. சூழ்மலை.வினைத்தொகை.

11. எறிகிளர் கேழல் கிளைத்திட்ட பூழி
பொறிகிளர் மஞ்ஞை புகன்று குடையு
முறிகிளர் நன்மலை நாடன் வருமே
யரிதுரைத்தில் லில்லி னமக்கு.

(சொ-ள்) கேழல்-பன்றிகளானவை ; எறிகிளர் கிளைத்திட்ட பூழி-கொம்புகளாற் குத்தியெழுப்பிய நிறைந்த புழுதியில் ; பொறிகிளர் மஞ்ஞை புகன்று குடையும்-புள்ளிகள் விளங்கிய மயில்கள் விரும்பிப் படிந்து விளையாடும் இயல்புடைய, முறி கிளர் நன்மலை நாடன்- இலைமரங்கள் விளங்கும் நல்ல மலை நாட்டையுடையவனாகிய தலைவன் ; இல்லில் நமக்கு அரிது உரைத்துவரும்- இம்மனையின்கண் நமக்கு அருமையாகச் சில சொற்கள் பேசி வருவான். (அவ்வரவு எனக்கு மிகவும் அச்சத்தை விளைக்கின்றது என்றாள்.)

(வி-ம) எறிகிளர் கிளைத்திட்ட எனக்கூட்டப்பட்டது. எறிந்தபுழுதி, கிளர்ந்த புழுதி கிளைத்திட்ட புழுதி எனத் தனித் தனி கூட்டுக. பன்றி மண்ணைக் கொம்புகளாற் குத்தி யெழுப்புவதும் புழுதியாக்குவதும் அப்புழுதியிற் படுத்துக்

கிடப்பதும் இயற்கை. அது குறித்து ''கேழல் கிளைத்திட்ட பூழி '' என்றார். இரவிற்பன்றிகள் படுத்திருந்த புழுதி நிறைந்த



இடங்கள் மென்மையாக இருக்கும். பகலில் அதனைக் கண்ட மயில்கள் அவ்விடத்தினை விரும்பிக் கால்களாற் கிளைத்துத் தங்கியிருக்கும். இது மயில்களின் இயற்கை. பொறி-புள்ளி. மயிலுக்குச் சிறகுகளிற் கண்போலப் புள்ளி பரந்து தோன்றும்; அதுகுறித்து ''பொறிகிளர் மஞ்ஞை'' என்றார். முறிகிளர் என்றது இலைகள் செறிந்தது என்பதையுணர்த்திற்று. முறி என்பது ஆகுபெயராய் மரங்களை யுணர்த்தியதெனக் கொள்ளினும் அமையும். அரிதுஎன்பது அவன் வரவு மிகவும் அருமையானது எனவும், பேசுஞ்சொல் அருமையானது எனவும் இருவகையாகவும் பொருள்கொள்ளலாம் இரவு வரவு ஏதமுடைத்து; இதனை நீக்குவதற்குரிய சூழ்ச்சி ஆய்க என்பது கருத்து.

பன்றி குத்திக் கிளறியெழுப்பிய புழுதியின் அருமையறியாது மயில் விரும்பிக் குடைவதுபோல அவன் இரவில் வரும் வழி அருமையையறியாமல் நான் அவனோடு கூடியின்பம் நுகர்கினறேன் எனக் குறிபபாற் கூறி வெறுத்தனள் என உள்ளுறை கொள்க.

(இ-பு) எறிகிளர் என்ற முதனிலைகள் பெயரெச்சப பொருளைத் தந்தன. பொறிகிளர் எழுவாய்த் தொடர். முறிகிளர்என்பது மது. வரும்:செய்யும் என்னும் முற்று. அரிது:ஒன்றன்பாற் குறிபபு வினையாலணையும் பெயர். நன்மலை:பண்புத்தொகை. கிளைத்திட்ட பூழி. பெயரெச்சத் தொடர்.

### இதுவு மது

**12. நாக நறுமலர் நாள்வேங்கைப் பூவிரவிக்**

கேச மணிந்த கிளரெழிலோ னாக
முடியுங்கொ லென்று முனிவா னொருவன்
வடிவேல்கை யேந்தி வரும்.

(சொ-ன்) நாகம் நறுமலர் நாள் வேங்கைப்பூ விரவி-புன்னையின் நல்ல மலரையும் அன்றலர்ந்த வேங்கைப் பூவினையும் கலந்து; கேசம் அணிந்த கிளர் எழிலோள் ஆகம்-கூந்தலிற் புனைந்து விளங்கிய வனப்புடையோளாகிய நம் தலைவியின் உடலானது; முடியும் கொல் என்று-அழிந்து விடுமோ என்று



ஐயங்கொண்டு;' ஒருவன் முனிவான் வடிவேல் கை ஏந்தி வரும்-நம் தலைவனாகிய ஒப்பற்றவன் தன் உயிர் வாழ்க்கையை வெறுத்துக் கூர்மையான வேலைக் கையிற்றாங்கி இரவில் வருவான். (ஆதலால் இவ்வரவையானஞ்சுகின்றேன் விலக்கு. என்றாள்).

(வி-ம்) புன்னை மலரும் வேங்கை மலரும் விரவிப்புனைந்த கூந்தலுடைய "எழிலோள்" என்றனள் தலைவி. இது தன்னைப் படர்க்கையாகக் கூறியது. நான் பிரிவாற்றாமையாலிறந்து படுவேன் என்று கருதி இரவில் தனியாக வருகின்றான் தலைவன் எனக் கூறினள். என்னுடைய முடியுங்கொல் என்று கருதித் தன்னுயிரை வெறுத்து வருகின்றான் என்பதை விளக்க "முனிவான் ஒருவன் வரும்" என்றாள். கொடிய விலங்கினங்களும், அரவும் பேயும் வழங்கும் ஆற்றிடையும் கான்யாற்றினிடையும் ஏற்றிழிவுடை நெறியினும் இரவில் வருவது தன்னுயிரை வெறுத்தவர்க்கே தகுதியாம் என்பது தோன்றக் கூறியது இது. இவ்வாறு வந்து என்னுயிரைப் புரக்கின்றான்; என்னுயிரோ அவனுயிராக இருக்கின்றது: இதனைநீ குறியாது இரவில் வருக

எனக்கூறினே; எனத்தோழிக்குக் குறிப்பாலறிவித்தது இது. புன்னைமலரும் வேங்கைமலரும்புனைந்த கூந்தல் என்றது முன தழையுங் கண்ணியும் கொண்டு வந்த போது புன்னை மலரையும் தலைவன் கூந்தலிற புனைந்தது குறித்துக் கூறியது. வேங்கைமலர் மலைநாட்டு வாழ்வார்க்குரியது; அம்மலரைப் புனைவது அம்மகளிரியல்பு. புன்னை நெய்தற்குரியது. வேங்கை குறிஞ்சிக்குரியது. இவ்விரண்டும் புனைந்த எழிலோள் என்றது நெய்தற்குரிய இரங்கலும் குறிஞ்சிக்குரிய புணர்தலும் என்னுள்ளத்தில் விரவியிருக்கின்றது எனக் குறிப்புணர்த்தியவாறு எனவும் கொள்க.

(இ-பு) நறுமலர்:பண்புத்தொகை. நாள் என்பது இலக்கணை. புதுமையை யுணர்த்தியது. எழிலோள்-தன்மை படர்க்கையாகக்கூறிய வழுவமைதி. செறலிற் கூறியது.'கொல் ஐயப்பொருளில் வந்தது. முனிவான்:முற்றெச்சம். முனிவு+ஆன் எனப்பிரித்து மூன்றனுருபாக்கி உடனிகழ்ச்சிப்பொருளில் வந்ததாகக் கொள்ளினும் அமையும்.



## 2. பாலை

வரைபொருட் பிரிவுணர்த்தப்பட்ட தோழி தலைவனுக்குத்தலைவியின் பிரிவாற்றுமை கூறல்.

13. கடுகி யதரலைக்குங் கல்சூற் பதுக்கை.
விடுவி லெயினர்தம் வினையோர்த் தோடும்
நெடுவிடை யத்தஞ் செலவுரைப்பக் கேட்டே
வடுவிடை மெல்கின கண்.

(சொ-ள்) கடுகி அதர் அலைக்கும் கல்சூழ் பதுக்கை--விரைந்து வழியில் வருவோரை அடித்துப பொருள் பறிக்கின்ற பரற்கற்கள் சூழ்ந்த கரும்பாறைகளில் இருந்து, விடுவில் எயினர் தம் விளை ஓர்த்து நெடுவிடை ஓடும் அத்தம்-அம்பேவுகின்ற விற் பிடித்த வேடர்களுடைய சீழ்க்கையடிக்குங் குரலைக் கேட்டு நீண்ட மரையான் ஏறுகள் அஞ்சியோடுகின்ற பாலை வனத்தின் வழி; செலவு உரைபப கேட்டு-நீ செல்லக்கருதுகின்றுய் என்பது நான் சொல்லக் கேட்டவுடனே; வடு இடைகண் மெல்கின- மாவடுப்போன்ற கண்களிடையே கண்ணீர் மெதுவாக வழிந்தன. (ஆதலால் நீ பிரிந்து செலலல் தகவன்று என்று குறிபபிற் கூறினள் )

(வி ம) ஆறலைக்கும வேடர் பல் வேறிடங்களிற பதுங்கியிருந்து வீளையொலி கேட்டவுடன் விரைந்து வந்து கூடி வழிபறி செய்வர் என்பது தோன்ற " கடுகி அதர் அலைக்கும்" என்றார். பதுக்கை பதுங்கியிருப்பதற்குத் தக்கபாறை. பதுங்கத் தகக புதர்களையும் பதுக்கை எனக்கூறலாம். கல்சூழ் என்பது பெரிதும் சிறிது மாகக்கிடக்கும்பரல்களை யுணர்த்தியது. கல் என்பதற்குப் பாறை எனப்பொருள் கொண்டு பலபாறைகள் சூழ்ந்த பதுங்கும் இடம், என்பதும் அமையும். வீளை-சீழ்க்கை; இது வழியில் வருவோரைக் கண்டு பல் வேறிடங்களிற் பதுங்கியிருக்கும் வேடர்கள் வந்து தன்னுடன் கூடுவதற்காக ஒருவன்கைவிரல்களை வாயில் வைத்துப் பேரொலி செய்தல், இதனைச் சீழ்க்கையடித்தல் என்பர். விடை-எருது. இது காட்



டுப்பசுவின் ஏற்றினை யுணர்த்தியது. வேடர் அடிக்கும் சீழ்க்கையொலி கேட்டு மரையான் ஏறு ஓடுவது போல நீயும் இங்

குக் கூறும் அர்பலும் அலரும் கேட்டு அஞ்சிப் பிரிகின்ருய் போலும்; இவ்வாறு பிரியின் தலைவி ஆற்ருளாதலாற் பிரிவு நினையற்க எனக்குறிப்பிற் கூறியதாயிற்று. மல்கின என்றிருப் பின் பொருள் சிறக்கும். "மெல்கின" என்றிருப்பதால்அதற்குத் தக்கவாறு பொருள் கூறப்பட்டது.

(இ-பு) சூழ்பதுக்கை; விடுவில்:வினைத்தொகைகள். நெடு விடை' பண்புத்தொகை. வடு என்பது உவமையாகு பெயராய்க கண்ணிணையுணர்த்தியது. கண் என்பது கண்ணீரை யுணர்த் தியது இது இடவாகுபெயர். மெல்கின:பலவின்பால் வினை முற்று. ஒருமைக்கு வந்தது; இது வழுவமைதி.

14. கதநாய் துரப்ப .. . ......

.. ... .. .. .... ..... யவிழும்

புதன் மாறு வெங்கானம் போக்குரைப்ப நில்லா

முதன் ...... ...... ......

(சொ-ள்) கதம் நாய துரப்ப-சினம் பொருந்திய நாய்கள் தொடர்ந்து செலுத்த; அவிழும்-விரிகின்ற; புதல் மாறு வெங் கானம்-புதர்கள் மாறுபடுகின்ற கொடிய சுரத்தின் வழியாக; போக்கு உரைப்ப நீ பிரிந்து செல்வதை நான் கூற; நில்லா- நில்லாமற் கழல்கின்றன. (வளை)

15. .. . .... ....

.. . . . .. ...... ....

கடுங்கதிர் வெங்கானம் பல்பொருட்கட் சென்ருர்

கொடுங்கள் மலை ...... .......

(சொ-ள்) கடுங்கதிர் வெங்கானம்-கொடிய சூரியன் கிர

ணங்களால் மிகவும் வெப்பமடையும் காட்டின் வழியாக; பல் பொருள்கண் சென்றார்-மிகுதியாகப் பொருளீட்டி வருதற் பொருட்டுப் பிரிந்து சென்ற நங்காதலர்; கொடுங்கல் மலை-வளைந்த கற்பாறைகளையுடைய மலை.



16. ...... ...... வுறையு மெல்லென் கடத்துக்
கடுஞ்சின வேங்கை கதழ்வேழஞ் சாய்க்கு
... .. ...... ....... ......
...... ...... ...... நமர்

(சொ-ள்) உறையும் மெல்லென் கடத்து-தங்கியிருக்கும் மெல்லிய காட்டுவழியில்; கடுஞ்சினம் வேங்கை கதழ் வேழம் சாய்க்கும்-மிகுந்த கோபத்தையுடைய புலிகள் வேகம் பொருந்திய யானையை யடித்துக்கொல்லும்; நமர்-நம்தலைவர்.

17. கடமா விரிந்தோடுங் கல்லத ரத்த
மடமா விரும்பிடி வேழ மரு ..
.. .. . . .. .. ண்ட வுண்கண் ணுணீர்
.. ... . ... .. ......

(சொ-ள்) கடமா இரிந்து ஓடும் கல் அதர் அத்தம்-கடமான் என்ற விலங்குகள் முரிந்து விரைந்து செல்கின்ற பரற் கற்களையுடைய வழிகள் பொருந்திய பாலைவனத்தில்; மடம்மா இரு பிடி வேழ மரு-இளமையான கரிய பெரிய பெண்யானைகளோடு ஆண்யானைகள் கூடும்; நீண்ட உண் கண்ணுள் நீர் நீண்ட மையுண்ட கண்களில் உள்ளிருந்து வரும் கண்ணீர்.

பிரிவிடை வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தித் தேற்றியது.

**18. ஆமா சிலைக்கு மணிவரை யாரிடை**
**யேமாண் சிலையார்க் கினமா விரிந்தோடுந்**
**தாமாண்பில் வெஞ்சுரஞ் சென்றார் வரக்கண்டு**
**வாய்மாண்ட பல்லி படும்.**

(சொ-ள்) ஆமா-காட்டுப் பசுக்கள் (மரையா); சிலைக்கும் கதறுகின்ற (ஒலிக்கின்ற); அணிவரை ஆர் இடை-அழகிய மலையையடுத்த அருமையான வழியில்; ஏமாண் சிலையார்க்கு இனம்மா இரிந்து ஓடும்-அம்பும் மாட்சிமைப்பட்ட வில்லும் உடைய வேடர்களைக்கண்டு கூட்டமாகிய விலங்குகள் முறித்



தோடுகின்ற; மாண்பு இல்வெஞ் சுரம் சென்றார் வர கண்டு-பெருமையில்லாத கொடிய பாலை நிலத்துப் பிரிந்து சென்ற நம் தலைவர் வரவினை யறிந்து; வாய் மாண்ட பல்லி படும்-குறி கூறுவதால் பெருமை பொருந்திய வாயையுடைய பல்லியொலிக்கின்றது. (ஆதலால் நம் தலைவர் இன்னேவருவர், வருந்தாதே எனத்தோழி கூறினள்)

(வி-ம்) காட்டுப் பசுக்கள் கன்றுடனும் ஏற்றுடனும் கூடி யெங்கும்திரிவதால் அவற்றின் மிகுந்த மலை என்பது தோன்ற "ஆமா சிலைக்கும் மணிவரை" என்றார். மறவர்களேயன்றி வேறு எவரும் செல்வதற்குத தக்கவழி அன்று என்பது

விளங்க "ஆரிடை" என்றார். ஆர் இடை-அரிய வழி; கொடிய வழிஎன்பது. வேடர்கள் ஒவ்வொரு நாளும் வனவிலங்குகளைக் கொன்று தின்பதற்காக வில்லையும அம்பையும் கையிற் கொண்டு காட்டிற செல்வது வழக்கம். கண்ணிற் புலப்பட்ட விலங்கின்மேல் அம்பேவிக் கொல்வதும் அவர் இயல்பு. இதனைப் பல நாளும அறிந்த விலங்கினங்கள் வேடர் வரவு கண்டால் அஞ்சியோடும்; ஆதலால அதனை "மாண்பில் வெஞ் சுரம் என்றார். மக்கள் செல்வதற்குத் தகுதியில்லாத சுரம் என் பதுகருத்து. வெஞ்சுரம் ஆரிடை சென்றார் எனக்கூட்டுக. அரிய சுரத்தின் வழிச்சென்றமை குறித்து நாம் வருந்துவோம் என்பதை யறிவார்; விரைந்து வருவார் என்று கூறினேன். நீ பின்னும் ஆற்றாமல வருந்தினை; இப்போது பல்லி இடப்பக்கம் சொல்லுகின்றது; அதுஅவர் இடைவழியில் வருவது தெரிந்தே கூறுகின்றது. ஆதலால ஆற்றியிரு என்று வற்புறுத்தினள் எனக்கொள்க.

(இ-பு) அருமை+இடை-ஆரிடை பண்புத்தொகை; வெம்மை+சுரம்-வெஞ்சுரம், இதுவும் அது. மாண்சிலை என், பது வினைத்தொகை; பண்புத்தொகை எனக்கொள்ளினும் பொருந்தும். சென்றார்:வினையாலணையும் பெயர்;படும்:செய்யும் என்னும் வாய்பாட்டு வினைமுற்று. வர, கண்டு, பல்லிபடும். எனக்கூட்டுக. தாம் : அசை.



இதுவுமது

19. அரக்காரந்த வோமை யரிபடு நீழற்
செருக்கில் கடுவகளிறு சென்றுறங்கி நிற்கும்

பரற்கானம் பல்பொருட்குச் சென்றார் வருவர்
நுதற்கிவர்ந் தேறு மொளி.

(சொ-ள்) அரக்கு ஆர்ந்த ஓமை அரிபடு நீழல்-அரக்கி னது நிறம் போன்ற செந்நிறம் பொருந்திய ஓமை மரத்தின் புள்ளிபட்ட நிழலில்; செருக்கு இல் கடுங்களிறு சென்று உறங்கி நிற்கும்-களிப்பில்லாத கொடிய யானைகள் போய் உறங்கிக்கொண்டு நிற்கும இயல்பு பொருந்திய; பரல் கானம பருக்கைக்கற்களையுடைய காட்டு வழியாக; பல பொருட்குச் சென்றார்-மிகுந்த பொருளீட்டுவது கருதிச்சென்ற நம் தலைவர் நுதற்கு இவர்ந்து ஏறும் ஒளி-நினது நெற்றியில் பசலை நீங்கி ஒளிபடர்ந்து ஏறுகின்றது ஆதலால்; வருவர்-இப்போதே வந்து சேர்வர் (அது குறித்து வருந்தாதே என்று வற்புறுத்தி னள் தோழி)

(வி-ம்) ஓமை மரம் செந்நிறமுடையது ஆதலால் " அரக் கார்ந்த " என்ற அடைமொழி கொடுத்தார். ஓமை மரம், பாலை நிலத்திற்குரிய மரம். அம்மரம் காய்ந்து வற்றிச் சில இலைகளு டன் நிற்கிறது என்பது தோன்ற "அரிபடுநீழல்" என்றார் வெயி லும நிழலும் இடையிடையே விரவி நிற்கும் நிழல் அது. பாலை வனத்தில் வந்தலைந்த யானைகள் மதமடங்கி வலியிழந்துபோம் என்பது குறித்து " செருக்கில் " களிறு என்றார். யானைகள் படுத்து உறங்கத்தக்க நீழலையுடைய மரங்கள் ஒன்றும் இல்லா ததால் அவ்வோமை மரத்தினடியில் நின்றே யுறங்கும் எனக் கூறினர். இத்தகைய பாலை நிலவழியிற் பிரிந்து சென்றவர் விரைவில் வருவர் அதற்கு அறிகுறியாக இந்நாளில் நெற்றியி லுள்ள பசலை நீங்கி ஒளிபடர்ந்து தோன்றுகிறது: உறுதியாக என் கூற்றை நம்புக என்று வற்புறுத்தினள் என்பது.

(இ-பு) நீழல்-நீட்டல் விகாரம்; நிழல் என்பது செய்யுளில் ஓசையை நிறைப்பதற்கு விகாரப்பட்டது. கடுமை+களிறு=



கடுங்களிறு; பண்புத்தொகை. பரற் கானம்:இரண்டனுருபும் பயனும் தொக்கதொகை. நுதற்கு-உருபு மயக்கம். ஏழாம் வேற்றுமையுருபு வரவேண்டிய இடத்தில் நான்கன் உருபு நின்றது.

20. ..... ....... ...... ......

மோவாத வெங்கானஞ் சென்றார் ......
.....வார் வருவார் நமர்.

(சொ-ள்) ஓவாத வெங்கானம் சென்றார்-ஒழியாத வெப்பத்தையுடைய காட்டின் வழியாகப் பிரிந்து சென்ற நம் தலைவர்; நமர் வருவார்-நம் தலைவர் இனி வருவார் (ஆதலால் வருந்தாதே என்றனள்.)

பிரிவாற்றாத தலைவி தன் தோழிக்குக் கூறியது

21. ஆந்தை குறுங்கலி கொள்ள நம் மாடவர்
காய்ந்து கதிர்தெறூஉங் கானங் கடந்தார்பின்
னேந்த லிளமுலை யீரெயிற்றா யென்னெஞ்சு
நீந்து நெடுவிடைச் சென்று.

(சொ-ள்) நம் ஆடவர்-நமது தலைவர்; ஆந்தை குறுங்

கலி கொள்ள-ஆந்தை யென்ற பறவைகள் மரப்பொந்துகளி லிருந்து சிறிய ஒலி செய்யும்படி; கதிர் காய்ந்து தெறூஉம் கானம்-சூரியன் வெயில் சுட்டு வருத்துகின்ற காட்டின் வழி யாக; கடந்தார் பின்-பிரிந்து சென்றவர்க்குப் பின்னே; என் நெஞ்சு நெடு இடை சென்று நீந்தும்-என் மனமானது நீண்ட வழிகளிற் சென்று நீந்துகின்றது; ஏந்தல் இளமுலை ஈர் எயிற் ருய்-பருத்த இளமுலையையும் குளிர்ந்த பற்களையுமுடைய பாங் கியே! (நான் என்ன செய்வேன் என்ருள்)

(வி-ம்) எயிற்ருய்! நம்மாடவர் சென்றவர்பின் என் நெஞ்சு சென்று நீந்தும் எனக் கூட்டுக. ஏந்தல் இளமுலை ஈரெ யிற்ருய் என்றது, நீயும் இளமைப் பருவமுடையவள்; காதல்



நோயின் கொடுமை உனக்கும் தோன்றும் என்று குறிப்பால் அறிவித்ததாம். ஆந்தைகள் இரவில் மரப்பொந்துகளிற் சென்று தங்கும். பகலில் வெயில் ஏற ஏற அப் பொந்தும் வெந்து சுடும். அப்போது வெளியேற முடியாமலும் உள்ளிருக்க முடியாமலும் வருந்திக் கீச்சுக் கீச்சு என்று சிறிய ஒலியுடன் கத் தும். அத்தகைய கொடியகானம் என்ருர். அக்கானத்தின் கொடுமையை நினைத்து என் நெஞ்சும் அவர் சென்ற வழியே சென்றது. துயர்க் கடலில நீந்துகின்றது; அக்கடலை விட்டுக் கரையேற முடியாது வருந்துகினறது; நீ ஆற்றியிரு என்று தேற்றவுரை கூறுகின்ருய்; எங்ஙனம் ஆற்றுவேன் என்ற குறிப் புத் தோன்ற "என் நெஞ்சு நீந்தும்" என்ருள். தலைவர் பிரிவு ஆற்றும் வலிமையில்லேன் என்பது கருதது.

(இ-பு) கலி-ஒலி, குறுமை + கலி-குறுங்கலி — சிறிய ஒலி இது பண்புததொகை. தெறூஉம்-இசை நிறை யளபெடை. ஈரம் + எயிறு என்பது அம் குறைந்து ஈர் என்று புணர்ந்தது. நெடுமை + இடை = நெடுவிடை பண்புத்தொகை.

பிரிவிடை வேறுபட்ட தலைவியைத் தோழி வற்புறுத்தியது

22. கள்வர் திரிதரூஉங் கானங் கடந்தவர்
உள்ளம் பிரிந்தமை நீயறிதி-ஒள்ளிழாய்
தொல்லை விடரகம் நீந்திப் பெயர்ந்தவர்
வல்லைநாங் காணும் வரவு.

(சொ-ள) ஒள் இழாய்-ஒளிபொருந்திய நகைகளையணிந்த தலைவியே!; களவர் திரிதரும் கானங் கடந்தவர்-ஆறலை கள்வர் நீங்காது திரியும் காட்டு வழியாகப் பிரிந்து சென்றவருடைய ; உள்ளம் பிரிந்தமை நீ அறிதி-மனமும் பிரிந்ததற்குரிய காரணமும் நீயறிவாய் (யான்கூற வேண்டுவதின்று); தொல்லை விடரகம் நீந்தி பெயர்ந்து-பழமையான மலைகளைக் கடந்து மீண்டு வரும்; அவர் வரவு வல்லை நாம் காணும்-அவர் வரவினை விரைவில் நாம் காண்போம்; (வருந்தாதே என்று வற்புறுத்தினாள்.)



(வி-ம்) உள்ளமும் பிரிந்தமையும் என உம்மை விரித்துக்

கொள்க. அவர் உள்ளம் உன்னைவிட்டுப் பிரியாமலேயிருக்கும் என்பதும் அவர் உடலே பிரிந்து சென்றது என்பதும் நீயறிவாய், பொருளின்றி இல்லறம் நடத்துவது இயலாது ; பொருளே அறம் புரிவதற்கும் இன்பம் துய்ப்பதற்கும் இன்றியமையாதது என்று ஆய்ந்து பொருளீட்டிவருவது குறித்தே பிரிந்தார் என்பதும் நீயறிவாய். யானும் அறிவேன், என்ற கருத்து விளங்க "உள்ளம் பிரிந்தமை நீயறிதி" என்றார். விடரகம் என்பது குகைகளைத் தன்னிடத்தேயுடையது என்ற காரணத்தால் மலைக்குப் பெயராயிற்று. பல மலைகளில் ஏறியும் இறங்கியும் வருவது நீரில் நீந்திக் கரையேறுவது போன்ற துயரம் தருவது ஆதலால் "நீந்தி" என்றார். காணுதும் என்பது காணும் எனக் குறைந்து நின்றதாகக் கொள்க. அன்புள்ள முடையவர் ஆதலால் அவர் வரவை விரைவிற் காண்போம் எனத் துணிவு கூறினள் எனக் கொள்க.

(இ-பு) ஒள்ளிழை:பண்புத் தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழி. இது ஈற்றில் ஐ ஆய் ஆகி விளியாயிற்று. திரிதரூஉம்: இன்னிசை யளபெடை. அறிதி:முன்னிலை யொருமை வினைமுற்று. காணும்-தொகுத்தல் விகாரம்.

ஆற்ருமை யறிநது வருநதிய தோழிக்குத் தலைவி ஆற்றுவல் என்பது தோன்றக் கூறியது.

23. சிலையொலி வெங்கணையர் சிந்தியா நெஞ்சிற்
கொலைபுரி வில்லொடு கூற்றுப்போ லோடும்
இலையொலி வெங்கானத் திப்பருவஞ் சென்ருர்
தொலைவிலர்கொ ரேழி நமர்.

(சொ-ள்) சிலையொலி வெங்கணையர்-வில்லின் நாணொலியும், கொடிய கணைகளையும் உடைய வேடர்கள்; சிந்தியா நெஞ்சில்-அறம் பாவம் என்ற ஆராய்ச்சியில்லாத மனத்துடன்; கொலை புரி வில்லொடு கூற்றுபோல் ஓடும்-கொல்லத்தகுந்த வில்லுடன் இயமனைப்போல வழிச்செல்வோரைத் தொடர்ந்து விரைந்து செல்லும் இயல்புடைய; இலையொலி வெங்கானத்து-இலைகள்



உலர்ந்து கலகலவென்று ஒலிசெய்யும் கொடிய கானகத்து வழியாக; இப்பருவம் சென்றார்-இவ்வேனிற் காலத்தே பிரிந்து சென்றவராகிய; நமர் தொலைவிலர் கொல்-நம் தலைவர் தளர்வில்லாதவரா யிருப்பரோ? தோழி-பாங்கியே (நீ கூறுக என்றாள்)

(வி-ம்) வில்லின் நாணொலி செய்வதும் கணையைக் கையில், வைத்திருப்பதும் மறவர் இயற்கையாதலால் "சிலையொலி வெங்கணையர்" என்றார். தன்னுயிர்போல மன்னுயிரையும கருதினால் பிறவுயிர்க்குத் துன்பம் விளைக்கவும் அழிக்கவும் எண்ணார்; அவ்வாறு கருதாது கொலை செய்வதும் பிறரைத் துன்புறுத்தலும் பிறர் பொருளைப் பறித்தலும் தொழிலாகக் கொண்டவர் என்பது விளங்க "சிந்தியா நெஞ்சிற் கொலைபுரி" என்றார். கள்வர், வழிச்செல்வோரைத் தொடர்வது, கூற்றுவன் கொல்வதற்குப் பின்றொடர்வதுபோலத் தோன்றும் என்பார் "கூறறுப்போல்" என்றார். பச்சையிலையாகத் தழைத்துத்தளிர்த்திருந்தால் அவ்விலைகள் ஒன்றோடொன்று மோதக் காற்றால் அலைக்கப்படினும் ஒலி தோன்றாது. காய்ந்து சருகாயிருப்பின் காறறுப பட்டவுடன் சலசல, கலகலவென ஒலிப்பதியற்கை. ஆதலால் "இலையொலி" என்றார். ஒலித்தல்-தழைத்தல என்ற

பொருளைத்தருமேனும் வெங்கானம் என்றகுறிப்பால் ஒலி ஓசை யெனப்பொருள்பட்டது. தலைவர் தளர்விலரோ என்ற குறிப்பு அவர் தளர்விலரெனின் யானும் தளர்வின்றி ஆற்றியிருப்பேன் என்பதை விளக்கிற்று.

(இ-பு) சிந்தியா-ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். கொல் ; ஐயப்பொருளைத் தந்தது. ஒலி கானம், வெங்கானம -எனக் கூட்டுக. ஒலிகானம்:வினைத்தொகை. வெங்கானம்: பண்புத்தொகை.

## இதுவும் அது

24. வெஞ்சுரம் தேரோட வெஃகிநின் றத்தமாச்
சிந்தையா னீரென்று செத்துத் தவாவோடும்
பண்பி லருஞ்சுர மென்பவா லாய்தொடி
நண்பிலார் சென்ற நெறி.



(சொ ல்) ஆய்தொடி-ஆராய்ந்த வளையலையணிந்த பாங்கியே ! வெஞ்சுரம் தேர்ஓட-கொடிய பாலைவனங்களில் பேய்த் தேர் தோன்ற ; அத்தம் மா-அச்சுரத்தில் உள்ள மான்கள் வெஃகி நின்று-விரும்பி நோக்கி நின்று ; சிந்தையால் நீர் என்று, செத்து-மனத்தால் நீர் என்று கருதி ; தவா ஓடும பண்பு இல் அருஞ்சுரம்-நீங்காமல் ஓடித் திரியும் பயனில்லாத கொடிய வனமே ; நண்பிலார் சென்ற நெறி-நம் மேல் நண்பு இல்லாத தலைவர் நம்மைப் பிரிந்து சென்ற வழியாகும் ; என்ப-என்று பலரும சொல்வர். (அது குறித்துத் தான் வருந்துகினறேன ; பிரிவாற்ருமையா லன்று என்ருள்.)

(வி ம்)பிரிவாற்றியிருப்பேன்; ஆயினும் அவர் சென்ற வழியை நினைத்த போதுதான் கவலை தோன்றுகின்றது என்றாள். தேர் ஓடுதல்-பேய்த்தேர் தோன்றுதல்; கானல் பரந்து தோன்றுதல். கானலைப் பேய்த்தேர், வெண்டேர், என்று கூறுவர் புலவர். கானல் என்பது சூரிய வெப்பத்தால் காட்டில் எங்கும் வெண்மையாக நீர்போலப் பரந்து தோன்றும் ஒருவகைக் காட்சி. கண்ணுக்கு நீர்போலத் தோன்றுவதால் அதனை மான்கள் உண்மையான நீரென்று கருதியலைவது இயற்கை. "கானலை நீரென் றெண்ணிக் கடுவெளி திரியு மான்போல்" என்றார் பிறரும். பருகுவதற்கு நீரும் இல்லாத வழி என்றால் வேறு என்ன அக்கானில் இருக்கும். ஒரு வகையாலும் பயன்படாத வழி என்பது தோன்ற "பண்பில் அருஞ்சுரம்" என்றார். மக்கட் பண்பில்லையெனில் அவர் பண்பில்லாதவர் என்று கூறுவது போல நிலத்திற்குரிய பண்பில்லாதது அது என்று கொள்க. நீரும் நிழலும் இல்லாத பாலை வழிசென்றவர் எவ்வாறு வருந்துவாரோ என்று கருதித்தான் கவலையுறுகின்றேன் என்று தோழியிடம் மறைத்துக் கூறினள்.

(இ-பு) ஆய்தொடி:அன்மொழித்தொகை. தேர் என்பது குறிப்புச்சொல். என்ப:பலர்பாற் படர்க்கை வினைமுற்று. ஆல். அசை. நண்பிலார்:குறிப்பு வினையாலணையும் பெயர்.



# 3. முல்லை

பிரிவாற்றுமையால் வருந்திய தலைவிக்குக் கார்ப்பருவங் காட்டி
வருவர் எனத் தோழிவற்புறுத்தியது.

25. கார் செய் புறவிற் கவினிக் கொடிமுல்லை
கூரெயி றீனக் குருந்தரும்ப—வோரும்
வருவர்நங் காதலர் வாட்டடங் கண்ணுய்
பருவரல் பைதலோய் கொண்டு.

(சொ-ள்) வாள் தடம் கண்ணுய்–வாளாயுதம் போன்ற கூரிய அகன்ற விழிகளையுடையாய்! கார் செய் புறவில்-மேகம் மழை பெய்த முல்லை நிலங்களில்; கொடிமுல்லை கவினி-முல்லைக் கொடி செழித்து அழகு 'பெற்று; கூர் எயிறு ஈன, கூர்மையான பற்கள் போன்ற அரும்பைக் காட்டவும், குருந்து அரும்ப-குருந்த மரங்களும் அரும்பைத் 'தோற்றுவிக்கவும்; நம் காதலர் வருவர்-நம்முடைய காதலர் வருவார்; பைதல் நோய் கொண்டு பருவரல்-பசலைநோய் கொண்டு வருந்தாதே (வருவர் என்று தேற்றினுள்).

(வி-ம்) வாள்கண்ணுய், தடம் கண்ணுய் எனத்தனித்தனி கூட்டுக. கார் என்பது மேகத்தை யுணர்த்தியது. ஆகு பெயர். கார்செய்யுந் தொழில் மழை பெய்தல் ஆதலின் செய் என்பதற்கு அத்தொழிலைச் செய்த எனப்பொருள் கூறப்பட்டது. கொடிமுல்லை முன் பின்னுக மாற்றிப் பொருள் கொள்க. எயிறு-பல். இது உவமையாகு பெயராய் முல்லையரும்பினை

யுணர்த்தியது. நம் காதலர் வருவர் பைதல் நோய் கொண்டு பருவரல் எனக்கூட்டிப் பொருள் கொள்க. முல்லை நிலத்தில் மழை பெய்து செழித்து முல்லைக் கொடி யரும்பீன்றது குருந்தும் அரும்பு அரும்பியது கார்முந்து முன் என் தேர் முந்தும் என்று கூறிச்சென்றவர் காதலர் ஆதலால் விரைவில் வருவர் அது குறித்து வருந்தாதே என்று தோழி தலைவிக்கு ஆறுதல் கூறியதாகக் கொள்க. ஈன, அரும்ப என்ற செயவெனெச்சம் இது நிகழா நிற்க இது நிகழும் என்னும் பொருளில் நின்றன.



எயிறரும்பிற்று; குருந்தரும் பிற்று என்பது குறிப்பால் வருவித்து ஆதலால் வருவர் என முடிவு செய்க. பைதல் நோய் என்பது பசலை பாய்தல் ஆகிய ஒரு நோய்; காமவிகாரத்தால் வடிவு மாறுபட்டுப் பசப்பாகத் தோன்றுவது உடல் மெலிவது ஆகிய பிணி என்று அறிக. முல்லை யரும்புவதும் குருந்து அரும்புவதும் கார் காலத்தில் முல்லை நிலத்தில் நிகழ்வன.

(இ-பு) கூரெயிறு:பண்புத்தொகை. கொடிமுல்லை; இரு பெயரொட்டுப் பண்பு. ஓரும்; அசைச்சொல். வாள் + தடம் + கண்ணாய் = வாட்டடங்கண்ணாய், முன்னது உவமைத்தொகை, பின்னது பண்புத்தொகை. பருவரல் என்பது எதிர்மறைவியங் கோள். இது தொழிற்பெயராகவும் உடன்பாட்டு வியங்கோளா கவும் ஒவ்வோரிடங்களிற் பொருள் தரும். வருந்தற்க என்பது பொருள்.

இதுவும அது.

26. குருதி மலர்த்தோன்றி கூர்முகை யீன

.........சேவ லெனப்பிடவ மேறி

பொருதீ யெனவெருளும் பொன்னேர் நிறத்தாய்
அரிதவர் வாரா விடல்.

(சொ-ள்) பொன் நேர் நிறத்தாய்-பொன்போன்ற உருவத்தையுடைய தலைவியே! தோன்றி-செங்காந்தட் செடிகளின்; கூர்முகை- கூர்மையான அரும்புகள்; குருதி மலர் ஈன-குருதி போன்ற பூக்களைக் காட்ட...... சேவல் என (அப்பூக்களின் தோற்றத்தை) தன்னோடு போர் செய்யவரும் மாறுபட்ட சேவலென்று கருதி; பிடவம் ஏறி-பிடவஞ்செடியின் மேலேறி நின்று (உற்று நோக்கி) பொரு தீ என வெருளும்-சுடுகின்ற நெருப்பு என்று எண்ணி அஞ்சியோடுகின்ற (இயல்புடையது கானம்) அவர் வாரா விடல் அரிது-நம் தலைவர் வாராமலிருப்பது அருமையானது (வருவர் என்றுள்)

(வி-ம்) தோன்றிமலர் குருதிபோலச் சிவப்பானது. அரும்புகள் மலர்ந்து நெருங்கிய தோற்றம் ஒரு சேவலின் கண்ணுக்குத் தன்னோடு பொரவருகின்ற மற்றொரு சேவல் போலத்தோன்றி
7



யது. பிடவஞ்செடியில் ஏறிப்போர்புரியத் தொடங்கிய போது நெருப்புப்போலத் தோன்றியது. அஞ்சியோடிற்று அச்சேவல். இவ்வாறு சேவல் கண்டு தீ என்று வெருளும்படி செங்காந்தள் குலை குலையாகப் பூத்து நிற்கின்றன. ஆதலாற் கார் காலம் வந்தது தலைவரும் வருவார் நீ வருந்தாதே என ஆற்றினள் தோழி

எனக்கொள்க. வாரா விடல்-வாராதிருத்தல் என்ற பொருளைத் தந்தது. அரிது என்பது இல்லை என்ற பொருளில் வந்தது. வாராமல் இருப்பதில்லை எனவே வருவர் என்பது குறிப்பாயிற்று. கோழிச் சேவலின் இயற்கை ஒரு சேவலைக் கண்டால் உடனே அதனோடு போர் புரியத் தொடங்குவது. காந்தட்செடி மேலுள்ள பூக்களின் தோற்றம், சேவலின் உச்சியிற்கொண்டைப்பூவைப்போலத் தோனறியவுடன மாறுபட்ட சேவல் என எண்ணி அடுத்துள்ள பிடவில் ஏறிப் போர்செய்ய எண்ணி நோக்கியபோது தீயாகத் தோன்றியது; உடனே வெருண்டோடியது என்று விளக்கங் காண்க. பொன்-திருமகள் போன்ற; ஏர் நிறத்தாய்-அழகிய வடிவமுள்ளாய் எனக் கூறினும் பொருந்தும்.

(இ-பு) குருதிமலர்;உவமைத்தொகை. கூர்முகை, பொருதீ, வினைத்தொகைகள். நிறத்தாள் நிறத்தாய் என விளியாயிற்று. வாரா ஈறு கெட்ட எதிர்மறை வினையெச்சம். விடல்:தொழிற்பெயர். அரிது: ஒன்றன்பாற் குறிப்பு வினைமுற்று.

27. ...... ...... .... . ......
...... ....... யொல்கப் புகுதரு
கார்தரு மாலை கலந்தார் வரவுன்னி
யூர்தரு மேனி பசப்பு.

(சொ-ள்) ஒல்க-தளர்ச்சியாக; புகுதரும்-நுழைகின்ற; கார்தருமாலை-மழைபெய்யுமாலைக்காலத்தில், கலந்தார் வரவு

உள்ளி-என்னை மணந்த காதலர் வருவர் என்பதை நினைந்து;
மேனி பசப்பு ஊர் தரும்-என் மேனியிற் பசலை பரவுகின்றது.



28 ...... ...... ...... ......
...... பெய்த புறவிற் கடுமான்றே
ரொல்லைக் கடாவா ரிவர்காணின் காதலர்

(சொ-ள்) பெய்த புறவில்-மழை பெய்த முல்லை நிலத்தில்; கடு மான் தேர்-வேகமாகிய பரிகள் பூட்டப்பட்ட தேரினை; ஒல்லை கடாவார்- விரைவிற் செலுத்துவார்; நின்காதலர் இவர் காண்-உனது காதலர் இவரே அறிவாயாக.

29\. ...... ...... ...... குருந்தலரப்
பீடா ரிரலை பிணைதழுவக்—காடாரக்
கார்வானம் வந்து முழங் ... ... ...

(சொ-ள்) குருந்து அலர-குருந்த மரங்களின மலர்கள் மலர; பீடு ஆர் இரலை பிணைதழுவ-பெருமை பெற்ற ஆண்மானகள் பெண்மான்களைக் கூடியின்பமுற: காடு ஆர கார் வானம் வந்து முழங்-காடுகள் நீர் நிறைந்து செழிக்கும்படி கரிய மேகங்கள் வந்து இடித்து மழை பொழிய.

30\. ...... ...... ...... ......

...... ... .. ...... ......
கொன்றை கொடுகுழ லூதிய கோவலர்

மன்றம் புகுதரும் போழ்து.

(சொ-ள்) கொன்றை கொடு குழல் ஊதிய கோவலர்-கொன்றைக் காயைத் துளைத்துக் குழலாகப்பண்ணி வாய் வைத்து ஊதி வருகின்ற ஆயர்கள்; மன்றம் புகுதரும்போழ்து -தம்பசுக்கள் நிற்கும் மன்றத்திற் புகுகின்ற காலமாகிய மாலை யில்.

31. ........ ........ ........ ........
........ ........ ........ ........
........ ........ ........ வானம்
வந்து துளிவழங்கக் கண்டு.



(சொ-ள்) வானம் வந்து துளி வழங்க கண்டு-மேகங்கள் விண்ணின் மேல் வந்து நின்று மழைத்துளிகள் பெய்வதை நோக்கி.

'32. காரெதிர் வானங் கதழெரி சி ....

...... ...லக மெழு நெஞ்சே செல்லாயாற்
கூரெரி மாலைக் குறி.

(சொ-ள்) கார் எதிர் வானம் கதழ் எரிசி-மேகங்கள் கூடிய வானத்தின் நின்று நெருங்கிய தீப்பொறிகள் சிந்த; எழும் நெஞ்சே எழுகின்ற மனமே; கூர் எரிமாலை குறி செல் லாய்-மிகுந்த தீப்போல வரும் மாலையைக் குறிபபாய்; தலைவர் பாற் செல்வாயாக. ஆல்-அசை.

33. தலையவிழ் தே ... ...... ......

உலையார் கலிநன் மாப் பூட்டி வருவார்
களையாரோ நீயுற்ற நோய்.

(சொ-ள்) தலை அவிழ்-கட்ட விழ்ந்த; உலை ஆர் கலி நன் மா பூட்டி வருவார்-பிடரிமயிர் தழைத்த நல்ல பரிகளைப் பூட்டித் தேரில் வரும் தலைவர் ; நீ உற்ற நோய் களையாரோ-நீயடைந்த காதல் நோயை நீக்காரோ ? நீக்குவர் (வருந்தாதே என்றாள்)

34. முல்லை யெயிறின ....... ......

...... ... ....... ன மல்கிக்
கடன்முகந்து கார்பொழியக் காதலர் வந்தா
ருடனியைந்த கெ ....... ........

(சொ-ள்) முல்லை எயிறு ஈன-முல்லைக்கொடிகள் மாதர் பற்களைப் போன்ற அரும்புகள் காட்ட; மல்கி-நிறைந்து; கார் கடல் முகந்து பொழிய-மேகங்கள் கடலின் நீரை முகந்து பொழிய; காதலர் வந்தார்-நம்காதலர் வந்தனர்; உடன் இயைந்த- நம் முடன் இசைந்த.



35. ....... ....... ....... .......

...... .... ரடைப் பால்வா யிடையர்
தெரிவிலர் தீங்குழ லூதும் பொழுதா
லரித

(சொ-ள்) பால்வாய் இடையர்-பால் மணம் நீங்காத வாயையுடைய ஆயச்சிறுர்; தெரிவிலர் தீங்குழல் ஊதும் பொழுது-பண்ணும் திறமும் அறியாராய் இனிமையான வேய்ங் குழலூதும் மாலைக்காலம். அரிது-அருமையானது.

தோழி பருவங்காட்டித் தலைவர் வருவர் என வற்புறுத்தி யாறறு வித்தல்

36. பிடவங் குருந்தொடு பிண்டி மலர
மடவ மயில் கூவ மந்திமா கூரத்
தடமலர்க் கோதையாய் தங்கார் வருவ
ரிடப மெனக் கொண்டு தாம்.

(சொ-ள்) தடம் மலர் கோதையாய்-வளைந்த மலராற்றொ டுக்கப்பட்ட மாலை புனைந்தோய்! பிடவம் குருந்து ஒடு பிண்டி மலர-பிடவஞ் செடியும் குருந்த மரமும், அசோக மரமும் பூத்து நிற்க; மடவ மயில் கூவ-இளமையான மயில்கள் ஆடிக் கூவிமகிழ; மந்திமா கூர-மந்திகளும், விலங்கினங்களும் குளிரால் நடுங்க, இத்தகையகார்காலத்தில்; நங்காதலர்-நம்காத லர்; இடபம் என கொண்டு வருவர்-தம்மை ஒரு காளை என்று மனத்தின் மதித்துக் கொண்டு (மகிழ்ச்சியுடன்) வருவார்; தங் கார்-இனி யொருகணமேனும் ஆங்குத் தங்கியிரார். (என்று தோழி கூறினள்.)

(வி-ம்) தடமலர்க் கோதையாய் என்பதற்கு பெருமை யாகிய பல மலர்களையும் புனைந்த கூந்தலுடையாய் எனவும் பொருள் கூறலாம். கோதை-மாலைக்கும் கூந்தலுக்கும் பெய

ராம். பிடவம், குருந்து, அசோகம் இவைகள் கார்காலத்தில் மலரும் மலர்கள். ஆதலால் அவைகள் "மலர" என்றார். கார்காலத்தைக் கண்டவுடன் மயில்கள் ஆடிக்கூவும்; மந்தி



விலங்கினமும் மனமயினனைந்து மரங்களின் மீதும் மரத்தின் அடியிலும் நின்று குளிர் பொறுக்க மாட்டாமல் நடுங்கும். இச் செயல் அக்காலத்தினிகழுஞ் செயல்கள். இவை நிகழ்கின்றன ஆதலால் நங்காதலர் இப்போழ்தே வருவார் இது உறுதி என அறிதி என்று தேற்றினுள். ஏறுபோலப் பெருமித நடையுடன் வருவார்; வலிமையும் வீரமும் உடையவர். தளர்ந்து ஆங்குத் தங்கார், வாய்மை வழுவாதவர். குறித்த பருவம் இதுவே என்பது விளங்க " இடபமெனக் கொண்டு தாம் தங்கார் வருவர் " என்றார். இடபம் என-கண்டோர் ஏறு என்று கூறும்படி, கொண்டு-நடைகொண்டு, வருவர் எனக் கூறினும் அமையும்.

(இ-பு) ஒடு எண்ணுப் பொருளில் வந்தது. மலர, கூவ, கூர என்பவை செய என் வாய்பாட்டு வினையெச்சங்கள். தங்கார் வருவர் என்ற இரண்டு வினைமுற்றுக்களில் தங்கார் என்பது எச்சப்பொருளைத்தந்தது. தங்காமல் வருவார் என்பது பொருள். தாம்:அசை. தலைவர் அல்லது காதலர் என எழுவாய் வருவித்துக்கொள்க.

முல்லை முற்றிற்று.

## 4. மருதம்

பரத்தையிற் பிரிந்த தலைவன் பாணனை வாயிலாக விடுக்கத் தலைவி பாணனைநோக்கிக் கூறியது.

37\. கழனி யுழவர் கலியஞ்சி யோடித்
தழென மதவெருமை தண்கயம் பாயும்
பழன வயலூரன் பாணவெம் முன்னர்ப்
பொழெனப்பொய் கூறு தொழி.

(சொ-ள்) கழனி உழவர்கலி அஞ்சி ஓடி-வயலின் கண் உழுகின்ற உழவர்கள் ஆரவாரத்தைக் கேட்டுப் பயந்து விரைந்து சென்று; மதம் எருமை தழென தண் கயம் பாயும்-செருக்குடைய எருமை தழெனு ஒலியொடும் படி குளிர்ந்த



தடாகத்தில் வீழும் இயல்புடைய; பழன வயலூரன் பாண-மருத நிலங்களையும் வயல்களையும் உடைய தலைவன் விடுத்த பாணனே!; எம் முன்னர்-எங்கள் முன்னிலையில் நீ; பொழென பொய்கூறுது ஒழி-பொழென்ற ஒலியுடன் பொய்ம்மொழி கூறு திருப்பாய்(உண்மையே கூறு என்றுள்)

(வி-ம்) பாணன் வந்து நந்தலைவர் இனிப்பரத்தையர் மனைக்கட் செல்லார், முன்னர்ச் சென்றதும் ஆடல் பாடல் விருப்பத்தாலேயன்றி வேறில்லை, உங்கள் மீது மிகுந்த அன்புடையார் எஞ்ஞான்றும் என்று பல பொய்யுரை புகன்றனன்: அதனைக்கேட்ட தலைவி சினந்து இனிப்பொய்யுரை கூறு வதை யொழித்து விடு என்று மறித்துக் கூறினள் எனக்

கொள்க. செருக்குடைய எருமைகள் மாடுகளை அதட்டும் உழவர்கள் ஒலி கேட்டு வெகுண்டுபோய்ச் சேற்றுத்தடாகத்தில் விழுவது போல எங்கள் குரல் கேட்டு வெகுண்டு போய்ப் பரத்தையர் சேரி சென்று காமந்துய்த்துத் தங்கியிருக்கின்றான் என உள்ளுறை காண்க. இவ்வியல்புடைய தலைவன் கூட்டம் இனி வேண்டாம் எனமறுத்தாள். உழவர் கலி என்பது மாடுகளை அதட்டி ஓட்டும் ஒலி.

(இ-பு) தழெனை, பொழெனை என்பன ஒலிக்குறிப்பிடைச் சொல். மதம் + எருமை = மதவெருமை. மகரங் கெட்டு உடம்படு மெய்பெற்று முடிந்தது. பண்புத்தொகை, அல்லது இரண்டனுருபும் பயனும் தொக்க தொகை எனக்கொள்க. தண்கயம் பண்புத்தொகை. மைவிகுதி கெட்டுபபுணர்ந்தது. ஒழி:முன்னிலையேவ லொருமை வினைமுற்று.

பரத்தையா சேரியிற் பயின்று வநததலைவனைப் புலந்து தலைவி கூறியது.

38. கயலினம் பாயுங் கழனி நல்லூர
நயமிலே மெம்மனை யின்றெடு வாரல்
துயிலி னிளமுலையார் தோணயந்து வாழ்கின்
குயி........ .... .. கொண்டு

(சொ-ள்) கயல் இனம் பாயும் கழனி நல் ஊர-கெண்டை, மீனினங்கள் துள்ளிக்குதிக்கும் வயல்களை யுடைய நல்ல மருத



நிலத்தலைவனே! நயம் இலேம்-ஆடல் பாடல் அழகு முதலிய நலங்கள் இல்லோம் நாம்; எம்மனை இன்றெடு வாரல்-எமது மனைக்கு இந்நாள் நின்று வாரற்க, இளமுலையார் தோள் நயந்து

துயிலின் வாழ்க-இளமையான கொங்கையுடையார் தோளி லணையும் இன்பத்தை நுகர்ந்து துயின்று வாழ்வாய் (என்று புலந்து கூறினள் தலைவி)

(வி-ம்) "கயலினம் பாயுங் கழனி நல்லூர" என்றது வய லிற் பெருகிய நீரில் கெண்டைமீன் துள்ளித்திரிவது போலப் பரத்தையர் சேரியிற்களித்துத் திரிகின்றாய். நீர் வற்றியபோது மீன்கள் வருந்துவது போலச் செல்வம் குறைந்த போது நீயும் வருந்துவை எனக் குறிப்புக் காட்டினதாகக் கொள்க. "நயமி லேம் "என்றது மகப்பெற்று வனப்பிழந்து முன்னிருந்த நிலைமை மாறிக்கண்ணுக்கு அருவருப்பாகத் தோறறுகின்றேம் போலும் அதனாற் பரத்தையர் போலக் கண்ணைக் கவரும் பொலிவு எம் மிடத்தில்லையென வெறுத்தீர் என்பது எமக்குத்தெரியும் எனக் குறிப்பிற் கூறியது எனக் கொள்க. இனறு வந்தது போதும்; இனி மேல் எம்மனைக்கு வறிதே வருவதும் வேண்டா என்று விலக்கினள். இளமுலையார் என்றது, மகப்பெறுதவர்; மகவிற் குப் பாலூட்டாதவர்; தங்கொங்கைகளையே புனைந்து இளமை யாகத் தோற்றும்படி போற்றி வருவோர் எனப்பரத்தையரைப் பழித்தபடியாம். பரத்தையர் தோள்களை நயந்து ஆங்கே துயின்று வாழ்க ஈங்கு வருதலையொழி என்று புலந்தாள். தூயர் நறியர்நின பெண்டிர், பேஎ யனையம்யாம் சேய்பயந் தனமே" எனவும், "புதல் வ னை யீ ன் ற வெ ம் மேனி, முயங்கன்மோ தெய்யநின் மார்புசிதைப் பதுவே" எனவும் வருந் தலைவி கூற்றுக்களையும் நோக்குக. புலவியில் தலைவி தன்னைப் பழிப்பது போலவும் பரத்தையரைப் புகழ்வது போல வும் கூறுவது இயல்பு எனக்காண்க.

(இ-பு) கயல் இனம்-ஆறும் வேற்றுமைத் தொகை.

இலம்-தன்மைப் பன்மைக் குறிப்பு விணைமுற்று. வாரல்-எதிர் மறை வியங்கோள். இளமை+முலையார்=இளமுலையார் பண் புத்தொகை. துயிலின் இன் உருபு கருவிப் பொருளில் வந்தது உருபு மயக்கம்; வாழ்க என்பதன் அகரம் தொகுத்தல்.



வாழ்க+இன்=வாழ்கின் என நின்றது. இன்குயில் என அடுத் துக் கொண்டு கூட்டுக.

தலைவன் மகற்கொண்டுவருஞ் சிறப்பினைத் தோழி கண்டு
மகிழ்ந்து கூறியது.

39. முட்ட முதுநீ ரடைகரை மேய்ந்தெழுந்து
தொட்ட வரிவரால் பாயும் புனலூரன்
கட்டலர் கண்ணிப் புதல்வனைக் கொண்டெம்மில்
சுட்டி யலைய வரும்.

(சொ-ள்) தொட்ட வரி வரால்-பதித்தனபோன்ற வரிகளை யுடைய வரால் மீன்கள்; முதுநீர் அடைகரை முட்ட மேய்ந்து எழுந்து-பழமையான நீர் மோதுகின்ற கரைகள் முழுவதும் திரிந்து இரைகளையுண்டுபின் எழுந்து; பாயும் புனல் ஊரன்-நீர்க்குட்பாய்கின்ற நீர்வளம் பொருந்திய மருத நிலத்தலைவன்; கட்டு அலர் கண்ணி புதல்வனை-தொடுத்த மலர் மாலையை யணிந்த புதல்வனை; கொண்டு சுட்டி அலைய எம் இல் வரும்-ஏந்திக்கொண்டு அவன் நெற்றிச்சுட்டி யசையும்படி எம் மனைக்கு இப்போதுதான் வருகிறான் (இது மிகவும் வியப்பான செயல் எனத் தோழி தலைமகள் கேட்பக் கூறினள்;)

(வி-ம்) இதுகாறும் பரத்தையர் மனைக்கட் பயின்று தலை

வியை நோக்காத தலைவன் மகன் பிறந்ததையறிந்து வந்து மகனைவாரியணைத்துக் கையிலேந்தித் தலைவியிருக்கும் மனைக்கு வருகிறான். மகன்பால் வைத்திருக்கும் அன்பை நோக்குங்கள் எனத் தலைவியும் மற்றுள்ள சுற்றத்தாரும் அறியும்படி தோழி கூறினள் எனக்கொள்க. மகன் பிறந்தான் எனக் கேட்டவுடன் தந்தை செய்தற்குரிய சிறப்புக்கள் மகனையெடுத்துப் பாராட்டு வது மரபு. அதனைத் தொல்காப்பியர் "செய் பெருஞ்சிறப் பொடு சேர்தற் கண்ணும்" என்பர். "சிறந்த புதல்வனை நேராது புலம்பினும்" என்ற பகுதியிற் சேர்த்துத் தோழி கூற்றுக்குக. வரால் மீன்கள் அடைகரை முழுவதும் தனக்குவேண்டிய சிறு மீன் தவளை முதலியவற்றைத் தின்று பின்னெழுந்து நீர்க்குட் பாய்வது போலத் தலைவனும் பரத்தையர் சேரிமுற்றும் திரிந்து



தனக்குத் தகுந்த பரத்தையரின்பத்தை நுகர்ந்து தம் மனைக்கு விரைந்து வந்தான் எனக்குறிப்புக் காட்டினள். வருவானோ வாரானோ என்ற ஐயம் தலைவிக்கு இருந்ததால் இதோ வருகின் றான் என உவகை விளையக் கூறினள். தலைவியின் ஊடல் நீக்குவதற்கும் அவன்மேல் அன்புடையளாக்குவதற்கும் தோழி இவ்வாறு கூறினள் எனக் கொள்க. தொட்டன்னவரி என்பது உவமையுருபு தொக்கு தொட்டவரி என நின்றதெனக் கொள்க. தொட்ட-தோண்டிய, பதித்த போன்ற வரி எனப் பொருள் கொள்க.

(இ-பு) அடைகரை-வினைத்தொகை. கட்டு அலர் கண்ணி என்பதும் அது கட்டு கண்ணி அலர் கண்ணி என்று பிரித்துக் கொள்க. முதுநீர்-பண்புத்தொகை.

வாயிலாக வந்த பாணனுக்குத் தோழி தலைவியின் பண்புகூறி

வாயில் மறுத்தது.

40. தாரா விரியுந் தகைவய லூரனை
வாரா னெனினும் வருமென்று—சேரி
புலப்படுஞ் சொல்லுமிப் பூங்கொடியன்னார்
கலப்படுங் கூடுங்கொல் மற்று.

(சொ-ள்) தாரா இரியும் தகைவயல் ஊரனை-தாரா என்ற பறவைகள் பறந்து செலலும் அழகுபொருந்திய வயல் சூழ்ந்த மருதநிலத் தலைவனைக்குறித்து; சேரி-சேரியிலுள்ள பரத்தையர் வாயினின்று; வாரான் எனினும் வரும் என்று புலப்படுஞ் சொல்லும்-வாராமல் இருப்பினும் வருகின்றான்என்று வெளிப்படுகின்ற சொல்லும்; இப்பூங் கொடியன்னார்-இப்பூங் கொடியைப் போன்ற எம் தலைவியின்; கலப்பு அடும்-கூட்டத்தைக் குலைக்கும்; கூடும் கொல்-அவள் தலைவனுடன் கூடுவாளோ? எவ்வாறு கூடுவாள். (இனி எம் தலைவி புலவி நீங்கிக் கூடாள் எனத்தோழி மறுத்தாள்.)

(வி-ம்) தாரா என்பது மருத நிலத்துத் திரியும் பறவைகளில் ஒன்று; அவை ஓரிடத்திராது பறந்து பலபல வயல்களுக்குச் செல்லும்; அவ்வியற்கையையுடைய மருதநிலம் என்பது தலைவ



னும் பரத்தையர் மனைகடோறும் சென்று தங்கி வருகின்றான் என்ற குறிப்புத் தோன்ற "தாரா இரியும் தகை வயலூரனை" என்றார். எம் தலைவர் சேரிக்குச் செல்லாதிருப்பினும் "எம்மனைக்கு இன்று வந்தார்; எம்மனைக்கு நேற்று வந்தார் என்று தமக்குச் சிறப்புத்தோன்ற ஒவ்வொரு பரத்தையரும் கூறுவது இயற்கை

ஆதலால் அவ்வாறு அவர்கள் பொய்யாகப் புனைந்து கூறுஞ் சொற்கள் வெளிப்பட்டு எம் தலைவியையும் தலைவனையும் ஒருவரோடொருவர் கூடாமல் விலக்குகின்றன, நான் என்ன செய்வேன், இத்தகைய சொற்கள் பரத்தையர் சேரியிலிருந்து ஒவ்வொரு நாளும் புலப்படும்போது எம் தலைவி எவ்வாறு கூடுவள் என்ற கருத்துத் தோன்றும்படி "வாரான் எனினும்........ கூடுங்கொல்" என்றாள். தலைவன் பாணனை வாயிலாக விடுக்க வந்த பாணனைக்கண்டு தோழி இனிக் கூட்டத்திற்கு வழியேயில்லை; பரத்தையர் சேரிமுழுதும தலைவன் புறத்தொழுக்கம் பரவியது; தலைவியறிந்தபின் எங்ஙனம் கூடுவாள் என்று மறுத்ததாகக் கொள்க.

(இ-பு) வாரான்-எதிர்மறைப் படர்க்கை ஆண்பால் வினைமுற்று. வரும்-செய்யும் என்ற வாய்பாட்டு வினைமுற்று; ஆண்பாலுக்கு வந்தது ஈங்கு. பூங்கொடியன்னாா் இதில அன்னார்-குறிப்பு வினையாலணையும் பெயர். கலப்பு: பு விகுதி பெற்ற தொழிற்பெயர் நினைப்பு, மறப்பு என்பனபோல், அடும்: செய்யும் என் வாய்பாட்டு வினைமுற்று. ஒன்றன் பாலுக்கு வந்தது-மற்று-அசை.

வாயிலாக வநத பாணனுக்குத் தலைவி வாயில் மறுத்தது.

41. பொய்கைநல் லூரன் திறங்கிளப்ப வென்னுடைய
அஃதன் றெனினு மறிந்தேம்யாஞ்-செய்தி
நெறியி னினியசொல் னீர்வாய் மழலைச்
சிறுவ னெமக்குடைமை யால்.

(சொ-ள்) நீர்வாய் மழலை இனிய சொற் சிறுவன்-எச்சிலொழுகும் வாயுடன் திருந்தாத குதலையாகிய இனிய சொற்களைப்பேசும் எமது புதல்வன்; எமக்கு உடைமையால்-எமக்

வேண்டுவதின்று); பொய்கைநல் ஊரன் திறம் கிளப்ப என் உடையை-வாவிகள் சூழ்ந்த நல்ல மருத நிலத்தலைவனது நற் பண்புகளை எமக்குக் கூறுவதற்கு • நீ என்ன உரிமை உடையாய்;அஃது அன்று எனினும்-அவன் பிழைசெய்தது பிழையன்று என்றுலும்; நெறியின் செய்தி அறிந்தேம் யாம்-முறையாக அவன் செய்தி முழுவதும் நாம் 'அறிந்தனம்; (நீ கூறல் வேண்டுவதின்று என்ருள்.)

(வி-ம்) வாயில்களிற் சிறந்தவன் பாணனுதலால் பாணனை வாயில் விடுத்ததாகவும் அவன்பாற் கூறியதாகவும் துறை கூறப்பட்டது. "பாண! நீ" என வருவித்துக்கொள்க. இத் துணைக்காலமும் பரத்தையர் சேரியிற் பல இன்றியமையாச் செயல் முடிப்பது கருதித் தங்கினர். பரத்தையரைக் கண்ணுற் கூடப் பார்த்திலர்; அவர்மேற் பிழையின்று சேரிசென்று தங்கியது பிழையெனினும் பொறுத்தருள்க எனப் பாணன் வேண்டினன் எனவும், தலைவி "எனக்கு அவர் துணையாக இனிவந்து தங்க வேண்டுவதின்று; புதல்வன் இருக்கின்ருன்; அவன் மழலைச்சொற் கேட்டுப பொழுது இனிதாகக் கழிகின்றது. அவன் செய்தது பிழையன்று என்றும் பிழைதான் எனவும் நீ சொல்வதற்கு என்ன உரிமையுண்டு அவன் செயல்கள் யாவும் யாம் அறிந்து மனத்திலமைத்திருக்கின்ருேம் செல் என்று கடிந்தாள் என விளக்கம் காண்க. "கல்லாமழலைக் கனியூறல் கலந்து கொஞ்சுஞ் சொல்லாலுருக்கி" என்று மக்கள் குதலைச்

சொல்லினிமையைக் கூறியதுபோல ஆசிரியர் "இனிய சொன் னீர்வாய் மழலைச்சிறுவன்" என்றார். "குழலினிது யாழினி தென்பதம் மக்கள், மழலைச்சொற் கேளா தவர்" என்ற குறட் கருத்தும் நோக்குக.

(இ-பு) நன்மை+ஊரன்:நல்லூரன் பண்புத் தொகை. உடையை:குறிப்புவினை முன்னிலையொருமை வினைமுற்று. அறிந்தோம்:தன்மைப் பன்மையிறந்தகால வினைமுற்று; மழலை:உரிச்சொல்.



## இதுவும் அது

42\. நீத்த நீரூ ரனிலைமையும் வண்ணமும்
யார்க்குரைத்தி பாண வதனல்யா மென் செய்தும்
கூத்தனைக் கொண்டு குறைநீ யுடையையேல்
ஆட்டுவித் துண்ணினு முண்.

(சொ-ள்) பாண-பாணனே! நீத்தம் நீர் ஊரன் நிலைமையும் வண்ணமும் யார்க்கு உரைத்தி-பெருக்கமான நீரையுடைய மருத நிலத்தலைவனுடைய நல்லொழுக்கமும் நற்பண்புகளும் நீ யார்க்கு எடுத்துக் கூறுகின்றாய் (அவன் இயல்பு நாங்கள் அறியாதவர்களா? அறிந்தவர்களே; ஆதலாற் கூறவேண்டுவ

தின்று) அதனால் யாம் என் செய்தும்-புறத்தொழுக்கம் உடையவன் என்பதை நாங்கள் அறிந்ததனால் என்ன செய்வோம்; (ஒன்றும் செய்ய வழியறியோம்) குறை நீ உடையையேல்-நீ உணவு உடை முதலிய குறைபாடுகள் உடையாய் என்றால்; கூத்தனை கொண்டு ஆட்டுவித்து உண்ணினும் உண்-எம் தலைவனை ஆடுவோனாக அமைத்துப் பலவிடங்களில் ஆடும்படி செய்து நீ பொருள் வாங்கியுண்டாலும் உண்க. (அது குறித்து நாம் வருந்தோம் என்றாள்.)

(வி-ம) அவனோடு கூடி வாழ்க்கைத்துணையாகப் பலநாள் வாழ்ந்து மகப்பெற்று மகிழ்ந்திருக்கும் எனக்கு அவன் நல்லொழுக்கமும் நற்பண்பும் தெரியும் அன்றோ? அறியாதவர்க்கல்லவோ விளக்கிக் கூறவேண்டும் என்ற கருத்து விளங்க "யார்க்குரைத்தி" என்றாள். அவன்பிழையையாம் அறிந்தாலும் அவனே தலைவன் ஆதலால் நாங்கள் பொறுத்திருக்க வேண்டிய கடமையுடையோம்; அவனை யொறுத்தடக்கும் இயல்பில்லோம் யாம் என்பாள் "என் செய்தும்" என்றாள் நீ இசைபாடுவோன்; எம் தலைவனை ஆடுவோனாக அமைத்துக் கொள்ளல் நலம்; நீவி ரிருவரும் பாடலும் ஆடலும் புரிந்து பல பரத்தையரை மயக்கி எம் தலைவன் வயப்படுத்திப் பொருள் பறித்து நீ உண்பதற்கு ஏதுவாம் என்று பழித்துக் கூறியதாகக் கொள்க. பாணனே நீ எம் தலைவனை ஆட்டுவிக்கின்றாய்.



நின்சொற்படியே பரத்தையர் சேரியிற்பயின்று திரிகிறான்' அவன் புறத்தொழுக்கத்திற்குத் துணை நீயே! அவனை வசப்படுத்திப் பரத்தைய ரின்பங்காட்டி அவன்பாற் பொருள் பறித்துப் பரத்தையர்க்கும் வழங்கி நீயும் உண்டு வாழ்கின்றாய்;

இஃது உனக்கு இழிவு என்பது தோன்றவில்லை என்ற கருத்துப் புலப்பட "உண்ணினும் உண்" என்றாள். எனவே வாயில மறுத்தாளாயிற்று.

(இ-பு) நீத்த நீர்-பண்புத்தொகை. உரைத்தி-முன்னிலை யொருமை வினைமுற்று. உண் ஏவல் வினைமுற்று. ஆட்டு வித்து-பிறவினை வினையெச்சம். செய்தும்-தன்மைப் பன்மை வினைமுற்று.

இதுவும் அது

43. போதவிழ் தாமரைப் பூந்துறை யூரனைத்
தாதவிழ் கோதைத் தகையியலார் தாம்புலப்பர்
ஏதின்மை சொல்லி யிருப்பர் பிறர் மகளிர்
பேதைமை தம்மேலே கொண்டு.

(சொ-ள்) போது அவிழ் தாமரை பூ துறை ஊரனை-அரும் புகள் மலரும் தாமரைப் பூக்கள் நிறையும் நீர்த்துறையையுடைய மருத நிலத்தலைவனை; (எம் காதலனை) தாது அவிழ் கோதை தகை இயலார்-மகரந்தம் பரவிய பூமாலை புனைந்த எழில் காட்டும் இயற்கையுடையார் (பரத்தையர்) பிறர் மகளிர் பேதைமை தம் மேலே கொண்டு - அயலார் பெற்ற மங்கையருடைய அறி யாமையைத் தம்பா லிருப்பதாக ஏற்றிக் கூறி, ஏதின்மை சொல்லி இருப்பர் தாம்புலப்பர்-பகைமை கூறி இருந்து தாம் பிணங்குகின்றனர் (என்று பலர் வாயிலாகக் கேட்கின்றேன் நான் என்றாள்)

(வி-ம்) பாண! என்ற சொல் வருவித்துக்கொள்க. அரும்பு விரியும் தாமரைப் பூக்கள் நிறைந்த நீர்த்துறை போலப் பரத்

தையர் சேரியிற் பலரும் பூப்பெய்துகின்றனர். வண்டுபுதிதாகப் பூத்தமலரை விரும்புவது போலத் தலைவனும் புதிய புதிய பரத் தையரை நாடித்திரிகின்றான் என்ற குறிப்புத்தோன்ற "போதவிழ்



தாமரைப்பூந்துறையூரனை" என்றாள். பரத்தையர் தம்மை யலங் கரித்தலே இயற்கையாகக் கொண்டவர் என்பது விளங்க "தகையியலார்" என்றாள். பிறர் மகளிர் என்றது தன்னையே தலைவி கூறியதாகக் கொள்க. என்னுடைய அறியாமையை. அப்பரத்தையர் தம்பால் இருப்பதாகக் கூறி என்னை அயலொருத்தியாகவும் என்மனைக்கு வந்தார் எனவும் கூறி எம் தலைவனோடு பிணங்குகின்றார் எனக்கேட்டேன். பரத்தையர் எம் தலைவனை இவ்வாறு கூறிப் புலப்பதற்குக் காரணம் அவர் அப் பரத்தையர் மேல் வைத்த அன்பன்றோ? அத்தகைய தலைவர் என் மனைக்கு வருவது தகவோ? பரத்தையர் சேரியிற் பயின்று திரிவது தான பெருமையாம். நீயும் அவரும் பரத்தையர் சேரி யில் வதிந்து வாழ்வதனைப் பல நாளாக நான் அறிவேன். இனி அவர் கூற்றினை விடுத்து வேறு கூறுக என்று வாயில மறுத்தாளெனக் கொள்க. நந்தலைவர் புதிய புதிய பரத்தையரை நாடிச் செல்ல ஒவ்வொரு பரத்தையும் அவர் என மனைக்கு வந்தனர் என ஐயங்கொண்டு அவருடன பிணங்குகின்றனராம். இதனை நீயறிவாய் என்பது குறிப்பு.

(இ-பு) அவிழ் தாமரை, அவிழ் கோதை என்பன வினைத் தொகைகள். இருப்பர் என்பது முற்றெச்சம். பூந்துறை, கோதைத் தகை இரண்டனுருபும் பயனும் தொக்கதொகை. புலப்பர்:பலர் பாற்படர்க்கை எதிர்கால வினைமுற்று.

வாயில் வேண்டிய தோழிக்குத் தலைவி வாயில் மறுத்தது

44. தண்டுறை யூரன் றடமென் பணைத்தோளாய்
வண்டூது கோதை வகைநாடிக் - கொண்டிருந்து
கோல வனமுலையும் புல்லினு னென்றெடுத்துச்
சாலவும் தூற்று மலர்.

(சொ-ள்) தடம் மென் பணைதோளாய் அகன்ற மெல்லிய மூங்கில் போன்ற தோளுடைய பாங்கியே!, தண்துறை ஊரன்-குளிர்ந்த நீர்த்துறைகளையுடைய மருத நிலத்தலைவன் (ஆகிய நம் தலைவன்) வண்டு ஊது கோதைவகை நாடி. கொண்டு இருந்து-வண்டுகள் மொய்த்திசை பாடுகின்ற கூந்தலையுடைய



பரத்தையின் திறத்தினை ஆராய்ந்து கொண்டு பரத்தையர் சேரியில் இருந்து; கோலவன முலையும் புல்லினான் - என்று-சந்தனக்கோலமெழுதிய அழகிய கொங்கையுடையாளொருத்தியையும் மணந்தான் என்று; சாலவும் எடுத்து அலர் தூற்றும் மிகவும் உயர்த்திப் பழிச்சொற் கூறுகின்றது (பரத்தையர்சேரி) (எவ்வாறு வர வேற்பேன் தலைவரை எனவாயில் மறுத்தாள்)

(வி-ம்) பாங்கி "நம் தலைவன் பிழை பொறுத்துக் கூடி வாழ்க. அவரை வரவேற்க வேண்டும்" என்று கூறினள்: அதற்கு மாறாகப் பரத்தையர் சேரியிற் பல நாட்டங்கி பரத்தையர் ஒவ்வொருவரையும் ஆராய்ந்து ஓர் அழகிய பரத்தையையணைந்து வாழ்கின்றான் என்று பரத்தையர் சேரிமுழுவதும் அலர் தூற்றுகின்றதே, அத்தகைய புறத்தொழுக்கமுடைய தலைவனுடன் நான் கூடி வாழ்வது எங்ஙனம், பரத்தையர் சேரிக்கே செல்லுமாறு கூறிவிடு, நான் அவர் முகம் நோக்கி

வரவேற்கும் பண்புடையேனல்லன் என வாயில் மறுத்தாள் எனக் கொள்க.

(இ-பு) தண்மை + துறை = தண்டுறை மை விகுதி கெட்டு வருமொழித் தகரமெய் டகரமெய்யாகத் திரிந்து நின்றது. பண்புத்தொகை. வண்டு + ஊது = வண்டூது. இது குற்றியலுகரங்கெட்டுப்புணர்ந்தது. பணைத்தோளாய்-உவமைத்தொகை. தடம், மென்மை, தோளுக்கு அடைமொழிகள். வண்டூது கோதை, கோலவனமுலை இவைகள் அன்மொழித்தொகைகள் எனக்கொள்க.

வாயிலாக வந்த பாணற்குத் தலைவி வாயில் மறுத்தது

45. மூத்தே மினிப்பாண முன்னாயி னிளையேம்
கார்த்தண் கலிவய லூரன் கடிதெமக்குப்
பாத்தில் பயமொழி பண்பு பலகூறி
நீத்த லறிந்திலே மின்று.

(சொ-ள்) பாண-பாணனே ! முன் இளையேம் ஆயினும்-நம் தலைவனுக்கு முன்னாளில் இளமைப் பருவமுடையோமாய் நாமிருந்தோம் ஆதலால் வாழ்க்கைத் துணையாயினேம்; இனி



மூத்தேம்-இன்றுமூப்புப் பருவமடைந்தோம்; (ஆதலால வெறுத்தனன்) கார் தண்கலி வயல் ஊரன்-நீர்நிறைந்த குளிர்ந்த தழைத்த வயல் சூழ்ந்த மருத நிலத்தலைவன் ; (எம் தலைவன்) எமக்கு பாத்து இல் பயம் மொழி பண்பு பல கூறி- எமக்குப் பிரிவில்லாத பயன்தரத்தக்க சொற்களையும் அவன்

நற்பண்புகளையும் எடுத்துக்கூறிக் கூடிக்கலந்து ; கடிது இன்று நீத்தல் அறிந்திலேம்-விரைவில் இந்நாளில் எம்மை விட்டுப் பிரிந்துவிடுவான் என்பதை அந்நாள் அறியாமல் இருந்தோம. (அறிந்தாற் கூடிவாழ்வேமா என்று கூறினள்).

(வி-ம்) இளையேம் ஆயினும் என்றதனுல் மூத்தேம் என்பதற்கு அங்ஙனம் ஆதலிலேம் என்பது குறிப்பாக வருவிக்கப் பட்டது. நீ வேறு நான் வேறு அல்ல ; ஈருடல் ஓருயிராகக் கருது ; நின்னைப்பிரியேன் ; பிரியினும் உயிர் தரியேன் ; இது தெய்வத்தின் ஆணை : பொய்யல்ல மெய்யுரையே என்று இயற்கைப்புணர்ச்சியில் தலைவன் கூறி வேண்டினன் என்பது தோன்ற "பாத்தில் பயமொழி" என்ருள். வாய்மை வழுவேன் ; பொய்யுரை கூறேன் ; புறத்தொழுக்கம் விழையேன் என்பன போன்று தலைவன் முன்னர்க்கூறிய சொற்களே "பண்பு பல" என்றது. "கடிது இன்று நீத்தல்" என்றது. இன்னும் எமக்கு இளமை நீங்கவில்லை ; ஒரு மகவேயன்றி மறு மகப் பேறெய்திலோம். கூந்தல் நரைத்திலது ; கொங்கைகள் சாய்ந்தில ; இத்துணை விரைவில் பிரிதல் என்ற கருத்தையுட் கொண்டது. முன்னரே இப்பண்புடையவன் என அறிந்திருந்தால் இவனைக் கணவனுக மணந்திரேன் என்ற கருத்தினுல் "அறிந்திலேம்" என்ருள். இவ்வாறு புறத்தொழுக்க முடைய தலைவனையாம் வரவேற்பது தகவன்று என்று வெறுத்து வாயில் மறுத்துக் கூறினள் தலைவி எனக்கொள்க.

(இ-பு) மூத்தேம் ; ஆயினும், இளையேம் தன்மைப் பன்மை

வினை முற்றுக்கள். தன்மை யொருமையில் வந்தன. வழுவமைதி பயன்-பயம் போலி. நீத்தல்:தொழிற் பெயர். பயமொழி:இரண்டனுருபும் பயனும் உடன்றொக்கதொகை.

8



## இதுவும் அது

46. கயநீர்பாய்ந் தோடுங் காஞ்சிநல் லூரன்
நயமே பலசொல்லி நாணினன் போன்றான்
பயமில்யாழ்ப் பாண பழுதாய கூறா
தெழுநீபோ நீடாது மற்று.

(சொ-ள்) பயம இல்யாழ் பாண! ஒருபயனும் இல்லாத யாழைக் கையில் தாங்கிய பாணனே! கயம் நீர் பாய்ந்து ஓடும் காஞ்சி நல ஊரன்-பொய்கைநீர்பரந்து விரைந்து ஓடுகின்ற காஞ்சி மரங்கள் நிறைந்த நல்ல மருதநிலத் தலைவன்.(எம் தலைவன்); நயமே பலசொலலி நாணினன் போன்றான்-அந்நாளில் இனிமையான பல சொற்களைக் கூறி என்னை மணந்து இந நாளில் எம்மனைக்கு வருவதற்கு நாணியவன் போல மறைந்திருக்கின்றான்; பழுது ஆய கூறாது-வீணான சொற்களை எம பாற் கூறாமல், நீ நீடாது எழு போ-நீ நீடித்திராது எழுந்து விரைவிற் போவாய் (என்றாள்).

(வி-ம்) "பயமில்" என்பதைப பாணனுடன் சேர்க்க. பய மில் பாண எனறது, அறம் பொருள் இனபம் எனற பயனென் னும் குறியாது வறிதே யலைந்துதிரியும பாணனே எனத்தலைவி சினத்தாற் கூறியதாகக் கொள்க. குளத்துட் பெருகிக்கிடந்த நீர் மடைவழியே சென்று காஞ்சி மரத்தின் வழியாக வயலிற் பாயும் ஊரன் என்றது, தலைவன் செல்வப் பெருக்கமெல்லாஞ் சிறிது சிறிதாகப் பாணன் வழியாகப் பரத்தையர்பாற் சேர் வதைக் குறிப்பிற் காட்டியதாகக் கொள்க. அணங்கே! அமிழ்தே! ஆருயிரே! நின்னை யான் பிரிந்தாற்றுவனோ? என் காதல் நோய் தீர்க்கு மருந்தன்றோ? உன்னைக்காணுதபோது என் உயிர் நிற்குமோ? எனறு தலைவன் இயற்கைப்புணர்ச்சி நிகழ்ந்துழிக் கூறிய சொற்களை மனத்துட்கொண்டு "நயமே பல சொல்லி" என்றுன். "நாணினன் போன்றுன்" என்றது நாணியவர்கள் முகத்தில் விழிக்காது மறைந்து நிற்பது போல மறைந்திருந்து உன்னை வாயிலாக விடுத்தான்என்பது; இதனுல் அவன் புறத்தொழுக்கம் உடையவன் என்பதும் உண்மையில்



லாதவன் என்பதும் பாணற்கு உணர்த்திளுளாயிற்று. எம் தலைவன்இயற்கை இவ்வாறிருக்க நீ அவனைக் குறித்துப் புகழ் வது பழுதாகும். ஆதலால் அத்தகைய சொற்களை இனிமே லும் கூருதெழுந்து விரைந்து செல் என்று வாயில் மறுத்தா ளாயிற்று.

(இ-பு) கயநீர்; ஏழனுருபும் பயனும் தொக்க தொகை. நயமே, இதில் ஏகாரம் தேற்றம். நாணினன் போன்றுன்:இரண்

டாம் வேற்றுமைத் தொகை. மற்று-அசை.

47 அரக்காம்ப ருமரை யஞ்செங் கழுநீர்
ஒருக்கார்ந்த வல்லி யொலித்தாரக் குத்துஞ்
செருக்கார் வளவய லூரன்பொய்ப் பாண
விருக்க வெம்மில்லுள் வரல்

(சொ-ள) அரக்கு ஆம்பல்-செங்குமுதமும், தாமரை-செந்தாமரை வெண்டாமரையும்; அம்செங்கழுநீர்-அழகிய செங்கழுநீரும்; ஒருக்கு ஆர்ந்த அல்லி-ஒன்றுக நிறைந்த அல்லியும் (ஆகிய இவைகளெல்லாம்) ஒலித்து ஆர குத்தும்-தழைத்து நெருங்கி ஒன்றோடொன்று குத்திக்கொள்ளும் இயல்புடைய; செருக்கு ஆர் வள வயல் ஊரன்-களிப்புத்தரும் வளம் நிறைந்த வயல் சூழ்ந்த மருத நிலத்தலைவனுடைய; பொய் பாண-பொய்யுரை கூறும் பாணனே! இருக்க எம் இல்லுள் வரல்-நின் தலைவன் பரத்தையர் சேரியின் கண்ணே தங்குக; எம்மனைக்கு வாரற்க (என்றாள்).

(வி-ம்) செங்குமுதம் தாமரை முதலிய கொடிகள் நீரின் முளைத்தெழுந்து தழைத்து ஒன்றோடொன்று குத்துஞ் செருக்குள்ள ஊரன் என்றது பரத்தையர் சேரியில் உள்ள பரத்தையர் ஒருவரோடொருவர் மோதிப் போரிட்டுக் கொள்ளுமாறு தலைவன் ஆங்குத் தங்கியிருக்கின்றனன் என்பதைக் குறிப்பாற் கூறியது எனக்கொள்க. செல்வமுடைய தலைவன் பரத்தையர் சேரிக்குச் சென்றால் பரத்தையர் ஒவ்வொருவரும்

எம்மனைக்கு வருக; எம்மனைக்கு வருக என்று முந்தியழைப்பதும், ஒருத்தி மனைக்குச்சென்றால் அவளோடு மற்றொருத்தி சொற்போர் தொடுப்பதும் இயற்கை. செருக்கு மக்கட்குள்ள பண்பு என்னினும் நீர்க்கொடிகளும் செருக்குக்கொண்டு குத்தின எனத்தோன்றும்படி "செருக்கு ஆர்" என்றார். பாணன் "தலைவன் பரத்தையர் மனைசென்றிலன; வேறோர் செயல் குறித்துச் சேரியில் தங்கினன. அது இப்போதுதான் முற்றுப் பெற்றது அது குறித்து ஊடல் தக்கதன்று என்று பல பொய் கூறியது கண்டு "பொய்ப்பாண" என்று விளித்தாள். எம்முடைய மனைக்கு வாரற்க பரத்தையர் பாலே தங்குக எனக் கூறிவாயில் மறுத்தாள்

(இ-பு) அரக்காம்பல்; பண்புத்தொகை. அஞ்செங்கழுநீரும அது. வளவயல் ,என்பதும் அது. பொய்ப்பாண இரண்டனுருபும் பயனும் உடன தொக்கதொகை. வரல்-எதிர்மறை வியங்கோள். வாரற்க என்பது.

## இதுவு மது

48 கொக்கார் வளவய லூரன் குளிர்சாந்த
மீக்கவனமுலை புல்லான பொலிவுடைத்தா
தக்கயாழ்ப் பாண தனர்முலையாய் மூத்தமைந்தார்
உத்தரம் வேண்டா வரல்.

(சொ-ள) தக்க யாழ்பாண-தலைவனுக்குத் தகுதியான

யாழைக் கையிற்பற்றிய பாணனே! கொக்கு ஆர் வளம் வயல ஊரன்-கொக்கு என்ற பறவைகள் மீன் பிடித்துத் தின்பது கருதி வந்து நிறைந்திருக்கும் வளம் பொருந்திய வயல் சூழ்ந்த ஊரன் (எம்தலைவன்) குளிர் சாந்தம்மிக்க வனமுலை பொலிவுடைத்தா புல்லான்-குளிர்ந்த சந்தனக்குழம்பு பூசிய எழில் மிகுந்த பரத்தையர் கொங்கைகளை தன்னுடல் விளக்கமுறும்படி தழுவாமல்; தளர் முலைஆய் மூத்து அமைந்தார் உத்தரம் வேண்டா-சரிந்த கொங்கையாகி மூப்புப் பொருந்திய மகளிர் ஆகிய எச்சில் வேண்டா. வரல்-இங்கு வாரற்க (என்றாள்).



(வி-ம்) கொக்கு ஆர் வளவயலூரன் என்றது கொக்கானது தக்கமீனை அற்ற நோக்கிப்பற்றுவதுபோலத் தலைவனும் பரத்தையரில்தக்கவரைப் கைப்பற்றக் கருதுகிறான் என்று குறிப்பிற் கூறியதாகக் கொள்க. குளிர்... வனமுலை எனவே பரத்தையர் கொங்கையை யுணர்த்தியது. தளர் முலை... அமைந்தார் என்றது, தலைவி தன்னைக் கூறியதாகக் கொள்க. பன்மையாகவும் படர்க்கையாகவும் கூறுவது வழு. ஆயினும் சினத்தாற் கூறுவதால் வழுவமைதியாயிற்று. "உவப்பினும்" என்ற நன்னூற் சூத்திரவிதி (379) கொள்க. புல்லான் என்பது எச்சப்பொருளில் வந்தது. புல்லாமல் என்பது பொருள் புல்லான் வரல் எனக்கூட்டுக. வரல எனபது எதிர்மறை வியங்கோள். "மகனனல்" மக்கட்பதடி எனல் (திருக்கு.) உடன் பாட்டிலும் எதிர்மறையிலும் வந்ததுபோல எதிர்மறையில் வந்தது. உத்தரம்-சேடம், மிச்சில் என்று பொருள் கொள்க. உண்டுகளித்த

மிச்சம்போல இன்பம் நுகர்ந்து கழித்த மிச்சில் என்னுடல் என்றுளாயிற்று. வேண்டா என்பதனைச் செய்யா என்ற வாய்பாடாகக் கொண்டு வேண்டி எனப்பொருள் கொள்ளினும் அமையும்.

(இ-பு) குளிர்சாந்தம்:வினைத்தொகை. புல்லான்:முற்றெசம: அமைந்தார்:வினையாலணையும் பெயர்.

49 நாவாய் வழங்கு நளிதிரைத் தணகடலுள்
ஓவா கலந்தார்க்கு மொல்லெ னிருக்குப்பைப்
பாவாரஞ் சேர்ப்பற் குரையாய் பரியாது
நோயா னுணுகிய வாறு.

(சொ-ள்) நாவாய் வழங்கும் நளிதிரை தண் கடலுள்-மரக்கலம் செல்லும் செறிந்த திரைகளையுடைய குளிர்ந்த கடலினுள்; ஓவா கலந்து ஆர்க்கும் ஒல் இன் இருகுப்பை-நீங்காமல் சேர்ந்து ஒல்லென ஒலித்துத்திரியும் இறவு மீன்களின் குவியல்; பாவாரம் சேர்ப்பற்கு-பரவிய கடற்கரையையுடைய நெய்தனிலத்தலைவனுக்கு; நோயான் பரியாது நுணுகிய ஆறு உரை



யாய்-காமநோயால் பொறுக்கலாற்றாது நான் உடல் மெலிந்த வாற்றினை (தோழி நீ) கூறுவாய் (என்றாள்).

(வி-ம) நாவாய் வழங்கும் கடல், நளிதிரைக்கடல் தண் கடல் எனக்கூட்டுக. இரு, இறவு; இற என்று வழங்கும். இரு மீன் என்பது ஒரு சிறிய மீன் அது அலையுள் அலைந்து சேர்ந்து

ஓல்லென்ற ஓலியுடன் கரையோரம் வந்து ஒவ்வொன்ருகக் கூடும் எனவும் அவ்வாறு கூடிய மீன்கள் குவியலாகத் தோன்றும் எனவும் கூறினர். இறவு மீன்குவியல் பரவிய கரை என்று கொள்க. சேர்ப்பன் என்பது நெய்தனிலத்தலைவனைக் குறிக்கும் பெயர் இருமீன்கள் அலையால் வருந்தி மெல்லென்ற ஓலியுடன் கரையைவந்து அணுகியிருக்கும இயற்கை கண்டவன்தலைவன் ஆதலால் அவனுக்கு என் நிலைமையினைக் கூறின் அறிவான் என்பது கருத்து. தாய்தமர் பழித்துரைக்கும் அலரறிந்து வருநதிய நிலைமையும் பிரிவாற்ருத நிலைமையும் அதனுல உடல் மெலிந்து நாளுக்குநாள் நலிவதையும கூறுக என்ருள். நீ விளக்கிக் கூறின விரைநது வந்து என்னை வரைந்துகொள்வான்; எனதுயரமும நீங்கும் எனத்தோழிக்கு அறிவித்தாளெனக் கொள்க.

(இ-பு) நளிதிரை : பண்புத்தொகை, தண்கடல் என்பதும் அது. ஓவா: ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம. ஓல்லென்: ஒலிக்குறிப்பிடைச சொல் இருக்குப்பை: ஆருமவேறறுமை.

50 நெடுங கடற் சேர்ப்ப நின்ஞேடுரையேன்
ஓடுங்கு மடற் பெண்ணை யன்றிற்குஞ் சொல்லேன்
கடுஞ்சூளிற் ருன்கண்டு கானலுண் மேயுந்
தடந்தாண் மட நாராய் கேள்.

(சொ-ள்) நெடுங்கடல் சேர்ப்ப-நீண்ட கடற்கரையாம் ஆடவனே. நின்னேடுஉரையேன்-உன்னேடுநான்ஒன்றுங்கூறேன்.

ஒடுங்கு மடல் பெண்ணை அன்றிற்கும் சொல்லேன்-ஒடுங்கிய மடல் பொருந்திய பனையில் வாழும் அன்றிற்பறவைகட்கும் உரையேன். கடுஞ்சூளில் தான்கண்டு கானலுள் மேயும்-எம்



தலைவன் கடுமையான சூளுரைக்கும்போது நோக்கிக் கானலுள் மேய்ந்திருந்த; தடம் தாள் மடம் நாராய் கேள்-பெரிய கால்களை யும் இளமைப் பருவத்தையுமுடைய நாரையே நான் உன் னிடமே கூறுகின்றேன் நீயே கேட்பாய். (என்று தலைவி புலம்) பினுள்).

(வி-ம்) தலைவி, தலைவன் பிரிவாற்ருமையாற் கடலைச்சார்ந்த கழிக்கரையிலுள்ள பொருள்களை விளித்துக் கூறுவது, காம மிக்க கழிபடர் கிளவியென்ற துறையாம். சேர்ப்ப என்றவிளி தலைவனைக் குறித்ததன்று. கடற்கரையை அல்லது கடற் றுறையை விளித்ததாகக்கொள்க. சேர்ப்பு என்பது கடற்றுறை யின் பெயர். அன்விகுதி சேர்ந்து சேர்ப்பன் என்ருகிப் பின் விளியாயிற்று. துறையாகிய ஆண்மகனே என்பது பொருள்: "செந்தார்ப் பசுங்கிளியார்" என்று கிளியை கிளியாகிய பெரி யார் என்று விளித்ததுபோலக்கொள்க. உயர்வுபற்றி வந்த வழுவமைதியிது. முதலிற் கடற்றுறையைக் கண்டாள் விளித் தாள்; பின் கருதினுள்' கடற்றுறை காதலனோடு முதலிற் கூடிய இயற்கைப் புணர்ச்சியை யறியாது என்று; அதனுல் "நின்னேடுரையேன்" என்ருள். பின்னர் அன்றிலும் அறியாது எனக்கருதி அன்றிற்குஞ்சொல்லேன்" என்ருள். காதலன் கடுஞ்சூளுரைத்துப் புணர்ந்து பிரியுங்காலத்து நாரைகானலுள் மேய்ந்தது நினைவிற்கு வந்தது; அதனுல் "மடநாராய்" என

விளித்து நீயே சான்ருய் நின்ருய் என்ற குறிபபுங் கூறிக்கேள் என்று பிரிவாற்ருமை கூறத்தொடங்கினள் எனக்கொள்க. “குருகுமுண்டுதாம் மணந்தஞான்றே” என்று இயற்கைப் புணர்ச்சிக்குச் சான்று குருகினைக் கூறுவதும் காண்க. கடுஞ்சூள் கூறியது உனக்கே தெரியும்; ஒருவரும் அறியார். என் காதலர் இவ்வாறு சூளுரைத்தவர் பிரிவது நன்ரு? நீயே அவர்க்குக் கூறுக என்பது குறிப்பு.

(இ-பு) சேர்ப்ப என்பது திணைவழுவமைதி. நெடுங்கடல் ; பண்புத்தொகை. உரையேன் சொல்லேன் என்பன தன்மை யொருமை எதிர்மறை வினைமுற்றுக்கள். கடுஞ்சூள், தடம்தாள்,



மடநாராய் இவை பண்புத்தொகைகள். கேள்: விகுதி குன்றிய ஏவலொருமை வினைமுற்று.

## இதுவும் அது

51 மணிநிற நெய்தன் மலர்புரையுங கண்ணுய்
அணிநல முண்டிறந்து ...ம் மருளா விட்ட
துணிமுந்நீர்ச் சேர்ப்பற்குத் தூதோடு வந்த
பணிமொழிப் புள்ளே பற

(சொ-ள்) மணிநிற நெய்தல் மலர் புரையும் கண் ஆய்-நீல நிறம்பொருந்திய நெய்தற் பூப்போன்ற என் கண்போன்றவளுய்க்கூடி ; அணிநலம் உண்டு இறந்து நம்அருளா விட்ட- அழகும் உடல்நலமும் கவர்ந்து பிரிந்து நமக்கு அருள் புரியாது மறந்து விட்ட ; துணி முந்நீர் சேர்ப்பற்கு-மனததுணிவுடைய

கடற்கரைத் தலைவனுக்கு; தூதோடு வந்த பணிமொழிப் புள்ளே-(இயற்கைப் புணர்ச்சி நிகழ்ந்த அக்காலத்தில்) தூதாக வந்ததுபோலக் கானலுள் வந்திருந்த தாழ்ந்த குரலுடைய நாரையே; பற-இப்போது பறந்து செல், (தலைவனையழைத்து வருவதற்கு என்றாள்).

(வி 10) கழிக்கரையின கண் தோன்றிய நாரையை விளித்துப் புலம்பியதாகக் கொள்க. முன்னின்ற செய்யுளில் "மட நாராய் கேள்" என்ற தலைவி அந்நாரையை நோக்கி நீ பறந்து சென்று தலைவனைக்கண்டு தூது சொல்லியழைத்துவா என்ற குறிப்புத் தோன்றக் கூறியதாகக்கொள்க. புள் என்பது பறவை கட்குப்பொதுப் பெயரெனினும் நெய்தல் திணையில் வந்ததாலும் முந்திய கவியில் நாரை என்று சுட்டிக் கூறியதாலும் நாரை யெனப் பொருள் கொள்ளபபட்டது. தன் கண்ணினைத்தானே சிறப்பித்தல் பெருமையன்று என்னினும் தன்காதலன் சிறப்புத் தோன்றத்தன் கண்களையும சிறப்பித்தாள் என்று கொள்க, நீல நிறம் பொருந்திய நெய்தல் மலர்போன்ற என் கண்களைப போலவே நான் கருதினேன் என்காதலனை. அவ்வாறு என்னாற் போற்றப்பட்ட காதலன் என்னை விட்டுப்பிரிந்தான். பிரிவாற்று



மையால் என் உடல் மெலிந்து பசலைபூத்து அழகு குலைந்தது என்ற குறிப்புத்தோன்ற "அணிநலம் உண்டு இறந்து" என் றாள். ஒருகாலத்திற் பிரியினும் காதலர் அடுத்து வந்து கூடிக் கலந்து அன்புடன் வாழ்ந்திருக்கக்கருதுவது இயற்கை. என் காதலரே எனக்கு அருள்புரியாது நெடிது நாளாக மறந்து மனத் துணிவாகத் தங்கினர் என்பது வெளிப்பட "நம்மருளாவிட்ட துணிமுந்நீர்ச் சேர்பபற்கு" என்றாள். சேர்ப்பன விடுத்த தூது

போல முன்னர்த்தலைவன் என்னைக் களவிற் புணர்ந்து கடுஞ் சூளுரைத்துத் தேற்றிப்பிரியும் காலத்து நீ தாழ்ந்த குரலுடன் கானலில் வந்து தனித்திருந்தாயன்றோ? உன்னையன்றி எனக்கு உதவிபுரிவார் யாவர் நீ பறந்து சென்றழைத்துவா என்ற கருத்துத் தோன்ற ''தூதோடு வந்த... பற என்றாள்.

(இ-பு) மணிநிறம்: இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. ஆய்-ஆகி செய்து என்ற வாயபாட்டு வினையெச்சம். போய் எனபது போல் யகர மெய விகுதி. அருளா. ஈறுகெட்ட எதிர் மறை வினையெச்சம். துணி சேர்பபற்கு எனக் கூட்டுக வினைத்தொகை. பற ஏவலொருமை வினைமுற்று.

இதுவும் அது

52 அன்னையு மில் கடிந்தாள் யாங்கினியா மென் செய்கம்
புன்னையங் கானலுட் புக்கருந்தும்-நின்னை
நினையான் றுறந்த நெடுங்கழிச் சேர்ப்பற்
குரையேனோ பட்ட பழி.

(சொ-ள்) (நாரையே) அன்னையும் இல் கடிந்தாள்-என் தாயும் மனையினின்று நீக்கத் தக்க சொற்கள் பேசுகின்றாள்; யாங்கு இனி யாம் என் செய்கம்- இனிமேல் எவ்விடம் சென்று நாம் என்ன செய்வோம்; புன்னை அம்கானலுள் புக்கு அருந்தும் நின்னை-புன்னை மரங்களையுடைய அழகிய கழிக்கரையிற் புகுந்து மீனுண்டு நோக்கியிருந்த உன்னையும்; நினையான் துறந்த நெடுங்கழிசேர்ப்பற்கு-நினையாமல் பிரிந்து சென்ற நீண்ட கழிக்கரையையுடைய நெய்தனிலத் தலைவனுக்கு:

 கைந்நிலை

பட்டபழி உரையேனே-யான் அடைந்த பழிச்சொல்லுடன் கூடிய துனபத்தைக்கூறுவேனே; (கூருதேயிறந்து படுவேனே-யானறியேன் என்ருன்).

(வி-ம்) முந்திய கவியில் வந்த நாரையை நோக்கிக்கூறிய தாகக் கொள்க. நாரையே! என விளிவருவித்துக் கொள்க. கடிந்தாள் என்பது கடிவாள் என்ற சொல்லை யிறந்தகாலத்தாற் கூறியதாகக் கொள்க. துணிவு பற்றி வந்த காலவழுவமைதி. யாங்கு-எவ்விடம். அன்னையாற் கடியப்பட்டபின் எங்குச் சென்று யாது செய்து வாழ்வோம, வாழ வழி யொன்று மில்று என்ற கருத்து விளங்க "யாங்கு இனியாம் என் செய்கம்" எனருள். யாம் என்றது, தன்னைப் பன்மையாகக் கூறியது. இயற்கைப புணர்ச்சி நிகழ்ந்த போது தலைவன் "நின்னைப் பிரியேன்; பிரியினும் உயிர் தரியேன" என்று கூறிச் சூள் புரிந்த போது சான்ருக நீ தானே நின்ருய். வேறு சான்றில்லையே! நானும் தலைவனும் நீ மீனுண்ணும் காட்சியை நோக்கி வியந்திருந்தோமே! எனனைத தலைவன மறபபினும் உன் காட்சி அவர் கண்ணைவிட் டகலாதே. உன் நினைவு வரினும் என்னையும் நினைக்க ஏதுவாகுமே! அந்நினைவையும் மறந்தார் போலும் எனற கருத்தினுல் "நினனை நினையான் துறந்த" என்ருள். நினையான் என்பது நினையாமல் எனப்பொருள் பட்டது. தலைவன் என்னை விட்டுப் பிரிந்த நாள் முதல் அன்னையர் கூறும் பழிச் சொல்லும் ஊரார்உரைக்கும் பழிச்சொல்லும் இவற்றைக்கேட்டு நான் படும்பாடும் நேரிற்கூறுவதற்கு வருவானென எதிர் நோக்

குகின்றேன். வருமுன்னரே பிரிவாற்றாமைத் துயரால் இறந்து படுவேனோ என்னும் ஐயமும் எழுகின்றது. இறந்து பட்டால் நான் பட்ட துயரத்தை என் தலைவனுக்குக் கூறுவார்யார்? இத்தனைத்துன்பங்களும் நம்பொருட்டால் அடைந்து உயிர்வைத்திருந்தாள் என்று என் தலைவன் அறிந்தாலும் என்னுள்ளம் சிறிது ஆறுதலடையும். அதுவுமின்றி இறந்துபட்டாற் பயனில்லையே என்று வருந்துகின்றேன் என்ற குறிப்புத் தோன்ற "உரையேனோ பட்ட பழி" என்றாள். பட்ட பழியுரைத்துப்பின் இறந்தாற் பயனுண்டு என்பது கருத்து.



(இ-பு) அன்னையும் இதில் உம்மை உயர்வு சிறப்பு. கடிந்தாள் காலவழுவமைதி. செய்கம்: தன்மைப் பன்மை எதிர் கால வினைமுற்று. க் என்ற மெய் எதிர்காலங்காட்டும் இடைநிலையாகக் கொள்க. பாடுகம், ஆடுகம் என்பனபோன்றது. நினையான்: முற்றெச்சம். உரையேனோ: இதில் ஓகாரம் ஐயப்பொருளில் வந்தது.

வரைபொருட் பிரிவு நீட்டித்த வழித்தலைவி தோழிக்குக் கூறியது.

53 அலவன் வழங்கு மடும்பிமி ரெக்கர்
நிலவு நெடுங்கான லீடார் துறந்தார்
புலவுமீன் குப்பை கவருந் துறைவன்
கலவான்கொ றோழி நமக்கு

(சொ-ள்) அலவன் வழங்கும் அடும்பு இமிர் எக்கர்-நண

டுகள் போக்கும் வரவுமாகப் பயிலகின்ற அடம்பங் கொடிகள நிறைந்த மணல் மேட்டில உள்ள; நிலவு நெடுங்கானல்-நிலாப போன்ற நீண்ட மணற்பரந்த கானலில; நீடார் துறந்தார்-நீண்டகாலந்தங்கியிராது அக்கானலை விடுத்து நீங்கிச்சென்ற பரதவர் எல்லாரும; புலவு மீனகுப்பை கவரும் துறைவன்- புலால் நாற்றத்தையுடைய பல மீன் குவியலைக் கவர்ந்து வரும் வளம் பொருந்திய நெய்த னிலத்தலைவன் (நந்தலைவன்) நமக்கு கலவான் சொல்-நம்பால் வந்து இனிக் கூடானோ (கூடுவனோ, கூறுக என்றாள்).

(வி-ம்) நண்டுகள் கடல் அலையாலடிபட்டு வருந்தி மணன் மேட்டுக்கு வருவதும் ஆங்கு மக்கள் வரவு கண்டு கடலிலும் மணலிலும் ஒளிக்கப் போவதுமாக அடிக்கடி பயிலு வதால் " அலவன் வழங்கும் எக்கர் " என்றார். அடும்பு-அடம்பு; இது நெய்தனிலத்துள்ளஒரு கொடி என்பர். நிலவு கானல்-நிலாப் போலத்தோன்றும் கானல்; நெடுங்கானல்-நெடு மையாகிய கானல் எனப்பொருள்கொள்க. கானல் என்பது இங்குக்கழிக் கரையிலுள்ள சோலையைக் குறித்தது. மீன் பிடிப் பவர்கள் யாவரும் வந்து கானலிற் படுத்துறங்குவர் என்பதும் அவர்களில் வைகறையில் எழுந்து சென்று வள்ளத்திலேறி



வலை வீசியவர்க்கே மீன்கள் குவியலாகக் கிடைக்கும் என்ப தும், அயர்ந்து நெடிது நேரம் உறங்கியவர்க்கு மீன்கள் அகப் படுவது அருமை என்பதும் நீடார் துறந்தார் புலவுமீன் குப்பை கவரும் " என்பதனால் அறியலாம். நீடார் துறந்தார் என்பது நெடு நேரம் உறங்காது கானலை விட்டு நீங்கிய பரதவர் எனப் பொருள் கொள்ளலாயிற்று. துறந்தவர் புலவுமீன் கவர்ந்து

வருவது போல நம்மைவிட்டுத் துறந்தவரும் பொருட்குவியல் கொண்டு வருவார் என்பது குறிப்பு. நான்விரைவில் பொருட் குவியல கொண்டு வருவார் எனத்துணிகின்றேன் நின் கருத்து யாது என வினவுவாள் "கலவான் கொல்" என ஐயவினு நிகழ்த்தினுள், கலவான் பகைவன்; நமக்குக் கலவான் கொல்- நமக்குப்பகைவனே? இவ்வாறு நீட்டித்துப பிரிந்தனனே எனக் கொள்ளினும் பொருந்தும்.

(இ-பு) இமிர் எக்கர்: வினைத்தொகை, நிலவு நெடுங் கானல்: முன்னது உவமைத்தொகை, நீடார் துறந்தார்: முற் றெச்சம். கொல்: ஐயப்பொருள் தந்தது. நமக்கு: உருபு மயக் கம். ஏழனுருபுப் பொருளில் நான்கனுருபு நின்றது. கலவான்: ஆண்பாற்படர்க்கை எதிர்மறை வினைமுற்று.

இதுவு மது.

54 என்னையர் தந்த விறவுணங்கல் யாங்கடிந்து
புன்னையங் கான லிருந்தேமாப் பொய்த்தெம்மைச்
சொன்னலங் கூறி நலனுண்ட சேர்ப்பனை
யென்னைகொல் யாங்காணு மாறு.

(சொ-ன்) (தோழீ) என்னையர் தந்த இறவு உணங்கல் யாம் கடிந்து-என் தந்தையர், உடன் பிறந்தார் வலைவீசிக் கொணர்ந்து தந்த இறல் மீனைக்கவரவரும். புள்ளினங்களை யோட்டி; புன்னை அம்கானல் இருந்தேம் ஆ-புன்னைமரங்களை

யுடைய அழகிய கானலில் நாம் இருந்தோம் ஆக, (ஆங்கு வந்து) எம்மை பொய்த்து சொல்-நலம் கூறி நலன் உண்ட சேர்ப்பனை-எமக்குப் பொய்யாக நல்லுரை கூறியின்பம் நுகர்ந்த



நெய்தனிலத்தலைவனை (நம் தலைவனை) யாம் காணும் ஆறு என்னைகொல்-நாம் இனிக்காணும் வழியாது (அதனை யாய்ந்து கூறுக என்றாள்).

(வி-ம்) யாம் என்றது தன்னுருயிர்த் தோழியையுளப்படுத்திக் கூறியதாகக் கொள்க. நம் காதலரை முன் கண்டிலோம். இவர் அவ்வழி வருவாரெனறு எதிர் நோக்கி யிருந்திலேம். சிறுமியராகத் தந்தையர் தன்னையர் கொண்டு வந்து தந்த இருல் மீன்களை அவர்கள் ஆணைப்படி உணக்கிப் புள்ளினங் களை யோட்டியிருந்தோம். காதலறியாத சிறுமியர்யாம் என்ற கருத்து அடங்க "என்னையர்......இருந்தேம் என்றாள். வஞ்சித்து என்னைமயக்கி இனிய சொலலும் சூளுரையும் இயம்பிக கனவிற் புணர்ந்து இன்பம் நுகர்ந்தான் என்பது தோன்ற பொய்த்து...."நலனுண்டசேர்பபன்" என்றாள். என்னை மட்டும் வஞ்சித்தானல்லன் உன்னையும் வஞ்சித்தான் நீயும் அவனுரை கேட்டு மயங்கி என்னை அவனோடு கூட்டுவித்தாய் என்பாள் "பொய்த்து எம்மை" என்றாள். நலன் உண்ட சேர்ப்பன் என்பது இன்பத்தை நுகர்ந்த தலைவன் என்று பொருள் தருவதும் அன்றி அவன் என்னை விட்டுப் பிரிந்ததனால் என் மேனி பசலை பூத்து எழில் குலைந்து நலமுழுவதும் தொலைவதற்குக் காரண

மானவன என்ற பொருளும் தொனிக்கின்றது. நலன் உண்ட சேர்ப்பன்-என் எழிலைக் குலைத்த தலைவன் என்றும் பொருள் படும். வஞ்ச நெஞ்சமுடைய தலைவனாதலால் அவனை யாம் காண்பது அரிது: சூழ்ச்சியாற் காணல் கூடும்; அதற்குரிய சூழ்ச்சியாய்ந்து கூறுக என்பாள் போல "என்னை கொல்" என்றாள். தலைவனைக் கண்டாலும் என் ஆற்றாமை நீங்கும் அதற்குரியது செய் என்பது குறிப்பு,

(இ-பு) எம்மைப் பொய்த்து:உருபு மயக்கம். நான்கனுருபு நிற்க வேண்டிய இடத்தில் இரண்டனுருபு நின்றது. இருந்தேம் தன்மைப் பன்மை வினைமுற்று. கொல்:ஐயப்பொருள் தந்தது. இறவுணங்கல்:இருபெயரொட்டு.



பாங்கி தலைவன் இயற்பழித்துழித் தலைவி இயறபட மொழிந்தது

55 கொக்கார் கொடுங் கழிக் கூடுநீர்த் தண்சேர்ப்பன்
நக்காங் கசதி தனியாடித்-தக்க
பொருகயற் கண்ணினாய் புல்லான் விடினே
இருகையும் நில்லா வளை.

(சொ-ள்) கொக்கு ஆர் கொடு கழி கூடு நீர் தண் சேர்ப்ப யன்-கொக்கு எனற பறவைகள் நிறைந்த வளைந்த கழி நிலங் கள் கூடிய குளிர்ந்த நீர்க்கரையையுடைய தலைவன்; நக்கு ஆங்கு அசதியாடிப் புல்லான் விடின்-என்னை நோக்கிச் சிரித்து விளையாட்டாகப் பேசித் தழுவிப் புணராதிருப்பானாயின்; இரு

கையும் வளை நில்லா-என் இரண்டுகைகளிலும் உள்ள வளையல் கள ஒன்றும் நில்லாமல் கழன்று விழும; தக்க பொருகயல கண் ணிஞய்-எனக்குத தகுதியான பிறழுங்கொண்டை மீன் போன்ற கண்களையுடைய பாங்கியே! (என்ருள் தலைவி).

(வி-ம்) பாங்கியே நீ அவன் புறத்தொழுக்க முடையவன் என்றும், என்னைப் பிரிந்து நெடிது நாள் மறந்து நினையாமற் பரத்தையார் சேரியிற் பயின்று திரிந்தான் எனவும் பழிக்கின் ருய். நீ கூறுவதனைத்தும் உண்மையே! ஆயினும் அவன் என் மேல் வைத்திருக்கும் அன்பு உனக்குத் தோன்ருது எத்தனை பிழை புரியினும் அத்தனையும தோன்ருது என் தலைவன் அன்பே என் நெஞ்சில் நிற்கும்; என்னுடன் முகமலர்ந்து நகைத்து விளையாடி என்னைக் கூடாதபோது என் உடல மெலிந்து நலிந்து வளையல்களும் கீழேகழன்று விழும்-புணர்ந்த போது உடல் புளக முற்றுப் பூரிக்கும்:நான் அவனின்றி உயிர் வாழும் நிலைமையரிது என்று தலைவன் அன்பைத்தலைவி தன் தோழிக்குக் கூறியது இது. தக்க தலைவனுடன் தன்னை முன் கூட்டுவித்தது கருதி எனக்குத் தகுதியான பாங்கி நீயே என் பது தோன்ற ''தக்க'' என்ற அடைமொழி புணர்க்கப்பட்டது. மீன்களையுண்பது கருதிக்கொக்குகள் நிறைந்திருக்கும் கழிநிலம் போல என் தலைவன் இன்பத்தை நுகர்வதற்குப் பரத்தையர் சேரியுள்ளது. ' என்ற குறிப்புத் தோன்றுவது காண்க. பரத்



தையர் சேரியினின்று வரினும் அவன் பிழையை எண்ணுமல் அவனுடன் கலப்பதற்கே என் நெஞ்சு விழைகின்றது என்ருள்.
'' பன்மாயக் கள்வன் பணிமொழியன்ரே நம் பெண்மையுடைக்

கும் படை" என்ற குறட் கருத்தையும் ஒப்பு நோக்குக.

(இ-பு) பொருகயல், ஆர்கழி, கூடுநீர் இவை வினைத் தொகைகள். கொடுங்கழி, தண்சேர்ப்பன் இவை பண்புத் தொகைகள். புல்லான்: முற்றெச்சம். இருகையும்-உம். முற்று. நில்லா:அஃறிணைப் பலவின் பால் எதிர்மறை வினைமுற்று.

வரைபொருட் பிரிவு நீட்டித்தவழித் தலைவி தோழிக்குக் கூறியது.

56 நுரைதரு மோதங் கடந்தெமர் தந்த
கருங்கரை வன்மீன் கவரும்புள் ளோப்பிற்
புகரில்லேம் யாமிருப்பப் பூங்கழிச் சேர்ப்பன்
நுகர்வன னுண்டா னலம்.

(சொ ள்) தோழீ! நுரைதரும் ஓதம் கடந்து எமர் கருங் கரை தந்த - நுரையோடு வரும் கடல் அலைகளைக் கடந்து சென்று நம்மவர் பெரிய கரைக்குக் கொண்டுவந்து தந்த; வன்மீன் கவரும் புள் ஒப்பில்-வலியமீன் உணங்கலைக் கவரும் பறவை யினங்களையோட்டுஞ் செயலில்; புகர் இல்லேம் யாம் இருப்ப-ஒரு குற்றமும் இலலாதவர்களாய் நாம் ஆங்கிருந்த போது; பூகழி சேர்ப்பன் நலம் நுகர்வனன் உண்டான்-பொலி வாகிய கழிக்கரையுடைய நெய்தனிலத் தலைவன் (நம்தலைவன்) வந்து நம் இன்பத்தை நுகர்ந்து அடைந்தான்; (அதனை மறந்த னன் போலும் என்றாள்).

(வி-ம்) நம் தலைவனை நாம் முதலில் அறிந்தோமா? அவன் அழகைக் கண்டு காதல் கொண்டோமா? மணஞ்செய்து கொள்ளென்று வேண்டினோமா? ஒன்றும் புரியாது மீனுணங் கலைக் காத்திருந்தோம் நாம்;' அவ்வாறிருந்த நம்மை முதலிற்

இல்லேம் என்ற தன்மைப் பன்மைக் குறிப்பு வினைமுற்று எச்சப் பொருள்பட்டது. நுகர்வனன் என்பதும் அது.

தோழி இரவுக் குறியிடம் தலைவிக்குணர்த்தியது

57 கொடுவாய்ப் புணரன்றில் கொய்மடற் பெண்ணைத்
தடவுக் கிளைபயிருந் தண்கடற் சேர்ப்பன்
நிலவுக் கொடுங்கழி நீந்திநம் முன்றிற்
புலவுத் திரைபொருத போழ்து.

(சொ-ள்) தண் கடல் சேர்ப்பன்-குளிர்ந்த கடற்கரையுடைய தலைவன் (நம் தலைவன்) நிலவு கொடுங்கழி நீந்தி-மணல்வெளியும் வளைந்த கழிக்கரையும் கடந்து; நம்முன்றில் புலவு திரை பொருத போழ்து-நம் முற்றத்தில் புலாலுற்றத்தையுடைய நீரில் அலையடிக்கும்படி குறிகாட்டிய போழ்தில் கொய்மடல் பெண்ணை-வெட்டப்படு மடல்களையுடைய பனை மரத்தில்; கொடுவாய் புணர் அன்றில் தடவு கிளை பயிரும்—வளைந்த வாயையுடைய சேவலும் பேடுமாகப் புணர்ந்திருக்கும் அன்றிற் பறவைகள் பெருகிய தம் பேடு குஞ்சுகள் ஆகிய



வெறியும் அலையானது அலறி யொலிக்கின்ற உருஅ நீர்ச் சேர்ப்பனை-என்னுடன் வந்து கூடாத நீர்மையையுடைய தலைவனை (நம் தலைவனை) உள்ளி இருப்பின்-தனியே அவன் பிரிவை நினைத்திருந்தால் என் முன்கை வளை பொருஅ எனது முன்னங்கை வளையல்களைப் பொறுக்காமல் கீழே வீழ்விக்கின்றன. (நான் என் செய்வேன் என்றுள்.

(வி-ம்) என்னுருயிர்ப் பாங்கியே! நீ ஆற்றியிரு விரைந்து வந்து கூடுவர் என்று கூறுகின்றனை. நானும் ஆற்றியிருக்க நினைக்கிறேன். ஆயினும் அவர் பிரிவைத் தனியேயிருந்து நினைத்தால் உடல் மெலிந்து வளையல்கள் கழன்று விழுகின்றன. நான் எவ்வாறு பிரிவாற்றியிருப்பேன் என்று கூறியதாகக்கொள்க, நினைப்பினும் உடல் மெலிந்து வளை கழல்கின்றன என்றால் நினையாமல் இருக்கவியலுமா? தலைவனைக் காண்பதற்குரிய வழி கூறுக என்பது குறிப்பு. சுருவெறிந்த குப்பை சுழலுங் கழிபோலத் தலைவனால் நலனுண்டு துறக்கப் பட்டுக் குடியுட் சுழல்கின்றனள் தலைவி எனவும், அலைகள் இருல்மீனை வீசி யெறிந்து ஆரவாரஞ் செய்வதுபோலப் பெண்டிர் பலரும் அலர்தூற்றியாரவாரஞ் செய்கின்றனர் எனவும் உள்ளுறை கொள்க. அலற என்ற செய எனெச்சத்தை அலறி எனத் திரித்துக் கொள்க, கழியுள் ஓதம் இரைக்கும் சேர்ப்பன் எனவும், உருஅ நீர்ச் சேர்ப்பன் எனவும் தனித்தனி கூட்டுக. மகரமீன் கடலிற் சிறு மீன்களை யெல்லாம் அடித்துக் கொன்று தின்னும்; அம் மீனுக்கு மேறபட்ட வலிமையுடைய மீன் ஒன்று மின்று; கடல் ஒரு போர்க்களமாக, சுருமீன் ஒரு வேந்தனாக மற்றை மீன்கள் எல்லாம் வீரர்களாகப் போர் புரிந்து வெல்லும் அது. கல்லாடர் கடலின் சிறப்புக் கூறும் போது "சுறவ வேந்து, நெடும்போர் செய்ய, முழக்கமொடு வளைத்த அமர்க்களமாகியும்" என்றார்: உருஅ-அன்பு பொருந்தாத எனவும் பொருள் கொள்ளலாம்.

(இ-பு) சுரு, சுறவு, சுற எனச் செய்யுளில் வரும். வழக்கிற் சுரு சுறவு எனவரும். இரு என்பதும் அவ்வாறே வரும். நன்னூல் "குறியதன் கீழா" சூ. 172 என்ற விதிகொள்க, 'எறி குப்பை' எறியோதம் வினைத்தொகைகள். உருஅ, பொருஅ

என்பன இசை நிறையள பெடைகள். என் முன்கை வளைபொரு எனக்கூட்டுக. உருஅ:ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பொருஅ : பல வின்பால் எதிர்மறை வினைமுற்று.

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக நிற்க தோழி தலைவிக்குக் கூறுவாளாய்ப் படைத்து மொழிந்தது.

59 தாழை குருகீனுந் தண்ணந் துறைவனை
மாழை மானோக்கின் மடமொழி-நூழை
நுழையு மடமகன் யார்கொலென் றன்னை
புழையு மடைத்தாள் கதவு.

(சொ-ள்) மாழை மான நோக்கின் மடமொழி-மாவடுவை யும் மான் பார்வையையும் போன்ற விழிகளையுடைய மடமை மொழியுடையாய்; தாழை குருகு ஈனும் தண் அம் துறைவனை-தாழைமரம் கொக்குப்போல வெள்ளியமலர் பூக்கும் குளிர்ந்த அழகிய நீர்த்துறையையுடைய நம் தலைவனை இன்னான் என அறியாது ; அன்னை-நம் தாயானவள் ; நூழை நுழையும் மடமகன் யார் கொல் என்று-புறக்கடை வாயில் வழிவந்து நாளும் மனைப்புகுந்து செல்லும் அறிவிலி யாரோ யான் அறி யேன் என்று கூறி; கதவு புழையும் அடைத்தாள்-கதவிலுள்ள சிறிய துளையையும் அடைத்துப் பூட்டிவிட்டாள் அல்லவா? (இனி நாம் என் செய்வது எனறு தோழி கூறினள்).

(வி.ம்) இது படைத்து மொழி கிளவியாம். தலைவன் விரைவில் வரைய வருதல் கருதிக் கூறியது. சிறைப் புறத்து நிற்குந் தலைவன் கேட்டு இவ்வாறு நம் களவு வெளிப்பட்டது போலும் இனிக்களவொழுக்கம் நிகழவழியின்று. நாம் விரைந்து வரைந்து இல்லறம் நடத்த வேண்டும் என எண்ணுவான் என்று கருதிப் பொய்யாகத் தலைவியுடன் தோழி கூறியது; படைத்து மொழி கிளவி என்பது நடவாத ஒரு செயலை நடந்ததாகத் தானே கற்பித்துக் கூறுங் கூற்றும். தாழை குருகு ஈனுவது போலத் தலைவன் கள்வனுயினுன் என்பது குறிப்பு, கதவிற் பூட்டு அமைப்பதற்குச் சிறிய துளை



யெறியும் அலையானது அலறி யொலிக்கின்ற உருஅ நீர்ச் சேர்ப்பனை-என்னுடன் வந்து கூடாத நீர்மையையுடைய தலைவனை (நம் தலைவனை) உள்ளி இருப்பின்-தனியே அவன் பிரிவை நினைத்திருந்தால் என் முன்கை வளை பொருஅ எனது முன்னங்கை வளையல்களைப் பொறுக்காமல் கீழே வீழ்விக்கின்றன. (நான் என் செய்வேன் என்ருள்.

(வி-ம்) என்னுருயிர்ப் பாங்கியே! நீ ஆற்றியிரு விரைந்து வந்து கூடுவர் என்று கூறுகின்றனை. நானும் ஆற்றியிருக்க நினைக்கிறேன். ஆயினும் அவர் பிரிவைத் தனியேயிருந்து நினைத்தால் உடல் மெலிந்து வளையல்கள் கழன்று விழுகின்றன. நான் எவ்வாறு பிரிவாற்றியிருப்பேன் என்று கூறியதாகக்கொள்க, நினைப்பினும் உடல் மெலிந்து வளை கழல்கின்றன என்ருல் நினையாமல் இருக்கவியலுமா ? தலைவனைக்

காண்பதற்குரிய வழி கூறுக என்பது குறிப்பு. சுருவெறிந்த குப்பை சுழலுங் கழிபோலத் தலைவனால் நலனுண்டு துறக்கப் பட்டுக் குடியுட் சுழல்கின்றனள் தலைவி எனவும், அலைகள் இருல்மீனை வீசி யெறிந்து ஆரவாரஞ் செய்வதுபோலப் பெண்டிர் பலரும் அலர்தூற்றியாரவாரஞ் செய்கின்றனர் என வும் உள்ளுறை கொள்க. அலற என்ற செய எனெச்சத்தை அலறி எனத் திரித்துக் கொள்க, கழியுள் ஓதம் இரைக்கும் சேர்ப்பன் எனவும், உருஅ நீர்ச் சேர்ப்பன் எனவும் தனித்தனி கூட்டுக. மகரமீன் கடலிற் சிறு மீன்களை யெல்லாம் அடித்துக் கொன்று தின்னும்; அம் மீனுக்கு மேற்பட்ட வலிமையுடைய மீன் ஒன்று மின்று; கடல் ஒரு போர்க்களமாக, சுருமீன் ஒரு வேந்தனை மற்றை மீன்கள் எல்லாம் வீரர்களாகப போர் புரிந்து வெல்லும் அது. கல்லாடர் கடலின் சிறப்புக் கூறும் போது "சுறவ வேந்து, நெடும்போர் செய்ய, முழக்கமொடு வளைத்த அமர்க்களமாகியும்" என்றார்: உருஅ-அன்பு பொருந் தாத எனவும் பொருள் கொள்ளலாம்.

(இ-பு) சுரு, சுறவு, சுற எனச் செய்யுளில் வரும். வழக்கிற் சுரு சுறவு எனவரும். இரு என்பதும் அவ்வாறே வரும். தன் னூல் "குறியதன் கீழா" சூ. 172 என்ற விதிகொள்க, 'எறி குப்பை' எறியோதம் வினைத்தொகைகள். உருஅ, பொருஅ



என்பன இசை நிறையள பெடைகள். என் முன்கை வளைபொரு எனக்கூட்டுக. உருஅ: சுறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம். பொருஅ : பல வின்பால் எதிர்மறை வினைமுற்று.

இரவுக்குறிக்கண் தலைமகன் சிறைப்புறத்தானாக நிற்க தோழி தலைவிக்குக்

கூறுவாளாய்ப் படைத்து மொழிந்தது.

59 தாழை குருகீனுந் தண்ணந் துறைவனை
மாழை மானோக்கின் மடமொழி-நூழை
நுழையு மடமகன் யார்கொலென் றன்னை
புழையு மடைத்தாள் கதவு.

(சொ-ள்) மாழை மான் நோக்கின் மடமொழி-மாவடுவை யும் மான் பார்வையையும் போன்ற விழிகளையுடைய மடமை மொழியுடையாய்; தாழை குருகு ஈனும் தண் அம் துறைவனை-தாழைமரம் கொக்குப்போல வெள்ளியமலர் பூக்கும் குளிர்ந்த அழகிய நீர்த்துறையையுடைய நம் தலைவனை இன்னான் என அறியாது ; அன்னை-நம் தாயானவள் ; நூழை நுழையும் மடமகன் யார் கொல் என்று-புறக்கடை வாயில் வழிவந்து நாளும் மனைப்புகுந்து செல்லும் அறிவிலி யாரோ யான் அறியேன் என்று கூறி; கதவு புழையும் அடைத்தாள்-கதவிலுள்ள சிறிய துளையையும் அடைத்துப் பூட்டிவிட்டாள் அல்லவா? (இனி நாம் என் செய்வது என்று தோழி கூறினள்),

(வி.ம) இது படைத்து மொழி கிளவியாம். தலைவன் விரைவில் வரைய வருதல் கருதிக் கூறியது. சிறைப் புறத்து நிற்குந் தலைவன் கேட்டு இவ்வாறு நம் களவு வெளிப்பட்டது போலும் இனிக்களவொழுக்கம் நிகழவழியின்று. நாம் விரைந்து வரைந்து இல்லறம் நடத்த வேண்டும் என எண்ணுவான் என்று கருதிப் பொய்யாகத் தலைவியுடன் தோழி கூறியது: படைத்து மொழி கிளவி என்பது நடவாத ஒரு செயலை நடந்ததாகத் தானே கற்பித்துக் கூறுங் கூற்றும். தாழை குருகு ஈனுவது போலத் தலைவன் கள்வனுயினுன்

என்பது குறிப்பு, கதவிற் பூட்டு அமைப்பதற்குச் சிறிய துளை



யொன்று துளைக்கப்பட்டிருக்கும். அது கண்ணுற் கூர்ந்து வெளியில் நிற்பவரைக் காணவும் உள்ளிருப்பவரைப் பார்க்கவும் உதவியாகும். புழையும் அடைத்தாள் எனவே நீயும் தலைவனும கண்ணுல் நோக்குவதும் இயலாது எனக் குறிப்பிற் கூறியதாம். ''மடமகன் யார்'' எனச் செவிலி பழித்ததாகக் கூறியது அறியாமையால் களவொழுக்கத்தை இன்னும் விரும்புகின்ருய். உன்னை அறிவிலி என்று செவிலியும் பழிக்கின்ருள் என்று தலைமகனுக்கு அறுவுறுத்திற்று. நூழை-சிறுவாயில்-புறக்கடை வாயில். அதன் வழி தலைவன் இரவில் வந்து கூடிக் கலந்து பிரிவது இயற்கை. அதனையறிந்த தோழி இவ்வாறு படைத்து மொழிந்தனள்.

(இ-பு) குருகு உவமையாகுபெயராய்த் தாழைமலரை யுணர்த்தியது. மாழை-மா. இது வடுவினையுணர்த்தியது; ஆகுபெயர். கொல் ஐயப் பொருள் தந்தது. புழையும்-உம் எச்சப் பொருளில் வந்தது.

வினைமுற்றி மீண்டதலைமகன் வரவுகண்ட தோழி தலைவிக்குக் கூறியது

60 பொன்னம் பசலையுந் தீர்ந்தது பூங்கொடி
தென்னவன் கொற்கைக் குருகிரிய-மன்னரை
யோடுபுறங்கண்ட வொண்டாரான் தேரிதோ

கூடலணைய வரவு.

(சொ‌ள்) பூங்கொடி-மலர்மலர்ந்த கொடிபோன்ற தலைவியே! மன்னரை ஓடுபுறம் கண்ட ஒண் தாரான் தேர்-பகை மன்னர் அஞ்சியோடுமாறு வென்று புறங்கண்ட ஒளி பொருந்திய பூமாலை புனைந்தவன் தேரானது; தென்னவன் கொற்கை குருகு இரிய-பாண்டிய மன்னன் கொற்கைத் துறைமேயும் குருகினங்களெல்லாம் இரிந்தோடும்படி, கூடல் அணைய வரவு தேர் இதோ-மதுரையை நெருங்க வந்தது தேர் இதோ காண்; பொன் அம் பசலையும் *தீர்ந்தது*-பொன் போன்ற அழகிய பசலை நோயும் இனி நீங்கிவிடும். (வருந்தாதே என்றாள்).



(வி-ம்) தென்னவனுக்குப் படைத்துணையாகச் சென்றவன் இத்தலைவன் என்று கொள்க. விரைவாகத் தேர்வருகின்றது. அவ்வொலி கேட்டுக் கொற்கைத் துறை மேய்ந்த புள்ளினங்கள் எல்லாம் பறந்தோடியது என்று அதன் விரைவைத் தலைவிக்குக் குறிப்பாற் கூறினள். மதுரையை நெருங்க வருகின்றது. இனி நம்மனைக்கு வந்துவிடும். இதோபார் என்று ஒரு மணல் மேட்டினின்று சுட்டிக் காட்டியதாகக் கொள்க. இனிப் பசலையும் தீரும் என்று கூறவேண்டியதை, *தீர்ந்தது* எனத் துணிவாற் கூறினள். பொன்-பசலை நிறத்துக்கு உவமை. புறங்கண்டபின் புனைந்த வெற்றித்தார் என்பது தோன்ற "ஒண்டாரான்" என்றாள். வினைமுற்றி வெற்றிமாலை புனைந்து வருகின்றான் நம்தலைவன் என மகிழ்ச்சியூட்டினள் தலைவிக்கு.

இதோ என்ற சொல்லுக்கு பார் எனற சொல் வருவித்துக் கொள்க. கூடல் அனைய என்ற பாடததிற்கு மதுரை போல இன்பத்தைத்தரும் அவனுடைய வரவு எனப்பொருள் கொள்க. பூங்கொடி, தாரான தேர், குருகிரிய, கூடல் அணைய, வரவு, இதோ பார் எனக் கூட்டுக.

(இ-பு) பசலையும்-இதில் உம்மை பிரிவாற்றுமைத் துனபந் தீர்ந்ததும் அன்றி என்று பொருள் படலால் எசசவும்மை. பூங்கொடி:உவமையாகுபெயர். தீர்ந்தது:கால வழுவமைதி. வரவு:தொழிற்பெயர். பொன்னம்பசலை. உவமைத்தொகை. பின்னது பண்புத்தொகை. ஓடுபுறம:வினைத்தொகை.

## பாட்டு முதற்குறிப்பு அகரவரிசை

பதினென் கீழ்க்கணக்கு நூல்கள்

திருக்குறள் தெளிவுரை

| | | |
|---|---|---|
| -டாக்டர். மு. வரதராசனுர் | | |
| அட்டைக்கட்டு ரூ. 1·25 கலிக்கா | ரூ. | 1·75 |
| திருக்குறள் பொழிப்புரை | | |
| -கா. சு. பிள்ளை | ரூ. | 2·50 |
| திருக்குறள் பரிமேலழகர் உரை | | |
| கலிக்கா ரூ. 5·00 ரெக்சைன் | ரூ. | 8·50 |
| திருக்குறள் தண்டபாணி விருத்தியுரை | | |
| அறத்துப் பால் மட்டும் | ரூ. | 3·75 |
| நாலடியார் விருத்தியுரை | | |
| -இளவழகனுர் | ரூ. | 4·00 |
| பழமொழி நானூறு உரையுடன் | ரூ' | 4·00 |
| கடுகம் கடிகை மாமூலம் உரையுடன் | ரூ. | 2·75 |
| நானுற்பது உரையுடன் | ரூ. | 2·50 |
| காஞ்சி யேலாதி கோவை உரையுடன் | ரூ. | 2·50 |
| நாலைந்திணை உரையுடன் | ரூ. | 3·75 |
| பதினெண் கீழ்க்கணக்கு மூலம் | | |
| (18 நூல்களும்) கலிக்கா | ரூ. | 4·00 |
| திருக்குறள் மூலம் | ரூ. | 0·75 |
| மேற்படி மிகச்சிறிய அளவு | ரூ. | 0·50 |

